

கலந்தர் மீரா மொஹிதீன்



சையத் முதஹர் சகாபு

சமீபத்தில் தமிழ்நாட்டில் பல ஊர்களில் ஏற்பட்ட வெள்ளங்களில் குறிப்பிடத்தக்க சேதம் அடைந்தவை தஞ்சை, திருச்சி மாவட்டங்கள். அங்கு ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு அனுபவம். பல நல்ல உள்ளங்கள் தங்கள் உயிரையும் மதிக்காது வெள்ளத்தில் சிக்கியவர்களைக் காப்பாற்றப் பாடுபட்டிருக்கின்றனர். திருச்சி ஜமால் முகமது கல்லூரியைச் சேர்ந்த திரு. கலந்தர் மீரா மொஹிதீனும், சையத் முதஹர் சகாபும் அறுபத்தைந்து பேரைக் காப்பாற்றி, தங்கப் பதக்கமும் பெற்றிருக்கிறார்கள். அவர்களுடைய அனுபவம் ரசமானது—

டிசம்பர் 23-ந் தேதி மழையும் காற்றுமாக இருந்தது. ஹாஸ்டலில் நாங்கள் எல்லோரும் இருந்தோம். எங்களுடைய கல்லூரி மேட்டுப்பகுதியில் இருந்ததால் இந்த மழை, காற்று எவ்வளவு அட்டூழியங்களைச் செய்திருக்கிறது என்று அறியாமல் மழையை ரசித்துக் கொண்டிருந்தோம். மதியம் ஒரு

---

எதிர் பக்கம்:

**அறுவடைக்காலம்**

வண்ணப்படம்: **ஓம் சுப்பிரமணியம்**

---

மணிக்கு காஜாமலை மகளிர் சங்கத்தின் செயலாளர் திருமதி ஷரீன் ஷஸ்ரதும், கோமரசம்பேட்டை காவல் அதிகாரி திரு. சந்திரமோஹனும் போலீஸ் வேனில் வந்து இறங்கினர்கள்.

வயலூர் சாலையில் உய்யங்கொண்டான் ஆற்றங்கரை கிராமம் ஒன்று வெள்ளத்தில் சிக்கி இருப்பதாகவும், அந்த மக்களைக் காப்பாற்ற ஆட்கள் உதவிக்கு வேண்டும் என்றும் கூறினர்கள். உடனே நாங்கள் இருவரும் சுமார் இருபத்தைந்து மாணவர்களை அழைத்துக் கொண்டு கிளம்பினோம்.

குறிப்பிட்ட இடத்தை அடைவதற்கு இரண்டு கி. மீக்கு முன்பாகவே சாலையை அடைத்துக் கொண்டு வெள்ளம் பாய்ந்து கொண்டிருந்தது. போலீஸ் வேனின் டிரைவர் கருமமே கண்ணாக மெதுவாக வெள்ளத்தைக் கிழித்துக் கொண்டு ஓட்டி ஒரு மேட்டுப்பாங்கான இடத்தில் நிறுத்தினர். அதற்குள் ஸ்டியரிங் ஜாம்ஆகி மாஸ்டர் சிலிண்டர் உடைந்து விட்டது.

மெதுவாகக் கீழே இறங்கிய நாங்கள் கண்ட காட்சி!

உய்யங்கொண்டான் ஆறு முப்பதடி ஆழத்தில் சுழித்துக் கொண்டு சீற்றத்துடன் ஓடிக் கொண்டிருந்தது. சுமார் 150 அடிக்கு அப்புறம் கிராம மக்கள் வெள்ள நடுவில் மரங்களின் மீதும், கூரைகளின் மீதும் நின்று கொண்டு தங்களைக் காப்பாற்றும்படி எங்களை நோக்கிக் கையாட்டினர்கள்.

அந்தச் சீற்றமான ஆற்றை எப்படிக் கடப்பது? ஒரு கயிற்றை நாங்கள் இருந்த இடத்திலிருந்து அவர்களை நோக்கி வீசிக்

# வெள்ளத்தில் நின்று கொண்டு



காப்பாற்ற எவ்வளவோ முயற்சி செய்தோம். ஐந்துமணி நேரப் போராட்டத்தின் பலன் ஒன்றுமில்லாமல் முடிந்தது. அதற்குள் மாலை வெளிச்சம் போய் இருட்டவும் தொடங்கிவிட்டது. இருட்டில் அவர்களை அப்படியே விட்டுவிட்டால் வெள்ளத்தோடு போய் விடுவார்கள் என்று ஆட்சியர் அலுவலகத்திற்குப் போய் உதவி கேட்க முடிவு செய்தோம்.

நாங்கள் வந்த வேன் பிரயோஜனமில்லை. 'கும்'மிருட்டில் ஒருவர் கையை ஒருவர் பற்றிக் கொண்டு 2 கி. மீ. நீரில் நடந்து கரை சேர்ந்தோம். காஜாமலை மகளிர்மன்ற அங்கத்தினர் எங்களுக்காக அங்கு காத்திருந்தார்கள். மாணவர்களை விடுதிக்கு அனுப்பி விட்டு அவர்களுடன் ஆட்சியர் அலுவலகத்திற்குப் போனோம். அங்கிருந்த கலெக்டரின் பி. ஏ. எங்களுக்கு உதவ முன்வந்தார். 'டெரிடோரியல் ஆர்மி'யிடம் மோட்டார் படகு இருப்பதாக, அவர் மூலமாக அறிந்து அங்கு போனால் அவர்கள் கண்டுகொள்ளவே இல்லை. சாக்குப் போக்குச் சொல்லித் தட்டிக் கழித்து விட்டார்கள். இரவு மணி பத்துக்கு மேல் ஆகிவிட்ட நிலையில் இனி என்ன செய்வது? மிகுந்த மனச்சோர்வுடன் கல்லூரி விடுதிக்குத் திரும்பினோம்.

மறுநாள் காலை ஐந்தரை மணிக்கே கிளம்பி விட்டோம். முந்தைய நாளே வாங்கி வைத்திருந்த ரொட்டிகள் அடங்கிய பெட்டியை எடுத்துக் கொண்டு உய்யங்கொண்டான் ஆற்றங்கரையை அடைந்தோம். அப்போதும் கொஞ்சம் கூட தண்ணீர் வற்றவில்லை. தலையில் ரொட்டிப் பெட்டியை வைத்துக் கொண்டு மீண்டும் அந்த மேட்டை அடைந்தோம். நிலைமையில் எந்தவித முன்னேற்றமும் இல்லை. ஏதாவது மோட்டார் படகு இல்லாமல் எதுவும் செய்ய முடியாது என்பதைப் புரிந்து கொண்டு, ரொட்டிப் பெட்டியை அங்கிருந்த மற்றவர்களிடம் கிராம மக்களிடம் எப்படியாவது சேர்க்குமாறு கூறிவிட்டு ஆட்சியர் அலுவலகம் போக முடிவு செய்தோம்.

திரும்பும் வழியில் ஆற்றில் காற்றடைத்த மோட்டார் படகொன்றை வைத்துக் கொண்டு ரிசர்வ் போலீசார் இருப்பதைப் பார்த்தபோது எங்களுக்கு ஒரே ஆனந்தம். ஒரே எட்டில் நீரைக் கிழித்துக் கொண்டு அவர்களிடம் ஓடினோம். அவர்களிடம் இருந்து கிடைத்த பதில்:

''இந்தப் படகை வைத்துக் கொண்டு இங்கே இருக்கச் சொன்னார்கள். யாரோ ஒரு அமைச்சர் வெள்ளத்தைப் பார்வையிட வருகிறாராம்...''

காலில் விழாத குறையாக அந்தக் கிராம மக்களைக் காப்பாற்ற வேண்டிய போதும் அவர்கள் மசியவில்லை. கடைசியாக அவர்கள் எஸ். பி. யிடமிருந்து எழுதிவாங்கி வந்தால் நாங்கள் வருகிறோம் என்றார்கள். நாங்கள் சாலையை அடைந்து ஒவ்வொரு வீடாகக் கதவைத் தட்டித் தொலைபேசியில் பேச அனுமதி வேண்டினோம். பல தொலைபேசிகள் வேலை செய்யவே இல்லை. சிலர் கதவை மூடிக் கொண்டு விட்டார்கள். கடைசியில் ஒரு பெண்மணி உதவினார். ஆனாலும் பிரயோஜனமில்லை. எந்தப் போலீஸ் உயர் அதிகாரியும் கிடைக்கவில்லை. எல்லோரும் வெள்ளத்தைப் பார்வையிடப் போய்விட்டார்களாம்.

நேரிலேயே போக முடிவு செய்தோம். அவர்கள் நகராட்சி அலுவலகத்தில் வெள்ள நிவாரணக் கூட்டத்திற்காகக் கூடியிருப்பதாகக் கேள்விப்பட்டு அங்கு விழுந்தடித்துக் கொண்டு ஓடினோம். அங்கு எங்கள் கதையைக் கேட்ட ஆர். டி. ஓ. பக்கிரிசாமி அங்கேயே கடிதம் எழுதிக் கொடுத்தார். அதைத் தூக்கிக் கொண்டு படகு இருக்கும் இடத்திற்கு விரைந்தோம். அதற்குள் அவர்கள் குறித்த நேரம் முடிந்து விட்டதால் படகின் காற்றை வெளியேற்றிக் கொண்டிருந்தார்கள். நாங்கள் கடிதத்தைக் காண்பித்தவுடன் மீண்டும் காற்றை நிரப்பிக் கொண்டு எங்களுடன் கிளம்பினார்கள்.

இப்படியாக ஒரு வழியாக உய்யங்கொண்டான் ஆற்றைக் கடந்து விட்டோம். அதற்குப் பிறகும்கூட அந்தக் கிராம மக்களைக் காப்பாற்றுவதில் சிரமம் குறையவில்லை. ஆற்றின் சீற்றத்தில் படகு பலமுறை அறுத்துக் கொண்டு ஓடியது. ஒருவழியாக அந்த அறுபத்தைந்து பேரையும் இக்கரையில் சேர்த்தோம்.

உடலும் உள்ளமும் ஒடித்துப் போட்டாற் போன்ற சோர்வு. இரண்டு நாட்கள் நீரிலேயே நின்று கொண்டு நாங்கள் அனுப்பிய ரொட்டியைச் சாப்பிட்டதாகக் கூறி, தங்களைக் காப்பாற்றியதற்காக நன்றி தெரிவித்தனர். எங்களைக் கண்ணீருடன் தொழுத ஒரு வயதான கிழவியின் முகத்தில் அல்லாவையே கண்டோம். மனம் உற்சாகத்தால் ஆகாயத்தில் பறந்தது.

''இந்தக் கொடுமையான வெள்ளத்தில் நேரடி அனுபவம் பெற்ற நீங்கள் இதற்கு நிவாரணமாக என்ன செய்யலாம் என்று நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டதற்கு,

''தீயணைக்கும் படை அவசரத்தேவைக்கு இருப்பது போல, பல படகுகளை ஒவ்வொரு கலெக்டர் அலுவலகத்திலும் வைத்துக் கொள்ளலாம். எவ்வளவோ செலவு செய்கிறார்கள். இது பெரியதாக இருக்கும் என்று தோன்றவில்லை'' என்றார்கள்.

பேட்டி: **டி. ஆர். ரமேஷ்.**

நர்ஸ் 1: நேற்று பிறந்த தன்குழந்தை பற்றி அந்தத் தமிழாசிரியர் டாக்டரிடம் 'அஃது எப்படி உள்ளது'ன்னு கேட்டாராமே?

நர்ஸ் 2: ஆமா, அது ஆயுத கேஸாச்சே, அதனால்தான்!

—ஜம்பநாத்



# புதியது. பிலிப்ஸ் அளிக்கிறது.



# ஆர்ஜெண்டா ஸூப்பர்லக்ஸ்



## இது ஒன்றே 30% அதிக ஒளிதரும் பால் வெண்மையான பல்பு.

HTB-PEI-6893

### தேவைய்யான இடத்திலே ஒளி

புதிய ஆர்ஜெண்டா ஸூப்பர்லக்ஸ் வீட்டின் கூரை மேலே சிதறி வீணாகும் ஒளியையெல்லாம் திரட்டிக் கீழ்நோக்கி, உங்களுக்குத் தேவையான இடத்தில் பாயச்செய்யும் வகையில் உருவாக்கப்பட்டது. எனவே 30% அதிக ஒளி கிடைக்கிறது. (வீட்டின் உட்கூரை மேலே ஒளி வீணாவதில்லை) பல்பின் கீழ் பாகம், ஒளி நன்கு ஊடுருவும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளதால், செறிவான ஒளியையெல்லாம் குவித்துச் சீராகக் கீழ்நோக்கிப் பாயச்செய்கிறது. எனவே, நேர்த்தியான, துல்லியமான வேலைகளுக்கு—படித்தல், எழுதுதல் ஆகிய வேலைகளைச் செய்ய மிகவும் ஆதாரமானது ஆர்ஜெண்டா ஸூப்பர்லக்ஸ். நிழலும் ஏற்படுத்துவதில்லை. ஆர்ஜெண்டா ஸூப்பர்லக்ஸ். புதிய தொழில்திறம். பொங்கும் ஒளி வெள்ளம்.




பிலிப்ஸ்—ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்

**பிலிப்ஸ்**


மேற்கு வங்க அரசு
மேற்கு வங்க பொருளாதாரம்
மத்திய அரசின் டாம்பீகச் செலவு பற்றிக் குற்றச்சாட்டு


மத்திய அரசு
இந்திய பொருளாதாரம்
மேற்கு வங்க நிதி நிலைமை பற்றி குற்றச்சாட்டு


புலியை அடக்குவது எப்படி?
பஞ்சாப் பிரச்சினை


இலங்கைத் தமிழரிடம் பரிவு


ஜெயவர்த்தனே


புத்த பிட்சுக்களிடம் பணிவு

கல்கி



1984 ஜனவரி 15
ருத்ரோத்காரி தை 1
மலர் : 42 இதழ் : 24



# தை பிறந்தது; வழி பிறக்குமா?

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக! நேயர்களுக்கு நமது புத்தாண்டு, பொங்கல் வாழ்த்து. 'தை பிறந்தால் வழி பிறக்கும்' என்பார்கள். நமது வாசகர்களின் இல்லங்களில் மட்டுமின்றி, தமிழகத்தில் மாத்திரமின்றி, நாடு தழுவிய அளவில் சுபிட்சங்கள் பெருகப் பிரார்த்திப்போம்.

சுபிட்சம் பெருகுவதற்கு முன் இருக்கிற கஷ்டம் தீரவேண்டும். வெள்ளத்தால் பாதிக்கப்பட்டுள்ள தமிழக மக்கள் படும் அவதி கொஞ்சநஞ்சமில்லை. 'வறட்சியைவிட வெள்ளம் தேவலாம்; வெள்ளம் வடிந்ததும் விவசாயம் செழிக்கும்' என்று பொதுவாகக் கூறப்படுவதுண்டு. ஆனால் வெள்ளமே அளவுக்கு மீறும்போது பெருந்துயரமாக முடிகிறது. அறுவடைக்குத் தயாராக நிற்கும் பயிர் அனைத்தும் பாழாவது மட்டுமல்ல, வயல்களில் மணல் மேடிட்டு ஒன்றுக்கும் உதவாமல் போகின்றன. பல ஏரி குளங்கள், ஆறுகள் உடைப்பெடுத்துக் கொண்டதால் மக்கள் சின்னஞ் சிறிய தீவுத் திட்டுக்களில் சிக்கித் தவிக்கிறார்கள். கால்நடைகள் பல்லாயிரக்கணக்கில் மாண்டுபோயின. மடிந்த மக்களின் எண்ணிக்கையும் மிக அதிகமாகவே இருக்கிறது.

செயற்கைக்கோள் உலகைச் சுற்றி வருகிறது; அது ஏதேதோ அற்புதங்களைச் சாதிக்கிறது என்கிறோம். என்ன பயன்? செயற்கைக் கோள் வரப்போகும் புயலை முன்னரே அறிவித்து எச்சரிக்குமே யொழிய கடும் மழையையோ கொடிய வறட்சியையோ தடுத்து நிறுத்த அதனால் முடியாது. முன் ஜாக்கிரதையாக அமைச்சர்களும் அதிகாரிகளும்தான் செயல்படவேண்டும். முன்னேற்பாடுகளை முனைப்புடன் கவனியாது போனால் குடிமுழுகித்தான் போகிறது.

புயல், மழை, வெள்ளம் என்று நாட்டின் பல்வேறு பகுதிகளில் அடிக்கடி சோதனைகள் ஏற்படுவதைத் தவிர்க்க இயலாது என்னும்போது வெள்ள நிவாரணப்பணியில் தேர்ச்சி பெறுமாறு ஒரு படைக்குப் பயிற்சி அளித்தாலென்ன? தீயணைப்புப்படை இருக்கிறதல்லவா, அவர்களையே வெள்ள மீட்பிலும் கைதேர்ந்தவர்களாக்கலாமே! மேல் நாடுகள் பலவற்றில் போலீஸ், தீயணைப்புப் படையினர் போன்றவர்கள் இதுபோன்ற வேறு பல பயிற்சிகளையும் பெற்று நிபுணர்களாகத் திகழ்கிறார்கள்.

தமிழகத்தின் வெள்ள நிவாரணப்பணிக்கு மத்திய அரசின் நிதி ஒதுக்கீடு திருப்திகரமாயில்லை. அய்வாளரை அனுப்பி, சேதங்களை மதிப்பீடு செய்து, உதவித்தொகையை நிர்ணயிப்பதற்குள் பிரளயமே வந்து விடும் போலிருக்கிறது! தமிழகமுதல்வரும் அமைச்சர்களும் அதிகாரிகளும் ராணுவத்தினரும் மீட்புப்பணியிலும் நிவாரணப் பணியிலும் தீவிரமாக ஈடுபட்டு மக்களுக்கு ஆறுதலளித்து வருகிறார்கள். ஆனால்...

"வறட்சி நிவாரணப்பணியில் ஊழல் நிறையவே இருந்திருக்கிறது. அது சரிவர நிறைவேறியிருந்தால் ஆற்றங்கரைகளும் குளம், ஏரிக்கரைகளும் நன்கு பலப்பட்டிருக்கும். இத்தனை உடைப்புக்களும் அதன் விளைவான இத்தனை சேதங்களும் நேர்ந்திருக்காது" என்ற பதினாறு எதிர்க்கட்சிகளின் கூட்டணி அறிக்கை யோசிக்க வைக்கிறது. இதை அரசியலாக்காமல் ஆய்ந்து பார்க்க வேண்டிய கடமை அரசுக்கு உண்டு.

வறட்சி, வெள்ள நிவாரணப் பணிகளில் மக்களுக்கு உதவுவதில் கூட லஞ்ச ஊழல் என்றால் நாம் எந்த அளவுக்குத் தாழ்ந்து, கேவலப்பட்டுப் போய்விட்டோம்! போகிபண்டிகையின் போது வீட்டிலுள்ள குப்பை கூளங்களை அகற்றி எரித்தால் போதாது. தலைவர்கள் தங்கள் உள்ளங்களில் உள்ள மாசுகளை நீக்கிச் சுட்டெரித்து மனங்களைத் தூய்மைப்படுத்திக் கொண்டால் மக்களும் பின்பற்றுவார்கள். நாடெங்கிலும் பால் பொங்கும்.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# சொல் ஒன்று வேண்டும்

## 1

இரவு பதினொரு மணிக்கு மேல் — அந்தப் பங்களாவின் அத்தனை விளக்குகளும் தீவட்டிகளாய் எரிவதும், வாசலில் போலீஸ் 'ஜீப்'பும், பலதரப்பட்ட மனிதர்களுமாய்...

அந்தப் பங்களாவின் சொந்தக்காரரும், உயர் போலீஸ் அதிகாரியுமான, பரந்தாமனையே, கேள்விக் கணைகளால் துளைத்துக் கொண்டிருந்தனர் இரக்கமற்ற போலீஸார்.

''சார்... ஆபீஸ் நேரம் முடிஞ்சதும் உங்க பிள்ளை நேரே வீட்டுக்கு வரல்லியா..''

''தெரியாது. நானும் உங்களைப் போலத்தான். கமிஷனரோட முக்கியமான கேஸ் விஷயமாய்ப் பேசிட்டிருந்தப்பத்தான் எனக்கும் நியூஸ் கிடைச்சது...''

''உங்க மகன், தன் முதலாளி மகன், கிரிதரை குத்திக் கொலை செய்ய ஏதாவது காரணம் இருக்கும்னு நீங்க நினைக்கிறீங்களா... ஐ மீன் அவங்களுக்குள்ளே ஏற்கெனவே பகையோ, பேச்சு வார்த்தையோ...''

''சத்தியமா எனக்கு இதுபத்தியெல்லாம் எதுவும் தெரியாது இன்ஸ்பெக்டர். ஆனா ஒண்ணு மாத்திரம் சொல்வேன்... என் மகன் முரடன். அடிக்கடி சண்டையில மாட்டிக்கற ரகம்... அவன்தான் இந்தக் கொலைக்குக் காரணம்னா... மகன்னு கூடப் பார்க்க மாட்டேன். நாயைச் சுடற மாதிரி சுட்டுத் தள்ளிட்டுத்தான் மறுவேலை பார்ப்பேன்.''

''ஸாரி. என்னதான் ராஜா உங்க மகனாயிருந்தாலும், அவனைச் சுடவோ கொல்லவோ உங்களுக்கு உரிமை இல்லை...''

இந்த வார்த்தைகள் முடியும் முன், கூடத்தையொட்டிய சாப்பாட்டு அறையிலிருந்து பெரிசாய் விம்மல் வெடிக்கிறது. பரந்தாமன், அந்தத் திசையை ஒருகணம் திரும்பிப் பார்த்துவிட்டு, தாடையை அழுந்தத் தேய்த்துவிட்டுக் கொள்கிறார்.

ராஜா....

எங்கே போய்த் தொலைந்தான்....

கொலை நடந்த இடத்தில் அழுத்தமான தடயங்களை விட்டுவிட்டு, கண் மறைவாகியிருக்கும் இவன்...

விஷயம் தெரியாத முட்டாளில்லை. படித்தவன்; பட்டதாரி. இருபத்தியாறே வயது நிரம்பிய இளைஞன். அப்பா பரந்தாமனைப்



போல உயரமும், உருவமும் வாட்டசாட்டமாக அமையப் பெற்றிருந்தாலும்... குணத்தில் நேர் எதிர்.

அப்பா — குற்றங்களைத் தேடிப் பிடிப்பவரென்றால் — மகன் புதுசு புதுசாகக் குற்றங்களை உற்பத்தி செய்பவன்...

இருந்தாலும், இதுவரையில் ஒரு உயிரைக் கொல்லும் அளவுக்கு அவன் மிருகத்தனமாய் நடந்து கொண்டதில்லையே...

ராஜா இருக்குமிடத்தை, அங்கிருந்து எழும் அடி, உதை ஒலியே காட்டிக்கொடுத்து விடும் என்று பரந்தாமனின் நண்பர்கள் சொல்வார்கள்.

இவனை மாற்றும் வழி தெரியாத பரந்தாமன், எல்லாரும் செய்கிற அதே தவறைத் தானும் செய்தார்.

'கல்யாணத்தைப் பண்ணி வைச்சா...படுவா, தானு அடங்கிடுவான்...'

ஆறு மாதங்களுக்கு முன்தான் மகனின் திருமணத்தை நடத்தி வைத்தார். சும்மாயில்லை. சென்னையின் மிகப்பெரிய கல்யாண மண்டபத்தில் கல்யாணம். ரிஸப்ஷனில் பாலமுரளி வெளுத்து வாங்கினார்.

''ஒரு இலை அம்பது ரூபா பெறும்...''

சாப்பிட்டு விட்டு நகர்ந்தவர்களின் மனம் திறந்த சிலாகிப்பு இது...

பரந்தாமனுக்கு மகனைப் பற்றி, உள்ளுக்குள் எத்தனை கசப்பு இருந்தாலும், கல்யாணத்தில் ஒரு குறைச்சலும் வைக்கவில்லை.

அன்று திருமண ரிஸப்ஷனின் போது, மாலையும் கழுத்துமாய் உமாவின் அருகில் நின்றபடி, பாடகரின் மோகனத்தைத் தலையாட்டி ரசித்த அதே ராஜாதான்....

அனுராதா ரமணன்



இப்பொழுது தனது எம். டி.யின் மகனைச் சொர்க்கத்துக்கு ஃபர்ஸ்ட் கிளாஸ் டிக்கெட் வாங்கிக் கொடுத்துவிட்டுத் தலைமறைவாகியிருக்கிறான்.

பரந்தாமனைப் பொறுத்த மட்டில் — ராஜாவின் சுபாவங்கள் அத்தனையும் அவருக்கு அத்துப்படி—

இந்த இருபத்தியாறு வருட வாழ்க்கையில், அப்பாவுக்கும் மகனுக்கும் இடையில் தான் எத்தனையெத்தனை மோதல்கள்!

''ஏண்டா டேய்... இங்கே வா...''

''என்ன...''

''கிளாஸ் பையன்கிட்டேயிருந்து ரூபா திருடினியா?''

''திருடலையே... எடுத்தேன். அவ்வளவு தான்...''

''படவா ராஸ்கல்... செய்யறதையும் செஞ்சுட்டுத் திமிரா வேறப் பேசறியா.... மீனாட்சி, அந்த பெல்ட்டை எடு... எதுக்குடா எடுத்தே... உம்... சொல்லு...''

சிறுவனின் உடம்பில், பெல்ட் சுழன்று, சுழன்று விளையாட, அவன் அத்தனை அடியையும் தாங்கிக் கொண்டு, கல்லுளி மங்கனாய் நிற்கும் காட்சி...

மீனாட்சியின் பெற்ற வயிறு துடிக்கும்...

''சொல்லேண்டா, அடி வாங்கிச் சாகாதே...''

''அந்தப் பணம், அவன்கிட்ட அதிகமா இருந்திச்சு. பாபு ஸ்கூல் ஃபீஸ் கட்ட, பணம் இல்லேன்னான். இவன்கிட்ட 'பத்து ரூபா தாடா. இன்னிக்கு கட்டலேன்னு பேரை எடுத்திடுவாங்க'ன்னு கெஞ்சினான். இவன் தரமாட்டேன்னான். 'சாயந்திரம் ஸ்கூல் விட்டதும், சினிமாவுக்கு ஃபிரண்ட்ஸ் கூடப் போக வேணும்'னான். 'நாளைக்குப் போகலாம் கொடுடா'ன்னு கேட்டேன். 'உங்க அப்பன் வீட்டுக் காசா... தரமுடியாது. போடா'ன்னான். மூஞ்சியிலே நாலு குத்து விட்டுப் பணத்தைப் பிடுங்கித் தந்தேன். இது தப்பா?''

அவனது வார்த்தைகள் முடியும் முன்பே, பரந்தாமனின் பெல்ட் மறுபடியும் அவனுடைய உடலில் விளையாடும். மீனாட்சி கதறித் துடிப்பாள். அவளருகில் நின்றபடி, பேச்சு வராத வாயை அகலத் திறந்தபடி, ராஜா அடி வாங்குவதை நீர் நிரம்பிய விழிகளால் பார்த்துக் கொண்டு நிற்பாள் விஜி...

விஜி — ராஜாவின் அத்தைமகள்.

நினைவு தெரிந்த நாள் முதலாய் மாமாவின் அரிவாள் மீசையையும், சிவந்த கண்களையும், மாமியின் மஞ்சள் பூசிய முகத்தையும், அப்பாவித்தனமானப் பார்வையையும் தவிர — வேறு எதுவுமே அறியாதவள்.

அழகான பெண்ணுக்கு, பேச்சு அநாவசியம் என்று கடவுள் நினைத்தானோ என்னவோ... விஜியைப் பிறவி ஊமையாகப் படைத்து விட்டான்.

''நீ பேசாமே இருக்கறதுதான் உன்னோட ஸ்பெஷாலிடி... பிளஸ் பாயிண்ட்...''

எத்தனையோ நாட்கள், ராஜா, இவளின் சின்ன மூக்கைத் திருகியபடியே சொல்லியிருக்கிறான்.

சின்ன வயசு முதல், இவள் எப்பொழுதும் கையில் சிலேட்டும், சாக்பீசுமாய்த் திரிபவள்... இவளுக்கு வாயும், வார்த்தையும் அவைகள்தான்.

''மாமாகிட்ட அநாவசியமா ஏன் அடி வாங்கறே...''

—இப்படி, அவள் சிலேட்டில் எழுதி ராஜாவை வினவுவதும்...

''சும்மாத்தான். கொழுப்பு.''

இவன், இப்படி பதிலெழுதி, கண்களைச் சிமிட்டிச் சிரிப்பதும்...

இது மாதிரியே காலம் போகக் கூடாதா என விஜி அடிக்கடி நினைப்பது உண்டு.

ராஜாவின் சின்ன வயசுக் குறும்புகள் நாளடைவில் வம்பும் வழக்குமாக உருவெடுத்து, இன்று ஒரு கொலையில் வந்து நிற்கும் பொழுதோ... சமையலறைக் கதவை ஒட்டினாற்போல நின்றுக்கொண்டு, மௌனமாய் அழுவதைத் தவிர இவளால் வேறெதுவுமே செய்ய முடியவில்லையே...

இதோ —

இப்பொழுது கூட, விஸ்தாரமான ஹாலில், கைகளைப் பின்னுக்குக் கட்டியபடி டெபுடி கமிஷனர் பரந்தாமன், கூண்டிலடைக்கப்பட்ட புலி போலக் குறுக்கும் நெடுக்குமாய் நடை பயில...

மீனாட்சி, கைகளைக் குவித்து, மார்பில் பதிய வைத்தபடி, பொறி கலங்கிப்போய்நிற்க...

பூஜையறைக்கும், சமையலறைக்கும் இடைப்பட்ட தாழ்வாரத்தில் நின்றபடி விஜி, தனக்குப் பக்கத்தில் முகத்தை மூடிக் கொண்டு தேம்பும் உமாவையும், பரந்தாமன் தம்பதிகளையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டு நிற்கிறாள்...

ஆரம்பத்தில் அவளுக்கு எதுவும் புரியவில்லைதான்... திடீரென அர்த்த ராத்திரியில் வீட்டைச் சுற்றி, போலீஸ் வளைத்ததும், மாமா முகம் சிவக்க மாமியிடம் கத்தியதும், உமா புகலிடம் தேடும் புள்ளிமான் போல ஓடிவந்து, இவளது தோளில் சாய்ந்ததும்...

'என்ன ஆச்சு...'

விஜி, உமாவின் தோளைப் பிடித்து உலுக்க... அவள் 'ஓ'வென அலற... சமையற்கார அம்மாள், உமாவின் தாலியைத் தொட்டுக் காட்டி, விஜியின் கழுத்தை நெறிப்பதுபோல சாடைகாட்ட...

''பா... பா... பே...''

வார்த்தையில்லா அலறல் விஜியின் தொண்டையிலிருந்தும் புறப்படுகிறது.

அவள், உமாவை இறுக்கி அணைத்துக் கொள்கிறாள். அவளின் கன்னத்தைத் தடவித் தடவி ஆறுதலளிக்க முயற்சி செய்கிறாள்.

ஆறக் கூடிய வருத்தமா இது...

ராஜாவின் குணம், கல்யாணமான இந்த ஆறு மாதங்களில், உமாவுக்குப் பழகிப் போனதுதான்.

அவனை நம்பி சினிமாவுக்குப் போக முடியாது. எந்த இடத்தில், எந்த நேரத்தில், எவன் சட்டையைப் பிடித்து இவன் உலுக்குவான் என்று சொல்ல முடியாது.

''ஏண்டா, பொம்பளை இட்ட வம்பா செய்யறே... நானும் பார்த்துட்டே வரேன். ஒவ்வொரு ஸ்டாப்பிங்லேயும் அந்தப் பொண்ணு மேல மோதறியே... உதை திங்கணும்னு ஆசையா?''

# பெரிய அளவு! மேம்பட்ட சுவை!

சொர்க்கத்தின் சுகம்தன்னைச் சுவைத்திடுவீர்

## நியூட்ரின்

# SuperStar

சுவைமிக்க






தின்னத்தின்ன திகட்டாத மிட்டாய்!




இந்தியாவில் மிக அதிகமாக விற்பனையாகும் மிட்டாய்கள்

நியூட்ரின் கன்பெக்ஷனரி கம்பெனி (பி) லிமிடெட், சித்தூர் ஆந்திர பிரதேசம்

''பிளாக்லே டிக்கெட் விக்கறயா பொறுக்கி நாயே... நடடா ஸ்டேஷனுக்கு.''

''யோவ், இப்ப நீ என்ன சொல்றே... நீயும் பெண்டாட்டி கூட வந்திருக்கே. நானும் பெண்டாட்டி கூட வந்திருக்கேன். ஒண்ணு நீ இந்தப் பக்கம் வந்து உட்காரு... இல்லே, ரெண்டு பொம்பளைங்களையும் சேர்த்து உட்கார வையிங்கறேன். நகரமாட்டேன்னு என்னய்யா அர்த்தம்? மேலே மேலே பேசினே... நான் உன் பெண்டாட்டி பக்கத்துல உட்கார்ந்துப்பேன். சரியா... என் வீட்டுக்காரியப் பத்திக் கவலேயில்லே... அவளை இப்படி ஆம்பிளைங்களுக்கு நடுவுல, சினிமா பார்க்கறதை விட, வீட்டுல நிம்மதியா இருடின்னு பஸ் ஏத்தி விட்டுட்டு வந்திடுவேன்... ஆமா!''

''என்னய்யா, ரெண்டு மசால் தோசை கொண்டு வர இத்தனை நேரமா? இந்த லட்சணத்துல 'ஸ்டார் ஹோட்டல்'ங்கற பெத்த பேரு வேற... எங்கே இந்த டேபிள் சர்வர்? உன்னை என்ன பண்றேன்... கூப்பிடு அவனை...''

நெற்றி நரம்புகள் புடைக்க, கண்கள் சிவக்க, உதடு துடிக்க ராஜா கத்தும் காட்சி...

உமா,நெஞ்சைப்பிடித்துக் கொள்கிறாள்...

காலையில் கூட, பரந்தாமனின் கார் டிரைவர் எத்திராஜுடன் சண்டை. அந்த அமர்க்களத்தில், அவள் எடுத்து வைத்த டிபன் பாக்ஸைக் கூட, எடுத்துக் கொள்ளாமலேயே அவன் ஆபீஸுக்குப் பறந்துவிட்டான்.

அந்த அவசரத்தில், அவன் பின்னாலேயே வாசல் வரையில் ஓடி வந்தவள் — ஏதையோ சொல்ல வந்து, எப்படிச் சொல்வதென ஒரு நிமிஷம் தயங்கி, அவன் மோட்டார்சைக்கிளை உதைத்தபடி இவள்புறம் திரும்பி, 'என்ன' எனப் பார்வையால் விசாரித்த பொழுது, வெட்கித் தலைகுனிந்து....

''உங்களுக்கு ஒரு விஷயம் வச்சிருக்கேன்...''

''என்னது?''

ஊம்ஹூம்... இப்படியெல்லாம்கேட்டா சொல்ல மாட்டேன்...''

''ரொம்பத்தான் பிகக்காரம் பண்ணிக்காதே. நான் விஜியைக் கேட்டுத் தெரிஞ்சுக்கறேன்...''

''விஜிக்குக் கூடத் தெரியாதே...''

''சரி விடு. நான் எப்படியாவது கண்டு பிடிச்சுடுவேன். நான் கூட உனக்கு ஒரு விஷயம் வச்சிருக்கேன். ஸர்ப்ரைஸ்.''

''என்னது...?''

''சாயந்திரம் வந்து சொல்றேன்...''

''ஊம்ஹூம். இப்பவே...''

''முடியாது சண்ணம்மா. அப்பா நம்மை வாட்ச் பண்ணிட்டேயிருக்கார். 'ஏண்டா டேய், போலீஸ் ஆபீசர் பிள்ளையின்னு—ஆபீசுக்கு லேட்டாப் போகணுமா'ன்னு. உறுமுவார். நான் கிளம்பறேன்.''

''ஒரு 'க்ளூ' கொடுத்திட்டுப்போங்க!''

''சாயந்திரம் வெளியே போக ரெடியா இரு...'' —சொல்லிவிட்டுப் போனவன்தான். வரவேயில்லையே...

உமா, விஜியின் மடியில் முகம்புதைத்து அழ, விஜி—தனது அழுகையைத் தொண்டைக் குள்ளேயே சிறை வைக்க...

உமா, காலையில் ராஜாவிடம் சொல்லாமல் பிகு செய்து கொண்ட விஷயத்தை நினைத்தபடி, விஜியின் மெல்லிய கரத்தை எடுத்து, தனது வயிற்றில் வைத்தபடி தேம்ப....

விஜி, விக்கித்துப் போய்விட்டாள்.

இது. எத்தனை மாசம்...

அவளது நீர் நிறைந்த பார்வை உமாவை அளக்கிறது. (தொடரும்)

## செய்தி வெடிகள்

◐ யானையைத் திருடிப் போகிறவர்களுக்கு என்ன தண்டனை கொடுப்பது என்பதற்குச் சட்டத்தில் ஒன்றும் இல்லை. —ஒரு செய்தி.

★ யானையைக் கட்டித் தீனி போட வேண்டுமே! அந்தத் தண்டனை போதாதா?

◐ நடிகையர் திலகம் சாவித்திரி நடித்த 'கைகொடுத்த தெய்வம்' படத்தைப் பார்த்த பிறகே எனக்கு நடிக்க வந்தது என்று ராதிகா என்னிடம் சொன்னார். —டைரக்டர் கே. எஸ். ஜி.

★ ராதிகாவுக்குக் 'கை கொடுத்த தெய்வம்' சாவித்திரிதான் என்று சொல்லவேண்டும்!

◐ போதை மருந்தைச் சாப்பிட்டு வந்த எலிஸபெத் டெய்லர் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டார். —கலிபோர்னியா செய்தி.

★ ரசிகர்களுக்குப் போதை ஏற்றியவருக்கே போதை தேவைப்படுகிறது போலும்!

◐ நின்று போன காரைத் தள்ளுவது போல நடித்து, டிக்கியிலிருந்து ரூ. 50 ஆயிரம் இருந்த பெட்டியைச் சிலர் 'அபேஸ்' செய்தனர். —சென்னை செய்தி.

★ அவர்கள் 'தள்ளிக் கொண்டு போனது' காரையல்ல! ரூ. 50 ஆயிரம் ரொக்கத்தை!

◐ வெள்ளம்! குடியிருப்புகளுக்குள் தண்ணீர்ப் பாம்புகள்! —செய்தித் தலைப்பு.

★ மழை பெய்யா விட்டால் தண்ணீர்ப் பம்புகள்! மழை பெய்து வெள்ளம் பெருகினால் தண்ணீர்ப் பாம்புகள்! இரண்டையும் 'அடிக்க' நாம் கற்றுக் கொள்ள வேண்டியதுதான்!



-மகரம்

**இயற்கையின்**
**சீற்றங்களை எதிர்த்து**
**நிற்பதற்கென்றே**
**தயாரிக்கப்படுபவை**
**ராம்கோ அஸ்பெஸ்டாஸ்**
**சிமெண்ட் தகடுகள்.**

உன்னத தரக்கட்டுப்பாட்டுக்கென நிர்ணயிக்கப்பட்ட எல்லா சோதனை-களையும் இயல்பாகவே கடந்து காலம் முழுதும் கடுமையான தட்பவெப்பச் சூழ்நிலைகளைத் தாங்குமாறு 'ராம்கோ' அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள் உற்பத்தி செய்யப்படுகின்றன. அதிநவீன தொழில் நுட்பம், மிகக் கடுமையான தரக்கட்டுப்பாடு— இவையே "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள் அனைவராலும் தேர்ந்தெடுக்கப்படுவதன் இரகசியம்.

# இயற்கை வலுவேற்றிய உறுதி — இணையற்ற 'ராம்கோ' தரத்தின் தனிப்பாணி



**Ramco**

ராம்கோ அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகளும் மற்ற உபகரணங்களும்- தரமான கூரைகளுக்கு மட்டுமல்ல நிரந்தரமான பாதுகாப்புக்கும் கூட.



சதர்ன் அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் லிமிடெட்
739, அண்ணா சாலை, சென்னை-600 002. போன் : 82006
பரிபூரண விற்பனையாளர்கள் : ராஜா சாரிடி டிரஸ்ட்

CAS SACL 8 83 TAM A

## இதுவரை வளர்ந்துள்ள கதை

திருப்புறம்பயம் போருக்குப் பிறகு அங்கே கோயில் எழுப்புகிறான் சோழ மன்னன் ஆதித்தன்.. திருப்பணியில் பங்கேற்க வரும் சிற்பிகளுள் அபிமானவல்லியும் அவள் தகப்பனும் இருக்கின்றனர். திருப்பணியை மேற்பார்வையிடும் விக்கிரமன்னன் ஆதித்தனின் அன்புக்கும் மதிப்புக்கும் உரிய உயர் அதிகாரி. அவன் அபிமானவல்லியிடம் காதல் கொள்கிறான். ஆனால் திருமணத்துக்கு அனுமதி மறுத்த மன்னன் ஆதித்தன், அவனைச் சேர நாட்டுக்குத் தூதனுப்புகிறான். குஞ்சர மல்லனாகப் பயிற்சி பெற்றுச் சேர மன்னன் தாணு ரவியிடமிருந்து பல யானைகளை வாங்கி வரப் பணிக்கிறான். வடதிசையில் ஆதித்தன் படையெடுத்துப் போனால் பாண்டியரால் சோணாட்டுக்குத் தீங்கு ஏதும் நேராமல் காப்பதாகத் தாணுரவி உறுதி அளிக்கிறான். இச் செய்தியுடனும் யானைகளுடனும் வெற்றிகரமாகத் திரும்பும் விக்கிரமன்னன், இப்போது ராஜநர்த்தகியாக உயர்ந்து விட்ட அபிமானவல்லியின் மாளிகையுள் புக, அங்கே கொலை செய்யப்பட்டிருக்கும் சாத்தனைக் காண்கிறான். விக்கிரமன்னன்தான் கொலை செய்த

**கி.ராஜேந்திரன்**

தாகச் சந்தர்ப்பச் சாட்சியங்கள் அமைய, அவனுக்குத் தண்டனை வழங்கிய ஆதித்தனே அவன் தப்பி விடவும் வழி வகுக்கிறான். நம்பியாண்டார் நம்பியிடம் அடைக்கலம் புகுந்த விக்கியண்ணன், அவர் சீடன்போல நடித்துத் தஞ்சைக் கோட்டையை விட்டு வெளியேறி விடுகிறான்.

நம்பியை வழியனுப்பிவிட்டு வந்த ஆதித்தன், அபிமானவல்லியின் மாளிகையில் அவள் ஓவியங்கள் பலவற்றைக் களவாடியதாகக் கருதப்பட்டவர்களை வதைக்கிறான். ஆனால் வல்லியோ ஓவியங்களைத் தான் பரிசளித்ததாகக் கூறி ஆதித்தனைக் குற்ற உணர்வால் வருந்தச் செய்கிறாள்.

அபிமானவல்லியிடம் ஆதித்தனுக்கே காதல்; அதனால்தான் விக்கியண்ணன் அவளை மணக்க அனுமதி மறுக்கப்பட்டது என்ற வதந்தி பரவ, ஆதித்தனின் பட்டமகிஷி இளங்கோப்பிச்சி பெருந்துயரடைகிறாள். வதந்தியை மெய்ப்பிப்பது போல் ஆதித்தன் நடந்து கொள்ளவும் செய்கிறான். அந்தப்புரத்திலிருந்து சுரங்கப்பாதை மூலம் நள்ளிரவில் வெளியேறுகிறான். அந்தச் சுரங்கப்பாதை எங்கே அவனை அழைத்துப் போகிறது என்று யோசிக்கும் இளங்கோப்பிச்சி கலக்கமடைகிறாள்...



அபிமானவல்லி

## அத்தியாயம் 11

## ஒற்றாடல்

தீப்பந்தத்துடன் சுரங்கப் பாதைக்குள் இறங்கிய ஆதித்தன் இம்மாதிரி காரியங்களில் நன்கு பழக்கப்பட்டவனாகத் தயக்கமோ தாமதமோ இன்றி விடுவிடென்று நடந்தான். பாதை முடிவுறும் தருவாயில் சில படிகள் மேலேறினான். சுவரில் ஒரு கைப்பிடி இருந்தது. அதைப் பலங்கொண்ட மட்டும் ஒரு பக்கமாக இழுத்தான். சுவர் போன்ற அமைப்பிலேயே இருந்த கதவு பக்கவாட்டில் நகர்ந்து கொள்ள, நிலை வாசல் தெரிந்தது. அவ்வாசலை மறைத்துக் கொண்டு பெரிய கற்சிலைகள் இருந்தன. இரண்டுக்கும் நடுவே குறுகலான இடைவெளியில் சற்றுச் சிரமப்பட்டுத் தன் திடகாத்திரமான உடலை நுழைத்துப் பக்கவாட்டிலேயே நகர்ந்து, பின்னர் தாராளமாய் நடந்து கலைக்கூடத்தின் மையத்துக்கு வந்து திரும்பினான். மோகினி வடிவமும் ரதி சிற்பமும் சுரங்கப்பாதையின் கதவு திறந்திருந்த போதிலும் வாசலை முற்றிலும் மறைத்தன. கதவை மூடி விட்டாலோ எவ்வித ஐயப்பாடும் யாருக்கும் எழவே வாய்ப்பில்லை. 'இந்த வடிவழகிகளின் மர்மமான புன்னகையில் ஆழ்ந்த உட்பொருள் இருப்பதை யார் உணரப் போகிறார்கள்? அபிமானவல்லி செதுக்கிய இந்தச் சிலைகளின் எழிலில் சொக்கி நிற்பவர்கள் இவை ஒளித்து வைத்துள்ள ரகசியத்தை எங்கே கண்டுபிடிக்கப் போகிறார்கள்' என்று தனக்குள் சிரித்தவாறே கேட்டுக் கொண்டு கூடத்தில் இங்குமங்கும் நடந்து தீப்பந்த ஒளியில் சுற்றுமுற்றும் தேடினான். ஒரு நீண்டசதுர உயரமான பெட்டியைக் கண்டதும் தான் எதிர்பார்த்து வந்தது கிட்டியது போல் அவன் முகம் மலர்ந்தது. கோட்டை வாசலில் காவலர்களால் அன்று முற்பகலில் கைப்பற்றப்பட்ட அதே பெட்டிதான். அது அவன் ஆணைப்படி அபிமானவல்லியின் மாளிகைக்குத் திரும்பி விட்டது. அதை உடல்நிலை தேறியதும் அந்த வர்த்தகர்கள் எடுத்துப் போக அனுமதியும் வழங்கிவிட்டான் ஆதித்தன். பெட்டியை நெருங்கித் தீப்பந்தத்தைச் சுவரில் இதற்கெனவே அமைந்திருக்கும் வளையங்களுள் ஒன்றில் செருகி விட்டு மூடியைத் திறந்து படங்களை ஒவ்வொன்றாக எடுத்து ஆராய்ந்தான். ஒவ்வொரு ஓவியத்தைப் பார்க்கும்போதும் அவன் முகபாவம் மாறியது. ஒருசமயம் யோசனையாக இருந்தான். ஒரு படத்தைப் பார்க்க மகிழ்ந்தான். இன்னொரு சித்திரத்தைக் காணக் கோபமாகப் புருவங்களை

நெறித்து விழிகளை உருட்டினான். கடைசியில் சற்றுச் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டுத் திருப்தி அடைந்தவனாக மறுபடி சித்திரங்களை எடுத்த வரிசையிலேயே பெட்டிக்குள் அடுக்கி மூடினான். தீப்பந்தத்தைத் திரும்பவும் கரத்தில் ஏந்திக் கொண்டு அடிமேல் அடி எடுத்து வைத்துக் கலைக்கூடத்தை விட்டு வெளியேறினான். மாளிகை ஆள்நடமாட்டமேயின்றி அமைதியாயிருந்தது. வெறுமையாக இருந்த ஓர் அறையையும் பணிப்பெண்கள் சிலர் படுத்திருந்த ஓர் அறையையும் கடந்து சென்றதும் நீண்ட தாழ்வாரத்தில் வரிசையாக நால்வர் படுத்திருப்பது தெரிந்தது. அவன் திருடர்கள் என்று சந்தேகித்துக் கட்டி இழுத்து வந்த அதே நால்வர்தான். காயங்களுக்கு ஔடதம் வைத்துப் பச்சிலை பரப்பிக் கட்டுப்போட்டிருந்ததால் எரிச்சல் அடங்கவும் அசதி மிகவும் அவர்கள் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தனர். ஓரிருவரிடமிருந்து குறட்டை ஒலி பலமாக எழுந்தது. தீப்பந்தத்தை மீண்டும் சுவர் வளையம் ஒன்றில் செருகிவிட்டு அவர்களைப் பூனைபோல் அணுகி, தலையணை அடியிலும் இடுப்பிலும் நெஞ்சிலும் துழாவினான். வெள்ளி, தங்கக் கழஞ்சுகள் கலகலக்காது கவனமாய் இருந்தான். ஒருவனிடம் அகப்பட்ட ஓலை ஒன்றை எடுத்து வந்து தீப்பந்த ஒளியில் படித்தான். அது ஒரு காதல் சடிதம் எனப் புரிந்ததும் சுவாரசியம் இழந்து உதட்டைப் பிதுக்கியவாறே எடுத்த இடத்திலேயே செருகிவிட்டு ஒரு பக்கமாக மூட்டை கட்டி வைக்கப்பட்டிருந்த அவர்கள் உடைமைகளை நெருங்கி முடிச்சை அவிழ்த்து ஆராய்ந்தான். கடைசியாக ஒருக்களித்து இருந்த ஒருவன் இடையைத் துழாவியபோது அவன் புரண்டு கொடுக்கச் சட்டென்று நிழலில் பதுங்கி, திரும்பவும் மறுபக்க இடையை விரல்களால் சோதிக்க, உலோகத்தாலான விடேல் விடுகு இலச்சினை அகப்பட்டது. ஆதித்தன் முகம் பிரகாசமடைந்தது. அதை மீண்டும் எடுத்த இடத்திலேயே பத்திரப்படுத்திவிட்டு எழுந்து நடந்தான். தீப்பந்தத்தை உருவிக் கொண்டு கலைக்கூடத்தை நோக்கி நடந்தான். அதன் நுழைவாயிலை அணுகும்போது உள்ளேயிருந்து வெளிச்சம் பரவுவது போல் தோன்றவே துணுக்குற்றுத் தயங்கினான். கூடத்தை விட்டு 'அவன் தீப்பந்தத்துடன் வெளியேறிய போது அதனை இருளில் ஆழ்த்தியிருந்தான். இப்போது அங்கே ஒளி சிந்துவது எங்ஙனம்? ஒருவேளை அபிமான வல்லியாக இருக்குமோ? தன்னைப்போலவே தூக்கம் பிடிக்காமல் சித்திரம் வரையக்கருதி விளக்கேந்தி வந்திருப்பாளோ? அவ்வாறானால் தான் இந்த மாளிகையில் இப்போது இருப்பதையும் அவள் ஊகித்திருப்பாளா? தன் செயல்களையும் கவனித்திருப்பாளா? எந்த அளவுக்கு? ஒரு கணத்தில் மின்னல்களாகப் பளிச்சிட்ட எண்ணங்களை மனத்திலே அசை போட்டவாறே மெல்ல வாசலை நெருங்கி உள்ளே எட்டிப் பார்த்தான். அபிமானவல்லிதான். நல்லவேளையாக அவள் எதிர்ப்புறம் திரும்பி நின்றிருக்க அவள் முதுகுதான் தெரிந்தது. சட்டத்தில் பொருத்தப்பட்ட திரைச்சீலையில் ஓவியம் வரைவதற்கான ஆரம்பக் கோடுகளை இழுத்துக்' கொண்டிருந்தாள். ஓசையின்றிச் சரேலென்று கூடத்துக்குள் புகுந்துகொண்ட ஆதித்தன் அதே கணத்தில் ''வல்லி'' என்று அன்பு ததும்ப அழைக்கவும் செய்தான்.

ஒளி திடுமென அதிகரித்த உடனேயே திடுக்கிட்ட அபிமானவல்லி தன்னை அழைக்கும் குரலும் கேட்டுத் தூக்கி வாரிப்போடத் திரும்பினாள். தூரிகை எட்டப் போய்விழ, அவள் முகம் பீதியில் பேயறைந்தது போல் வெளிறியிருந்தது. அதைக் காண ஆதித்தன் திருப்தி அடைந்தான். கைதேர்ந்த நாட்டிய மணிதானென்றாலும், இது நடிப்பாக இருக்க முடியாது! இவன் வருகையை ஏற்கெனவே உணர்ந்திருந்தால் இத்தனை கலவரம் அடைந்திருக்கவே மாட்டாள்!

''அப்பாடா நீங்கள்தானா?'' என்று கேட்ட அபிமானவல்லியின் நெஞ்சு தாழ்ந்து இயல்பான நிலைக்கு வந்தது. ''நான் பயந்தே போனேன்'' என்ற அவள் இன்னமும் நடுக்கம் குறையாமல் தவிக்க ஆதித்தன் இழுத்து அணைத்துக் கொண்டான். சீக்கிரமே தன் நிலை பெற்ற அபிமானவல்லி அந்த ஆலிங்கனத்திலிருந்து விடுபட மனமில்லாதவள் போலும். ஆனால் அதிகநேரம் அப்படி களிப்பது தன் தகுதிக்கு மீறிய செயல் எனக் கருதுபவள் போலும் நடந்து கொண்டவளாகக் கைவிரல் நுனி வரை அவனைத் தடவிக் கொடுத்தவாறே விலகினாள். ''பிரபோ! நான்தான் தூக்கமின்றித் தவிக்கிறேன் என்றால் தாங்களுமா? இந்த நள்ளிரவில் சப்ரமஞ்சக் கட்டிலில் ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருக்க வேண்டிய நீங்கள் இங்கே...''

''வல்லி! உன் ரசிகர்களை அவமானப் படுத்தியதன் மூலம் உன்னையும் உன்னதமான உன் கலையையும் கூட இழிவுபடுத்தி விட்டேனோ என்று எனக்கு மனம் பதைத்தது. அந்தப் பரிதவிப்பினால் தூக்கமே வரவில்லை. எப்படியாவது உடனே உன்னை

---

சில ஆண்டுகளுக்கு முன்னர் நூதனமான முறையில் வைரக் கடத்தல் நடந்த செய்தி இப்போது தெரிய வந்துள்ளது. நத்தையின் உடலில் பல உறுப்புக்களில் வைரக் கற்களைப் பதித்து நத்தை ஏற்றுமதி மூலம் வைரக் கடத்தல் செய்தனராம்.

—தெய்வயானை.



வந்து பார்த்து விட வேண்டும் என்று மனம் துடித்தது.''

''மன்னவா! நானும்தான் கோபமாகப் பேசி உங்கள் உள்ளத்தைப் புண்படுத்திவிட்டேனே என்று கவலைப்பட்டு அதனாலேயே தூக்கமின்றித் தவித்துக் கொண்டிருந்தேன். ஓவியம் தீட்டுவதிலாவது மனத்தைச் செலுத்தி நடந்ததை மறக்க முயலலாம் என்று எண்ணி வந்தேன், என் பாக்கியம் நீங்களே வந்து விட்டீர்கள் கவலையைப் போக்க!... ஆனால் மாளிகையின் புறவாசல் கதவுகளெல்லாம் நன்கு தாளிடப்பட்டிருக்கக் காவலும் பலமாயிருக்க எப்படி இங்கே வந்து குதித்தீர்கள் என்பதுதான் புரியாத புதிராகவும் வியப்பாகவும் இருக்கிறது! நான் காண்பது கனவோ என்று கூடச் சந்தேகமாயிருக்கிறது!''

''மந்திரம், மாயம் ஒன்றுமில்லை வல்லி. பகிரங்கமாக உன்னைப் பகல் போதில் காண வந்தால் நாலு பேர் வம்பு பேசுகிறார்கள் என்று சொன்னாயல்லவா? அதனால்தான் யாருக்கும் தெரியாத ரகசிய சுரங்கப்பாதை வழியே வந்தேன்!''

''என்னது!'' என்று மேலும் அதிசயித்தாள் அபிமானவல்லி.

''ஆம் வல்லி! எதற்காக இந்த மாளிகையைத் தேர்ந்தெடுத்து உன்னைக் குடியேற்றினேன் என்று எண்ணுகிறாய்? இந்தக் கலைக் கூடத்திலிருந்து அரண்மனை அந்தப்புரத்தில் என் பள்ளியறையையொட்டியுள்ள கலைக் கூடத்துக்கு ஒரு சுரங்கப்பாதை செல்கிறது. இதோ நீ உருவாக்கிய இந்த ரதியும், மோகினியும்தான் சுரங்கப்பாதைக்கான வழியைத் தங்களுக்குப் பின்னே ஒளித்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் மர்மமாகப் புன்னகைப்பதைப் பார்!''

அபிமானவல்லி தன்னை மறந்து வியப்பும் மகிழ்ச்சியும் மிகச் சிரித்தாள். அவள் அதரங்களைப் பொத்தினான் ஆதித்தன். ''வல்லி! ஆழ்ந்த நித்திரையில் இருப்போரை எழுப்பிவிட அவசியமில்லை. தாழ்ந்த குரலிலேயே பேசுவோம். இந்த ரகசியம் நம்மிருவரையும் தவிர இந்த ரதிக்கும் மோகினிக்கும் மட்டும் தெரிந்திருந்தால் போதும்.. உனக்கு என்றாவது ஏதாவது ஆபத்து நேரும் போலிருந்தால் இவர்களுக்குப் பின்னால் போய் நீ மாயமாய் மறைந்து விடலாம்! ஆனால் ரொம்பப் பெரிய நெருக்கடி ஏற்பட்டாலொழியச் சுரங்கப்பாதையைப் பயன்படுத்தாதே'' என்ற ஆதித்தன் அவள் தோள்களைப் பற்றி நகர்த்தி வந்து மோகினி வடிவத்துக்குப் பக்கத்தில் நிறுத்தினான்.

''வல்லி நீ அழகா அல்லது இந்த மோகினி அழகா.'' என்று கேட்டவாறு அவளை மேலிருந்து கீழாகப் பகுதி பகுதியாக ஆர்வமுடன் ஆராய்ந்தான்.

நீண்ட நேரம் மஞ்சத்தில் படுத்துப் புரண்டு கொண்டிருந்து விட்டுப் பிறகு எழுந்து வந்திருந்ததால் நெகிழ்ந்திருந்த ஆடையும், கலைந்திருந்த கேசமும் கரைந்திருந்த கண் மையும் அவளை மோகிக்கச் செய்து கொண்டிருந்தன. தீப்பந்தத்தின் ஒளி அவள் பட்டுக் கன்னங்களிலும் பளிங்குத் தோள்களிலும் சலனச் சித்திரங்களை வரைந்தது. விம்மிய நெஞ்சகங்கள் ஒரு பெருமூச்சிலே மேலும் எழுச்சி பெற்றபோது சிறுத்த இடை மேலும் மெலிவுற்று நாபிச் சுழியில் படர்ந்த கரும் பொட்டுப் போன்ற நிழலால் மட்டுமே தானிருப்பதைப் புலப்படுத்திக் கொண்டிருந்தது.



''சீக்கிரம் போய்த் தலைவருக்குப் போட ஆளுயர மாலை ஒண்ணு வாங்கி வாங்க...''
''ஆளுயர மாலைன்னா... அமிதாப் பச்சன் அளவா... குள்ளமணி அளவா...''
என். எஸ். வி. குருமூர்த்தி

''பிரபோ! அன்று தாங்கள் வதந்திகளைப் பற்றிக் குறிப்பிட்டு, 'ஏன் அதில் உண்மையும் இருக்கக் கூடாதா?' என்று கேட்டதிலிருந்தே என் மனம் அலைபாய்ந்து கொண்டிருக்கிறது.''

''வல்லி! 'அவகாசம் கொடுங்கள்' என்றாய். 'வேண்டிய நாட்கள் எடுத்துக் கொள்; அவசரமில்லை' என்றேன். ... ஒரு முடிவுக்கு வரமுடிந்ததா உன்னால்!''

''மன்னவா! இது துயரமா மகிழ்ச்சியா என்று புரியாத நிலையில் நான் தவியாய்த் தவிக்கிறேன். விக்கியண்ணனை மறக்க முயலும் போதெல்லாம் என்னை நானே அருவருத்துக்கொள்ளவேண்டுமா, பாராட்டிக் கொள்ள வேண்டுமா என்று புரியாமல் கலங்குகிறேன். அன்பரே! மாளிகை, ராஜ நர்த்தகி என்ற பதவி, பணியாட்கள், செல்வம் எல்லாம் சரிதான்; ஆனால் தங்கள் இதய சிம்மாசனத்தில் இடம் பிடிக்கும் தகுதி எனக்கிருக்கிறதா: அவ்வளவு பாக்கியசாலியா நான்? யோசிக்க யோசிக்க மனக்குழப்பம்தான் அதிகரிக்கிறது!''

''கண்ணே!'' என்று அவள் கன்னங்களைத் தன் உள்ளங்கைகளில் ஏந்தியவாறு ஆதித்தன் ஆறுதலாகக் கூறினான்: ''உன் மனம் தெளிவுறும் வரை நான் காத்திருப்பேன்!''

**பா**தச் சிலம்புகளை ஓசை எழாதிருக்கக் கழற்றி வைத்துவிட்டு ஒரு நுந்தா விளக்கைக் கரத்தில் ஏந்தி அந்தச் சுரங்கப்பாதையினுள் இளங்கோப்பிச்சி தானும் இறங்கினாள். அங்கு சூழ்ந்திருந்த அந்தகாரத்தை விரட்ட முடியாமல் சிறிய சுடருடன் கூடிய நுந்தா

விளக்குத் திணறியது. எனவே மிகுந்த எச்சரிக்கையுடன் அடியெடுத்து வைத்து நடந்தாள். முதலில் படிகளில் கீழே இறங்கிய பிறகு சமதளமாகப் பாதை சென்றது. ஆனால் ஈரக்கசிவு இருந்து கால்களைச் சில்லிடச் செய்தது. அவள் எதிர்பார்த்ததை விடவும் சீக்கிரமே முடிந்து விட்டது சுரங்கப்பாதை. படிகள் மறுபடியும் உயரே அழைத்துப் போயின. பூமியின் மேல்பரப்பில் சாலையோடு போகும்போது சுற்றி வளைத்துச் செல்ல வேண்டிய தூரத்தைப் பூமிக்கடியில் ஒரு நேர்க்கோடாக நடந்து பெருமளவில் குறைத்துவிடலாம் என்பது அவள் கவனத்துக்கு வந்தது. சுரங்கத்தின் முடிவில் வாசல் திறந்திருப்பதையும் சுவர் போலவே தோற்றமளித்த கதவு, தள்ளிப் பக்கவாட்டில் ஒதுக்கப்பட்டிருப்பதையும் பார்த்தாள். சிலா வடிவங்களின் எழிலார்ந்த பின்புறங்கள் தெரிந்தன. மேலே செல்வதா வேண்டாமா என்று தயங்கி நின்ற வேளையில் பேச்சுக் குரல் கேட்டது. உன்னிப்பாய்ச் செவி சாய்த்தாள். சற்று நேரத்துக்கு மேல் பொறுத்துக் கொள்ள முடியாமல் காதுகளைப் பொத்திக் கொண்டாள். வந்த வழியே திரும்பி ஓடினாள். சறுக்கிவிடத் தடுமாறியவள் எப்படியோ விழாமல் தப்பி விரைந்தாள். நுந்தா விளக்கு அந்த வேகத்தில் அணைந்து போனது. சுவர் மீது ஒரு கரத்தைப் பதித்துத் தொட்டுணர்வால் வழிகண்டு சென்றாள். அந்தப்புரத்தை மீண்டும் அடைந்து விளக்கை அதனிடத்தில் வைத்துவிட்டுப் பெருமூச்சுக்களால் நெஞ்ச அலைகள் ஒன்றன் பின் ஒன்றாய்த் தொடர அதே சாய்மானத்தில் வந்து அமர்ந்தாள். பின்னுக்குச் சாய்ந்து கண்களை மூடிக் கொண்டாள். அழுகையாக வந்தது. ஆனால் கண்ணீர் பெருகக் கூடாது. துயரம் நெஞ்சை நிறைத்தது. ஆனால் குமுறலை வெளிக் காண்பித்துக் கொள்ள முடியாது. இரவு நேரங்களில் இனி தனக்குத் தூக்கமென்பதே கிடையாது. ஆனால் இப்போது கூட ஆழ்ந்த நித்திரையில் இருப்பது போலவே தான் நடிக்க வேண்டும்! விம்மவும் முடியாமல் விம்மலை அடக்கவும் முடியாமல் இந்த சித்திரவதையைத் தான் அனுபவித்தே தீர வேண்டும். வாழ்நாளெல்லாம் தொடரப் போகிறதா இந்தப் பெருந் துயர்!

நாழிகை நேரம் சென்றிருக்கும். மறுபடி நறநற வென்று ஓர் ஒலி. சுரங்கப்பாதை மூடப்படுகிறது... தீப்பந்தத்தின் ஒளி. தன் அருகே ஆதித்தன் வந்து நிற்கின்ற உணர்வு. தன் மனம் பதைபதைப்பதை அவர் உணர்ந்து விடுவாரோ? சுரங்கப்பாதையில் அவரை வேவு பார்ப்பது போல் பின் தொடர்ந்து சென்றதைக் கண்டுபிடித்து விடுவாரோ? ஒற்றுடலைத் தெரிந்து கொண்டு விட்டால் அதனால் சீற்றமடைவாரோ? அந்தக் கோபத்தின் பின்விளைவு என்னவாக இருக்கும்? நினைக்க நினைக்க இளங்கோப்பிச்சியின் உடலை நடுக்கம் ஊடுருவியது. அவர் திரும்பிச் செல்கிறார்... தன் உடல் குளிரில் நடுங்கியதாக எண்ணிக் கொண்டாரா? கண்களைத் திறக்கவே அஞ்சினாள். இதோ திரும்பி வருகிறார்! தன் உடல்மீது பட்டாடை போர்த்துவாரா?... கலீர் என்றொரு சத்தம்!

வெலவெலத்து ஒடுங்கிப் போனாள் இளங்கோப்பிச்சி. சந்தேகமேயில்லை! அவள் கழற்றிப் போட்டுப் பிறகு மறந்தே போன பாதச் சிலம்புகளை அவன் அவள் அருகே விட்டெறியும் ஓசைதான். சிலம்பொலி எழுப்பிக் கணவன் கவனத்தைக் கவரவேண்டாம் என்று கழற்றி வைத்தாள். அவையே அவன் கவனத்தைக் கவர்ந்து அவளையும் காட்டிக் கொடுத்து விட்டன!

''பிரபோ!'' என்று அலறித் துடித்து எழுந்து அவன் கால்களைப் பற்றினாள் இளங்கோப்பிச்சி. அவனோ முரட்டுத்தனமாகத் தன்னை விடுவித்துக் கொண்டு பள்ளியறையிலிருந்து, அந்தப்புரத்திலிருந்து, அரண்மனையிலிருந்தே வெளியேறினான். பட்டத்துக் குதிரை அவனைச் சுமந்து கொண்டு நாலுகால் பாய்ச்சலில் பறந்தது. கணத்துக்குக் கணம் அதன் வேகத்தை அதிகரித்துக் கொண்டிருந்தான் ஆதித்தன். அப்போதும் ஆத்திரம் அடங்கினபாடாயில்லை. அந்தப் புரத்திலோ இளங்கோப்பிச்சி தரையிலே துவண்டு இனி அழுகையை அடக்க அவசியமின்றி மாலை மாலையாகக் கண்ணீர் பெருக்கிக் கொண்டிருந்தாள். (தொடரும்)

இங்கிலாந்து ராணி எலிசபெத் சமீபத்தில் இந்தியா விஜயம் செய்தார். அப்போது அவர் தம்முடைய 36-வது திருமண தினத்தைக் கொண்டாடினார். 1947-ஆம் ஆண்டு நவம்பர் 20-ம் தேதி திருமணம் செய்து கொண்ட ராணி; திருமண நாளை இந்தியாவில் கொண்டாடுவது இதுவே முதல் தடவை. மணநாள் அன்று ராணியும், பிரின்ஸ் பிலிப்பும் இரவு 7.30 மணி வரை, ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொள்ள மாட்டார்கள். காலையிலிருந்து மாலைவரை இருவருக்கும் தனித்தனியாக நிகழ்ச்சிகள் இருக்கும். ஆனால், சரியாக 7.30 மணிக்கு ராணியை நேருக்கு நேர் சந்திக்க வந்து விடுவார் இளவரசர். இது இங்கிலாந்து ராஜ குடும்பத்தினரின் பாரம்பரியப் பழக்கம்.

ஆதாரம்: தி வீக்.
தகவல்: ராஜேஸ்வரி.



## ஸுப்ரீம். நீராடும் வேளையிலே நிறைவழகு பேணிடும்.




ஸுப்ரீம் குளியல்...முகம் மட்டுமல்ல, மேனி முழுவதும் அழகில் குளித்தெழும். ஏனெனில், செழுமையான பியூட்டி க்ரீம் கொண்டது ஸுப்ரீம்—செறிவான நுரைமூலமே அதனை உணர்ந்திடுவீர். ஸுப்ரீம். மென்மையுடன் நின்று நிலவும் நறுமணம்...குளித்தபின் வெகுநேரம் வீசும் நல்ல வாசம்.






## ஸுப்ரீம்—பியூட்டி க்ரீம் சோப்

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு

.TB-HLL 8485

# அதிதி



**வீ**தியெங்கும் கோலம் விமாக்கோலம் காட்டியது. ஒவ்வொரு வீட்டுக்குள்ளும் கூச்சல். பண்டிகை மணம். பாருவின் வீட்டுக்கு முன்னால் சின்னதாக ஒரு கோலம்- கொஞ்சம் அவசரமாகப் போட்டுவிட்டுப் போன தோரணையிருந்தது.

அம்மா பூரணம் ஊறிக் கொண்டிருந்தாள். குருவி வால் போல அம்மாவுக்குத் தலைக்கட்டு.

''அம்மா, ஏம்மா கொஞ்சமா பண்றே?''

''ஒனக்கு மட்டுந்தாண்டி...''

''எனக்கு மட்டுந்தான். எனக்கு நெறைய நெறைய...''

''ஒனக்கோசரந்தான் பண்றேன். வேறே ஆரிருக்கா?''

''ஏன் அப்பா?''

''ம்ஹும் அப்பா.''

அம்மா, அப்பாவைப் பற்றி நிறைய சொல்லுவாள். சாப்பிடும்போது, தலைவாரிப் பின்னலிடும்போது, எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டும் போது, தூங்க வைக்கும் போதெல்லாம் அம்மா பாருவுக்கு அப்பாவைப் பற்றித்தான் சொல்லுவாள். கதை, கதையாக. கதை சொல்லுகிறேன் என்று ஆரம்பித்து அப்பாவைப் பற்றித்தான் சொல்லியிருக்கிறாள். அப்பா ஒன்றும் இல்லாமல் போய் விடவில்லை. கூடவே இல்லை. மற்றபடி எப்போதாவது அதிசயமாக, ரகசியமாகவும் கூட – திருட்டுத்தனமாக என்றுதான் அக்கம்பக்கத்தில் பேசிக்கொள்ளும்படிக்கு – வந்து விட்டுப் போவார். இரண்டு வருடமாய் வராமலே இருக்கிறார். பாருவுக்கு ஐந்து வயது முடிந்து விட்டது. அப்பாவைப் பார்த்ததாய்க் கிடையாது. ஆனால் தான் பார்த்திருப்பதாகப் பேசியிருப்பதாக, அது இது என்று தனக்கு அவர் வாங்கித் தந்திருப்பதாகவெல்லாம் சொல்லிக் கொள்ளுவாள். அப்படிச் சொல்லும்படி அம்மாதான் சொல்லிக் கொடுத்திருப்பது....

**விட்டல்ராவ்**

அம்மா கஜவஸ்திரம் பண்ணிச் சாத்தினுள்.

எருக்கம்பூ மாலை ஏறிற்று. தொப்புளில் நாலணுவை வைத்து அழுத்தினுள்.

''அம்மா, அது நேக்குத்தானே, காசு?''

''இப்ப இல்லே... கைலாசத்துக்கு அனுப்பின வாட்டி...''

''ஊஹூம், கைலாசத்துக்கு அனுப்ப வேணும்மா. நம்மாத்திலேயே வச்சிக்கலாம்மா... நானே வச்சிக்கறேம்மா.''

''ச்சீ... ச்சீ... அப்பிடியெல்லாம் சொல்லப்படாது. அவரைப் பத்திரமா மூணு நாள் கழிஞ்சப்புறம் கைலாசத்துக்கு விட்டுடோணும்... தப்பு. வுட்டேன்னு சொல்லிக்கோ.''

''சரி, வுட்டேன்.''

பக்கத்தில் மிகப் பழைய கோயிலொன்றிருக்கிறது. சிதிலமடைந்து விட்டது. பூஜை நின்று போய் நீண்ட காலமாகிறது. ஆற்றையொட்டிக் கட்டப்பட்டது. பெரிய நந்தவனம். அங்கு பூச்செடிகள் இன்னுமிருக்கின்றன. ஒருவேளை ஆறு வரை போயிருக்குமோ பூச்செடிகளின் வேர்கள்... அரளி, அருகம்புல், எருக்கம்பூ, வில்வ இலைகளுக்குப் பஞ்சமேயில்லை. அதிகாலையில் எழுந்து போய்த் தங்கள் வீட்டுக்காகச் சேகரிக்கையில் வெங்கண்ணு அதிலிருந்து கொஞ்சத்தைப் பாருவின் வீட்டுக்கும் கொடுத்து விட்டுப் போனுன்.

**''பா**ரு... ஏய் பாரு. ஒங்கம்மா ரவிக்கை தைச்சாச்சானு கேட்டுண்டு வாடி...'' என்று வெங்கண்ணுவின் சித்தி சொல்லி விரட்டினுள் பாருவை. வந்து கேட்டுவிட்டுப் போய்ச் சொன்னுள்.

''இன்னும் இல்லையாம் மாமி.''

வெங்கண்ணுவின் சித்திக்கு ஏமாற்றத்தால் கோபமேற்பட்டு விட்டது. கொஞ்சம் விர்ரென்றே சொல்லிவிட்டாள்.

''சரி, துணியை வெட்டல்லேன்னு கொண்ணுந்து குடுத்துடச் சொல்லு. டெய்லரண்டையே குடுத்துக்கறேன்.''

மீண்டும் ஓட்டம். ஆனுல் அவளுடைய அம்மா இப்போது ரவிக்கையைத்தான் தைக்க ஆரம்பித்திருந்தாள். தைக்கவேண்டியவை நிறைய இருந்தன. பாபின் பழுதடைந்து போனதால் வெங்கண்ணுவை விட்டு நேற்று தான் புதியதாக பாபின் வாங்கி வர முடிந்தது. வெட்டப்பட்ட ரவிக்கைத் துணிகளும் வெட்டப்படாத கட்டுக்களும், அவற்றுக்கான அளவு ரவிக்கைகளுமாய் முன் அறை நிறைந்து கிடந்தது.

பாருவின் அப்பா, ராமசேஷன் பாருவுக்கு இரண்டு வயதாயிருக்கும் போது தான் அந்தக் காரியத்தைப் பண்ணிவிட்டு ஓடிவிட்டார். கூடவே அந்தக் கோமளத்தையும் கூட்டிக் கொண்டு தான் போய் விட்டார். கோமளம் மிட்டாதார் வீட்டில் சமைத்துக் கொண்டிருந்தவள். மதுரையில் எங்கோ ஒரு பாக்கத்தில் என்னமோ ஒரு கடை வைத்திருப்பதாகத் தெரியும். மாதாமாதம் பாருவின் அம்மாவுக்கு மணியார்டர் வந்து கொண்டிருக்கிறது. கோமளத்தோடு சந்தோஷமாகக் குடித்தனம் நடத்தி வரவேண்டும். அந்த வகையில் இதுவரை எத்தனை குழந்தைகளோ தெரியாது. மணியார்டரில் ஏதுவும் எழுதியிருக்காது. கடிதமும் கிடையாது. விலாசமிருக்கும். எப்போதாவது பாருவின் அம்மா கடிதம் போடுவதுண்டு. பதில் வராது. பதில் வராதென்று தெரிந்து தான் இங்கத்திய சேதிகளுக்காகக் கடிதம் போடுவாள். பாருவுக்கு மூன்றுவது வயதில், ஒருநாள், ஓரிரவில், வந்து இறங்கினுர் ராமசேஷன். மூன்று நாட்களுக்கு — இப்போது பிள்ளையாரை உட்கார வைத்திருக்கும் அறைக்குள்தான் — ஒளிந்து கொண்டிருப்பவன் மாதிரி உட்கார்ந்திருந்தார். விடியற்காலையில் நான்காம் நாள் புறப்பட்டுப் போய் விட்டார். அதெல்லாம் பாருவுக்கு ஞாபகமில்லை.

**ம**றுநாள் பள்ளிக்கூடம் உண்டு. புறப்படும் வரை பாரு பிள்ளையாருடன் பேசிக் கொண்டிருந்தாள். தன் மிஸ்ஸைப் பற்றி வருணித்தாள். அவள் விதவிதமாய் உடுத்து வருவதையெல்லாம் சொன்னுள். தனக்கு ஹாப்பி பர்த்டே அடுத்த மாதம் வரப் போகிறதென்றுள். உனக்கு எப்போ ஹாப்பி பர்த்டே என்று கேட்டாள். பர்த்டேக்கு அம்மாவிடம் சொல்லிச் சட்டை தைத்துப் போடுவதாய்ச் சொன்னுள். ஸ்கேலை எடுத்துக் கொண்டு சொல்லு. ஏ, பி., சி, டி என்று பிள்ளையாருக்கு ஆங்கிலம் கற்றுத் தந்தாள். தப்பாகச் சொல்லி விட்டதற்காக ஆக்ரோஷத்தோடு பிள்ளையாரைக் கடிந்து கொண்டாள். கூச்சல் போடாமலிருக்குமாறு மிரட்டிவிட்டுத் தனக்கு நேரமாகிவிட்டதென்று வெளியேறி விட்டாள்.

பள்ளிக்கூடத்தில் வகுப்பில் எல்லோரிடமும் ஆரம்பித்து விட்டாள்.

''எங்கப்பா ரூமிலேதான் உட்கார்ந்துண்டிருக்கார்...''






''டி. நாளைக்கு சாயங்காலம் அவர் எங்காத்துலேருந்து போய்டுவாராண்டி...''

''எல்லாராத்துலேர்ந்தும்தாண்டி...''

அவளுக்கு அவரை அனுப்பி வைப்பதில் சம்மதமே இல்லை. அந்த சூனியமான அறை தான் ஒரு மூன்று நாளைக்கு எவ்வளவு உயிர்த் துடிப்புடனிருந்தது பாருவுக்கு. அப்பா ரூம், அப்பா ரூம் என்று அம்மா சொல்லிச் சொல்லி அந்த அறைக்குள் தன்னைக் கொட்டம்டிக்க விடாத அம்மா இந்த மூன்று நாட்களில் அந்தக் கட்டுப்பாட்டையே நீக்கியிருந்தது அவளுக்கு எவ்வளவு சுதந்திரமாக இருந்தது. வகுப்பில் ஒவ்வொருவரும் தங்கள் வீட்டுக்கு ஊரிலிருந்து அவர் வந்திருக்கிறார், இவர் வந்திருக்கிறாரென்று பீற்றிக் கொள்ளும் போது பாரு பேசாமல் பார்த்துக் கொண்டிருப்பாள். இப்போது மூன்று நாட்களாகத் தன் அப்பா அறையில் பிள்ளையாரை மணைப் பலகையில் உட்கார வைத்துத் தினமொரு நெய்வேத்யம், பாயசம் பட்சணமென்று பண்ணுவது அவளுக்குச் சொல்ல முடியாத ஆனந்தமாயிருந்தது.

வெங்கண்ணா வந்து விட்டான். அவன் தான் அவரைக் கைலாசத்துக்கு அனுப்பி வைக்கப் போகிறவன். பாரு அவனோடு பேசாது உர்ரென்றே இருந்தாள்.

''வாண்டாம்மா... அவரைக் கைலாசத்துக்கு அனுப்பாதேம்மா. நானே வச்சுண்டு வெளையாடறேம்மா'', என்று சொல்லி விம்மினாள். அம்மா திட்டினாள்.

''அப்பிடியெல்லாம் சொல்லப்படாது.''

''சரி, நானும் கூட வருவேன்...''

''வருவியாம்...''

அவரைக் கொண்டு போய்த் தெப்பகுளத்தில் விட்டு விட்டுத் தொப்புளிலிருந்து எடுத்து வைத்திருந்த நாலணாவைப் பாருவிடம் தந்தான் வெங்கண்ணா. மீண்டும் அவளுக்கு வீடு வெறிச்சோவென்றிருந்தது. அப்பாவின் அறையைப் பார்க்க பயமாயிருந்தது. வெங்கண்ணா வந்து அவளை டி.வி.யில் வனவிலங்குகளைக் காட்டுகிறார்களென்று சொல்லி அழைத்துப் போய் விட்டான்.

இரவு ஒன்பது மணிக்குத் திரும்பி வந்தவள் பிள்ளையார் அறையில் — அப்பா அறையில் புதிய மனிதன் ஒருவன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்ததும் நின்றாள். அந்த அறையின் ஜன்னல்களெல்லாம் சாத்தப்பட்டிருந்தன. அறையிலிருந்த மின் விசிறியைக் கழற்றி முன் அறையில் மாற்றித் தொங்க விடப்பட்டது சமீபத்தில் தான். மேஜை மின் விசிறியை அவருக்காக வைத்திருந்தாள் பாருவின் அம்மா.

''வா... வாம்மா...'', என்றார் அவர் பாருவைப் பார்த்து.

''யாரும்மா?'' என்று குசுகுசுத்தபடி அம்மாவைக் கட்டிக் கொண்டாள்.

''அப்பாடி... அப்பா... போ... கூப்பிடறா!'' என்று மெல்லிய குரலில் சொல்லியனுப்பினாள்.

''அப்பாவா?'' — கத்தினாள் பாரு. கத்தக் கூடாதென்று வாயில் விரலை வைத்துக் காண்பித்தாள் அம்மா.



நிருபர்: நோபல் பரிசு நம்ப நாட்டைச் சேர்ந்த சந்திரசேகருக்குக் கெடைச்சிருக்கே? அதைப் பற்றி உங்கள் கருத்து?

மந்திரி: அவர் எந்தத் துறையிலும் பிரகாசிப்பவர் ஆச்சே! கொஞ்ச நாள் கிரிக்கெட்டுல நல்ல போலரா இருந்தாரு. அப்புறமா கொஞ்சநாள் தமிழ்ப் படங்களில தாடி வெச்சுக்கிட்டு நடிச்சிக்கிட்டு இருந்தாரு. பிறகு கட்சி நடத்திப் பாத யாத்திரை போனாரு. கடைசியா அமெரிக்கா போய் ஆராய்ச்சி பண்ணி நோபல் பரிசு வாங்கிட்டாரு.

—அமுதன் மைந்தன்.

—இதா அப்பா?

''ஏன் இவர் பிள்ளையாரைப் போல இல்லே?''

இருந்தாலும் பரவாயில்லை. இவரும் அப்பா ரூமில்தானே உட்கார்ந்திருக்கிறார், அம்மாவும் அந்த அறைக்குள் போகலாமென்று அனுமதிக்கிறாளே... இவருக்காகவும் அம்மா சுறுசுறுப்புடன் சமையலறையில் பலகாரம், பாயசமெல்லாம் தயாரித்துக் கொண்டிருக்கிறாளே.

—ஹைய்யா, மறுபடியும் வீட்டில் விசேஷம். நாளைக்கு சனிக்கிழமை. அரைவேளை தான் பள்ளிக்கூடம். எல்லாரிடமும் சொல்லிக் கொள்ள வேண்டும் எங்கப்பா வந்திருக்கார் என்று. எங்கப்பாவும் புள்ளையார் மாதிரி அப்பா ரூம்லயே இருக்கார்னு.

அப்பா வந்திருப்பதால், அவரோடேயே இரு என்று சொல்லி, பள்ளிக்கூடம் அரை வேளைதானே, போக வேணும் என்று சொல்லி மட்டம் போட வைத்து விட்டாள் அம்மா. அன்று யாரிடமும் சொல்லிக் கொள்ள முடியவில்லை.

திங்கட்கிழமை விடியற்காலையிலேயே எழுந்து போய் விடவேண்டுமென்றிருந்தார் ராமசேஷன். யார் கண்ணிலும் படாமல், பாருவுக்குச் சட்டைகள், பொம்மைகளெல்லாம் வாங்கி* வந்திருந்தார்.

திங்கட்கிழமையிலிருந்து அப்பா ரூம் மீண்டும் காலியானது.

''எங்கப்பா வந்திருந்தாரே'' — என்று பள்ளிக்கூடத்துக்குப் புறப்படும் முன்பாகவே, தனக்குத்தானே சொல்லி ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்தாள் பாரு. அழைத்துப் போக ஆயா வரும் நேரம் அது

உலாவர ஓர் உலகம்

10

# உலக எழுத்தாளர் மாநாட்டிலே...

தெற்கு ஃப்ரான்ஸில் கடற்கரையை ஒட்டினாற் போல் இருக்கும் நீஸ் நகரம் பாரீஸிலிருந்து மாறுபட்டதாகத் தெரிந்தது. அதிக பசுமையும் சூரிய வெப்பமும், கடற்கரையோடு ஓடும் பிரும்மாண்டமான அழகிய Promenade Des Angl... என்ற சாலையும், சாலை நெடுகக் குட்டைப் பனை மரங்களும் — முற்றிலும் வேறு உலகமாகத் தோன்றிற்று.

இந்தச் சாலையைப் பார்த்தபடி இருந்த மிகப்பெரிய ஹோட்டல் ஒன்றில் எழுத்தாளர் மகாநாட்டிற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். ஹோட்டலுக்… திரில் இருந்த பூங்காவில் சவியரங்கமும் மைதானத்தில் ஷாமியானா போன்ற கூடாரத்தில் துவக்க விழாவும் வேறு சில நிகழ்ச்சிகளும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன.

எங்களுக்காக ஒரு ஐந்து நட்சத்திர ஹோட்டலில் அறைகள் தயாராக இருந்தன. எங்கள் உபயோகத்துக்காக •ஒரு காரையும் வாடகைக்கு எடுத்துக் கொள்ள எக்ஸ்டர்னல் மினிஸ்ட்ரி பாரிஸிலேயே அனுமதி கொடுத்திருந்தது.

நாங்கள் தங்கியிருந்த ஹோட்ட…லிருந்து விழா நடந்த இடம் வெகு அருகில் இருந்தாலும், நடப்பது அந்த அழகிய நகரத்தில் மிக ரம்யமாக இருந்ததாலும் நாங்கள் நடப்பதையே விரும்பினோம். நீஸுக்கு அருகில் இருக்கும் ஊர்களைப் பார்க்கக் காரில் சென்றோம்.

நாங்கள் போய் இறங்கிய மறுநாள் காலையில் விழா நடந்த ஹோட்டல் மெரிடியனில் எழுத்தாளர்கள் ஒருவருக்கொருவர் அறிமுகமாக ஒரு காக்டெய்ல் பார்ட்டி நடந்தது.

பார்ட்டியில் எனக்குத் தெரிந்திருந்த பிரபல ஃப்ரெஞ்ச் எழுத்தாளர்கள் யாருமில்லை. ஃப்ரான்ஸ்வா ஸகான், ஹான் ஸாபின், யூஜீன் யுனெஸ்கோ போன்றவர்கள் வருவார்கள் என்று அவர்கள் வெளியிட்டிருந்த பிரத்யேக விழா விளம்பரப் புத்தகத்தில் இருந்ததால், நான் ஆவலுடன் தேடி ஏமாந்தேன். அவர்களது எழுத்துக்களை நான் படித்திருந்ததால் அவர்களுடன் உரையாட விஷயங்கள் இருக்கும் என்று நினைத்தேன். அங்கு வந்திருந்த எழுத்தாளர்கள் அனைவரும் ஆங்கிலம் அதிகம் தெரியாத பிரபலமாகாத ஃப்ரெஞ்ச் எழுத்தாளர்கள். உலக எழுத்தாளர் மகாநாடு என்ற வார்த்தைக்கு அர்த்தமே இல்லை என்று பட்டது. இவ்வளவிற்கும் அமெரிக்க எழுத்தாளர் எர்ஸ்கின் கால்ட்வெல் சிறப்பு விருந்தினராக அழைக்கப்பட்டிருந்தார்.



○ ஹான் ஸாபின்
நாவலாசிரியர்



○ ஜீட் மிஸ்லா
பாலே நடன நிபுணர்

சுமாராக ஆங்கிலம் தெரிந்த எழுத்தாளர்கள் பிரியமாகப் பேசினார்கள். ஃப்ரெஞ்சில் எழுதும் ஒரு ஆஃப்ரிக்கரும், ஒரு ஹீப்ரு எழுத்தாளரும் நல்ல ஆங்கிலத்திலேயே பேசி மிக சிநேகிதமானார்கள். என் நாவல்களின் கருத்துக்களைப் பற்றி விசாரித்து அக்கறை காட்டினார்கள்.

மகாநாட்டுக்கு சக்கச்சக்க செலவு செய்திருப்பார்கள் என்று தோன்றிற்று. காக்டெய்லில் சிவப்பு வைனும் ஷாம் பெய்னும் தண்ணீர் பட்ட பாடாய் ஓடிற்று. மதியச் சாப்பாடு மிகப் பெரிய ஹோட்டல்களில். ஃப்ரெஞ்சுப் பாணியில் சாப்பாடு வந்த வண்ணமாகவே இருந்தது! தண்ணீருக்குப் பதில் வைன்! முந்நூறு ஃப்ரெஞ்ச் எழுத்தாளர்களை விமான டிக்கெட் கொடுத்து வரவழைத்து ஐந்து நட்சத்திர ஹோட்டலில் தங்க ஏற்பாடு செய்திருந்தார்கள். இந்த எழுத்தாளர் கும்பலில் நிறைய மாஜி டீ.வி., வானொலி, கலைத்துறை, நட்சத்திரங்கள் இருப்பதாகத் தெரிய வந்தது. தங்களுடைய நைந்து போன 'இமேஜ்'ஜைப் புதுப்பிப்பதற்காகவும் தாங்கள் எழுதியிருக்கும் ஒன்றிரண்டு புத்தகங்களுக்கு விளம்பரம் கொடுக்கவும் நீஸ் நகரத்து மேயரின் உதவியுடன் இந்த விழாவை ஏற்பாடு செய்திருக்கிறார்கள் என்று எங்கள் ஆப்ரிக்க நண்பரும் ஹீப்ரு நண்பர் டேவிட் ஷாஹாரும் சொன்னார்கள். அரசியல்வாதியான மேயரின் இமேஜும் இதனால் உயர்த்தப்படும் என்று ரகஸ்யம் சொன்னார்கள்.

○ எர்ஸ்கின் கால்ட்வெல் - நாவலாசிரியர்



— வாஸந்தி



○ பிக்காஸோ உருவாக்கிய சிற்பம் பெண்மணியின் தலை

இதில் நிறைய உண்மை இருக்கவேண்டும் என்று விழாவின் ஆரம்ப நிகழ்ச்சியில்தெரிந்தது. ஏகப்பட்ட புகைப்படக்காரர்கள், டி. வி. காமிராக்கள்.

மேடையில் மேஜை நாற்காலி ஏதுமில்லாமல் விழா நிர்வாகிகள் வெகு இயல்பாக மேடையில் வந்து பேசியது நன்றாக, எனக்குப் புதுமையாக இருந்தது.

புகைப்படக்காரர்களின் பார்வையெல்லாம் வேறெங்கோ பதிந்திருந்தது. முன் வரிசையில் உட்கார்ந்திருந்த ஒரு மிக அழகிய பெண்மணியைச் சளைக்காமல் போட்டோ எடுத்த வண்ணம் இருந்தார்கள். பார்பரா எனக்கு அந்தப் பெண்மணியைப் பற்றிச் சொன்னபோது அசந்து போனேன். லூட்மிலா செரினா என்ற பெயர் கொண்ட அவர் முன்னாள் பாலே நாட்டியக்காரியாம். அவருக்கு வயது அறுபது என்ற போது நம்ப முடியவில்லை. நிச்சயம் 25, 30க்கு மேல் சொல்ல முடியாது. பதினாறு அங்குலமே இருக்கக் கூடிய மிகச்சிறிய இடை. அந்த அளவை எடுத்துக்காட்டும்படியாக நிறைய கொசுவம் வைத்த கவுன் — — சின்னப் பெண்கள் அணிகிற மாதிரி. முகம் பளிங்கு போல் சுருக்கமே இல்லாமல் வழுவழு: கண்களும் நீள இரப்பைகளும் பதினாறு வயதுப்பெண் போல் அலைபாய்ந்த வண்ணமாய்! அறுபது வயது என்று எப்படி நம்புவது? 'ஓ அவருடைய வயது எல்லோருக்கும் தெரியும்' என்றார் பார்பரா சர்வ நிச்சயமாக. ''நிறைய முறை ஃபேஸ்லிஃப்ட் செய்து செய்து இப்படி இருக்கிறார்!''

''ஆனால் இடை! இடையைப் பாருங்களேன்!''

''ஆமாம். மெச்ச வேண்டியதுதான். அவருக்குப் பேரன் பேத்திகள் எல்லாம் இருக்கிறார்கள்!''

''இந்த எழுத்தாளர் மகாநாட்டில் என்ன செய்கிறார் இவர்!''

''தன்னுடைய சுயசரிதம் எழுதியிருக்கிறார். 'கண்ணாடியுடன் காதல்' என்ற தலைப்பு!''

எனக்குச் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது. எத்தனை பொருத்தமான தலைப்பு என்று நினைத்துக் கொண்டேன். கைப்பையிலிருந்து ஒரு சிறிய முகம் பார்க்கும் கண்ணாடியை அடிக்கடி எடுத்து முகத்தைச் சரி செய்து கொண்டிருந்தார் லூட்மிலா நாற்பது வயது மதிக்கத் தக்க ஒரு ஆணுடன் மிக நெருக்கமாக வார்த்தையாடிக் கொண்டே புகைப்படக் காரர்களுக்குப் போஸ் கொடுத்துக் கொண்டிருந்தார்.

உலகத்தின் எந்த மூலையிலும் மனித வக்கிரங்கள் எல்லாம் ஒரே மாதிரியாகத் தான் இருக்கின்றன என்று நான் சிரித்துக் கொண்டேன்.

விழா நிகழ்ச்சிகள் பல இருந்தன. கவி அரங்கம், இலக்கிய விவாதங்கள், டி. வி. நிகழ்ச்சிகள், பேட்டிகள், எல்லாம் ஒரே சமயத்தில் மூன்று நான்கு இடங்களில். யாருக்கு எது விருப்பமோ கலந்து கொள்ளலாம். நட்ட நடு பூங்காவில் கவி அரங்கம் இருந்தது. ஆனால் பொது ஜனங்கள் அதிக ஆர்வம் காட்டவில்லை. கூட்டம் சேரவில்லை. ஃப்ரெஞ்ச் மக்களுக்குக் கவிதையை விட நவீனங்கள் தான் பிடித்தமாம். நான் நாவலாசிரியை என்றதும் அதிக மரியாதையுடன் பிற எழுத்தாளர்கள் என்னுடன் பேசியதைக் கவனித்தேன்! கொட்டகையில் ஒரு பக்கம் டி. விக்காகச் சிலரை பேட்டி கண்டார்கள். ஒரு பக்கம் அறைத் தடுப்புப்போல் செய்து, வந்திருந்த எழுத்தாளர்களின் புத்தகங்களை விற்பனைக்கு வைத்திருந்தார்கள். பொது ஜனங்கள் புத்தகங்களை வாங்கிக் கொண்டு கையோடு அந்தந்த எழுத்தாளர்களின் கையொப்பத்தையும் பெற்றுக் கொள்ளலாம். எழுத்தாளர்களின் நாற்காலிகளுக்கு மேல் அவருடைய பெயர்ப் பலகையை நட்டு

○ பிக்காஸோ



வைத்திருந்தார்கள். ஹூட்மிலாவின் புத்தகத்திற்கு நல்ல கிராக்கி. அவருடைய ஆட்டோகிராஃப் வாங்கிக் கொள்ளும் ஆர்வத்தில்!

விழாவின் இரண்டாம் நாள் யூஜீன் யூனெஸ்கோவும் ஹான்ஸுயினும்வந்து சேர்ந்தார்கள். யூனெஸ்கோவின் நாடகங்களைப் பெரிதும் விரும்பிப் படிக்கும் நான் அவருடன் சம்பாஷித்த சில விநாடிகளில் ஏமாற்றமடைந்தேன். ரொம்பவும் வயதாகித் தள்ளாமையாக இருப்பதால் கோர்வையாகப் பேசாமல் தடுமாறினார். ஆங்கிலமும் தெரியவில்லை. அதற்கு நேர்மாறாக ஹான்ஸுயின் அதிகமான தன்னம்பிக்கையும் துருதுருப்புமாக இருந்தார். நான் அறிமுகப் படுத்தப் பட்டபோது வெகு ஆர்வத்துடன் என்னை அணைத்து அளவளாவினார்.

"நீங்கள் தமிழ்நாட்டைச் சேர்ந்தவரா? எனக்கு ரொம்ப சந்தோஷம். என் கணவர் ஜார்ஜ் ரத்தினசாமியும் தமிழர்!" என்று ஆரவாரமாகத் தன் கணவரிடம் அழைத்துச் சென்று அறிமுகம் செய்து வைத்தார்.

ஹான்ஸுயினின் பெற்றோர்களில் ஒருவர் சீனர். ஒருத்தர் ஃப்ரெஞ்ச். ஜெனீவாவில் வாழும் இந்த எழுத்தாளர் பெரும்பணக்காரர். மேடையில் பேட்டி கண்டவரிடம் சீனப்புரட்சியை ரொம்பவும் ஆதரித்துப் பேசினார்.

அவருடன் பேசும்போது, அவருடைய நாவல்கள் சீன மொழியில் மொழிபெயர்ப்பாகியிருக்கிறதா என்று கேட்டேன்.

"இல்லை" என்றார் சோகமாக.

நியூஸிலாந்திலுள்ள சிறைக் கைதிகளின் 'தரம்' உயர்ந்து அவர்கள் 'நல்ல ரசிகர்களாக' ஆகட்டும் என்ற நல்லெண்ணத்துடன் ஜெயில் வார்டன் ஒருவர், சாஸ்திரீய சங்கீதத்தை அவர்களிடையே அறிமுகப்படுத்தத்திட்டமிட்டார்.

மறுநாளே கைதிகள் அனைவரும் சேர்ந்து "எங்களை ஜெயில் அதிகாரியிடமிருந்து விடுவியுங்கள்" என்று எழுதி அரசாங்கத்துக்கு அனுப்பிவிட்டார்கள்!"

—ஆர். எஸ். சுப்பிரமணியம்.



"நான் பூர்ஷ்வா வகுப்பைச் சேர்ந்தவள்! என் புத்தகங்களைச் சீன அரசாங்கம் அனுமதிக்காது!"

மேற்கில் மிக வெற்றிகரமாகத் தன்னை நிலைநாட்டிக் கொண்டுள்ள இவர் தாம் எழுதும் காதல் நவீனங்களில் அநேகமாய் மேற்கும் கிழக்கும் இணைய வேண்டும் என்ற ரீதியில் இரு துருவத்தையும் சேர்ந்தவர்களைச் சேர்த்து விடுவார். (உ—ம்: Love is a many Splendoured thing)

"மார்க்ட்வெய்ன் சொன்னதை நீங்கள் ஏற்கவில்லை என்று தெரிகிறது. கிழக்கும் மேற்கும் இணைவது சாத்தியம் என்று நீங்கள் நினைக்கிறீர்களா. மேற்கத்திய ஆதிக்கம் அதிகமாக இல்லையா?" என்று கேட்டேன்.

"அதிகம்தான். கிழக்கு தலைநிமிர்ந்து நிற்கப் பழக வேண்டும். நாம் நிமிர்ந்து நின்றால் மேற்கும் நம்மை மதிக்கக்கற்றுக் கொள்ளும். நமது கலாச்சாரங்களைப் புரிந்து கொள்ளும். முக்கியமாக நீங்களும் நானும் நிமிர்ந்து நமது நாட்டின் பெருமைகளை நிலைநாட்ட வேண்டும். இந்திராகாந்தியிடம் எவ்வளவோ குறைகள் இருக்கலாம், ஆனால் எப்படிப்பட்ட முன் உதாரண இந்தியப் பெண்மணியாக உலகத்தாருக்கு இருக்கிறார்!"

இரவு திரு. எர்ஸ்கின் கால்ட்வெல்லுக்கு ஒரு சிறப்பு உபசாரம் நடந்தது. எண்பது வயதுக்கு மேலாகி விட்ட கால்ட்வெல் மிக சிரமப்பட்டு இந்தப் பிரயாணத்தை மேற்கொண்டிருக்க வேண்டும் என்று தோன்றிற்று. நிராதரவாகத் தெரியும் இந்தக் கால்ட்வெல்லா அதி மூர்க்கத்தனத்தை, வன்முறையை, டொபேக்கோ ரோட் போன்ற நாவல்களில் சித்திரித்திருக்கிறார் என்று ஆச்சரியமேற்பட்டது. அவருடைய God's little Acre—ரைப் படித்து இரண்டு நாட்களுக்குத் தூங்காமல் கழித்தது நினைவுக்கு வந்தது.

நான் அவரிடம் என்னை அறிமுகப்படுத்திக் கொண்டு என் வணக்கத்தைத் தெரிவித்தேன்.

"மனிதனை மிருகமாகவே நீங்கள் ஏன் சித்தரிக்கிறீர்கள் — அத்தனை மூர்க்கத்தனத்தோடு?" என்றேன். "அப்படிச் சித்தரிப்பதில் உங்களுக்கு ஒரு மறைமுக சந்தோஷம் இருக்கிறாற்போல் தோன்றிற்று எனக்கு, உங்கள் புத்தகங்களைப் படித்தபோது. நேரில் சாதுவாகத் தெரிகிறீர்கள்!"

கால்ட்வெல் ஒரு தூரப் பார்வை பார்த்தார்.

"சந்தோஷத்தினால் சித்திரிக்கவில்லை. கோபத்தினால் அப்படி எழுதுகிறேன். மிருகத்தை விட மேம்பட்டவர்களாகியிருக்கிறோமா நாம்? நான் பசியையும் ஏழ்மையையும் நிறையப் பார்த்திருக்கிறேன். அவை எவ்வளவு பெரிய பைசாசங்கள் என்று உணர்ந்திருக்கிறேன். அப்படிப்பட்ட பைசாசங்கள் இருக்கும் வரை மனிதர்கள் தேவர்களாக இருக்க முடியாது..."

மேடையில் நின்று அவர் பேசியதை விட என்னிடம் அதிகம் பேசினார் என்று எனக்கு சந்தோஷமேற்பட்டது.



## வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்...
## பற்சிதைவை எதிர்த்திடுவீர்






கோல்கேட்டின் நம்பகமான ஃபார்முலா, சிறப்புடன் செயல்பட்டு நீங்கள் பல்துலக்கும் ஒவ்வொரு முறையும் உங்களுக்கு புத்துணர்ச்சிதரும் தூய சுவாசம் அளிக்கின்றது. பற்களுக்கு ஆரோக்கியமும் உறுதியும் தருகிறது.

எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும் பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச்சென்று உபாதை தரும் உணவுத் துணுக்குகளையும் பாக்டீரியாக்களையும் அகற்றிவிடுகிறது.



பயன்: தன்னம்பிக்கை தரும் இனிய சுவாசம், பற்சிதைவுக்கு எதிராகப் பாதுகாப்பு, உறுதிமிக்க ஆரோக்கியமான பற்கள்.

ஆகவே, சாப்பிட்டு முடிந்தவுடனேயே மறக்காமல் கோல்கேட் டென்டல் க்ரீம் உபயோகித்து பிரஷ் செய்யுங்கள்.

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும்**
**பெப்பர்மென்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது!**

GAGE.B82.86 TM

''குழந்தைகளுக்கான விளையாட்டுச் சாமான்கள் கடையில் ஒரு பொருள் என்னை மிகவும் கவர்ந்தது. ''வானவில் ஹெலிகாப்டர்'' என்று பெயர் சூட்டப்பட்ட அந்த ஹெலிகாப்டர் இலேசான மரத்தினால் செய்யப்பட்டது. இருபது அடி உயரத்திற்குச் சென்று பறந்த இந்த வானவில்லைப் பார்த்து நான் ஆச்சரியமடைந்தேன். இதை நான் பார்த்தது அமெரிக்காவில் ஒரு டிபார்ட்மெண்ட் ஸ்டோரில். ஆச்சரியமடைந்தது எதனால் தெரியுமா? இந்த அற்புத விளையாட்டுக் கருவி இந்தியாவில் செய்யப்பட்டது! கிருஷ்ணகுமார் இந்தியன் எக்ஸ்பிரஸில் எழுதிய கட்டுரையிலிருந்து.

—எம். கே. நாராயணன்.



ஃப்ரெஞ்சு வானொலியைச் சேர்ந்த ஒரு பெண்மணி என்னையும் திரு. சந்துவையும் பேட்டி கண்டு அவர்களது வானொலிக்குப் பதிவு செய்து கொண்டார். என்னுடைய காஞ்சிபுரம் பட்டுப் புடவைகளினால் நான் வெகு விரைவில் அந்த மகாநாட்டில் பிரபலமாகி விட்டேன். தினமும் பாராட்டுக்கள் கிடைத்த வண்ணம் இருந்தன.

கான்ஃபரென்ஸ் அலுத்தபோது நாங்கள் ஊர் சுற்றினோம். நீஸ் கடற்கரையில் ஆணும் பெண்ணும் கூச்சமில்லாமல் படுத்து வெய்யிலில் காய்வார்கள். பெண்கள் உடம்பைக் கருப்பாக்க ஒரு க்ரீமைத்தடவிக் கொண்டு முக்கால் நிர்வாணமாகப் படுத்துக் கொண்டிருப்பார்கள். பாதசாரிகள் கண்டு கொள்ளவே மாட்டார்கள்.

நீஸுக்கு அருகில் மொனக்கோ, மான்டி கார்லோ, கான், ஆன்டீப் க்ராஸ் என்றுபல அழகிய ஊர்கள் இருக்கின்றன. தினமும் ஒவ்வொரு இடமாகக் காரில் போய்ப் பார்த்தோம். கடற்கரை ஓரமாகவே இருக்கும் இந்தச் சிற்றூர்கள் மிக அழகு வாய்ந்தவை. க்ராஸ் என்னும் ஊரில் ஸென்ட் ஃபாக்டரிகள் பிரஸித்தம். ஊருக்குள் நுழைந்ததுமே மலர்களின் வாசனை நாசியைத் துளைக்கிறது

ஆன்டீப் என்கிற ஊரில் மலேமேட்டில் பிக்காஸோவுக்காகப் பிரத்தியேகமான மியூஸியம் இருக்கிறது. நூற்றுக்கணக்கான பிக்காஸோவின் சித்திரங்கள் பிரமிப்பை ஏற்படுத்துகின்றன. பாரிஸ்ஸிலும் ஒரு மியூஸியம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள் பிக்காஸோவுக்காக.

எங்கள் மொழி பெயர்ப்பாளர் பார்பரா ஆஸ்திரேலியாவைச் சேர்ந்தவர். ஒரு ஃப்ரெஞ்சுக்காரரை மணம் புரிந்து கொண்டிருந்தார். இந்திய விஷயங்களில் அவர் பெரிதும் ஆர்வம் காட்டியதால் காரில் செல்லும்போதெல்லாம் அவருக்கு ராமாயணமும் மகாபாரதமும், சொல்லிக்கொண்டு போவேன், ஒன்றும் தெரியாத பள்ளி மாணவிக்குச் சொல்கிறேன் போல. சிக்கியரான திரு. சந்துவுக்கே ஹிந்து புராணக் கதைகள் தெரிந்திருக்கவில்லை. பார்பரா ஒருநாள் நிதானமாகக் கேட்டார்:

''ஆதி சங்கரருடைய தத்துவத்தை எனக்கு விளக்குங்கள். துவைதத்தையும் அத்வைதத்தையும் கொஞ்சம் விளக்கிச் சொல்லுங்கள்!''

(தொடரும்)

அடுத்த வாரம்,

இடைத்தேர்தல் அறிவிப்பாரா இந்திரா?

தேசியத் தலைவர்களின் கருத்துக்கள்



விடுமுறைகளில்,
ஞாயிற்றுக் கிழமைகளில்,
நடுஇரவுகளில் டாக்டர்கள்
வேலை செய்வதில்லை.
ஆனால், இருமல் வேலை செய்கிறதே!




வொ கா ஸி ல்

உங்கள் அருகிலேயே ஒரு டாக்டர்.

Trikaya. PPV. 3.83 TAM

# சில பல

மீ.ப. சோமு



இன்பத் திருநாளாகிய பொங்கல் நன்னாளிலே நேயர்கள் அனைவருக்கும் பொங்கல் வாழ்த்துச் சொல்வதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

சென்னையிலும் மற்ற நவீன நகரங்களிலும் பொங்கல் நன்னாளைப் பல புதிய முறைகளிலே கொண்டாடுகிறோம். தமிழர் திருநாள் என்றும், உழவர் திருநாள் என்றும், காணும் பொங்கல் என்றும், மாட்டுப் பொங்கல் என்றும், சிறு வீட்டுப் பொங்கல் என்றும் அழைப்பதோடு, வள்ளுவர் திருநாளையும் இதையொட்டியே பல இடங்களில் கொண்டாடுவதைப் பார்க்கிறோம். இவையனைத்தும் மகிழ்ச்சிக்கு உரிய மங்கலங்களே!

எனது சிறு வயதில் பார்த்திருக்கிறேன்: கிராமப்புறங்களில் எல்லாக் குடியானவர்களும் அவரவர்களுடைய நிலத்தில் விளைந்ததை, அது சிறுகிழங்கோ (கூர்க்கன் கிழங்கு என்று சென்னையில் இதை அழைக்கிறார்கள்) சேப்பங்கிழங்கோ, சீனிக் கிழங்கு என்ற சர்க்கரை வள்ளிக்கிழங்கோ, கடலையோ ஏதாவது ஒரு விளைச்சலைக் கூடையிலே எடுத்து வந்து, பண்ணையார்களைக் கண்டு தங்கள் பொங்கற்படியாகிய பரிசைப் பெற்றுப் போவார்கள். நெல்லை மீனாட்சிபுரத்தில் எங்கள் குட்டக்கரை வீட்டில் அந்தக் காலத்தில் பெரிய வெண்கலப் பானையிலே முற்றத்தில் வைத்துப் பொங்கல் இடுவதும், பால் பொங்கும் போது பெண்டுகள் குரவை இடுவதும், அதன் பிறகு கிராமத்து உழவர்கள் வரிசை வரிசையாக வந்து நின்று, பொங்கற்படியைச் செலுத்திவிட்டு அவரவருக்குரிய பரிசப்படிகளைப் பெறுவதும் ஒரு கோலாகலமான காட்சியாக இருக்கும்! இப்போது அங்கேயும் புதிய முறையிலான பழக்கங்கள் பழைமையோடு சேர்ந்துள்ளன. எது எதுவானாலும் எப்படியோ ஒரு வடிவத்தில் இந்தத் திருநாள் நாடு முழுவதும் கொண்டாடுவது நமது தமிழகத்தின் சிறப்பு! வேறு மாநிலங்களிலும் சில வேறுபாடுகளுடன் இந்தத் திருநாள் கொண்டாடப்பெறுகிறது!

திருநாளே வேண்டாம் என்று ஒழித்துக் கட்டிவிடாமல், சமுதாயம் என்ற இயந்திரத்திற்கு இவ்வாறு ஆண்டுதோறும் 'ஓவரால்' செய்து, இயந்திர உறுப்புகளுக்கு எண்ணெய் போடுவது வாழ்வின் இயக்கத்துக்கு உகந்ததே ஆகும்! பண்டிகைகள் இல்லாவிடில், 'சர்வீஸ்' செய்யாத மோட்டார் மாதிரிச் சமுதாய இயந்திரம் கெட்டுவிடும்! அதோடு மக்களுடைய உள்ளமாகிய மின்கலத்துக்கு பாட்டரிக்கு, இப்படி அவ்வப்போது 'சார்ஜ்' செய்து மின்னாற்றலைச் செலுத்திக் கொள்ளவேண்டும். சமுதாயப் பண்டிகைகளின் பொருள் பொதிந்த நோக்கம் இதுவே!

பொங்கல் வாழ்த்து என்னும் வாசக முறை இன்றைக்கு ''வணக்கம்'' என்றும், ''பொங்கல் வாழ்த்துக்கள்'' என்றும் நேரிலோ அல்லது தொலைபேசியிலோ சொல்லுகிற சம்பிரதாயமாக இருக்கிறது. அந்தக் காலத்தில், ஏன், இப்போதும் சில கிராமங்களில், பொங்கல் வாழ்த்துக்கு என்று வழிவழியாக வழங்கி வருகிற ஒரு வாழ்த்து முறை பழக்கத்தில் உண்டு. அதாவது அவரவர்கள் வீட்டிலே பொருள்களைத் துடைத்துப் புதுப்பித்து, வீடுகளைக் கழுவி வெள்ளையடித்து, சமுதாயச் சூழலைத் துப்புரவு செய்து விட்டு, முற்றத்திலே பானை ஏற்றிப் பொங்கல் வழிபாடுகளை முடித்து, அதன் பிறகு மக்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கும்போது, பொங்கல் வாழ்த்தை எப்படிச் சொல்லிக் கொள்ளுவார்கள் என்பது ஒரு ரசமான பழைய மரபுத் தமிழ் வாசகம்:

''பாலு பொங்குச்சா?
வயிறு வீங்குச்சா?''

• • •

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு திருநெல்வேலி மாவட்டத்தில் திக்கெல்லாம் புகழும்படியாக வாழ்ந்தான் ஒரு பெரிய திவட்டிக் கொள்ளைக்காரன்! செம்புலிங்கம் என்று பெயர்.

மிகுந்த செல்வாக்கோடு விளங்கிய இந்தத் திருடன், ஏழை எளிய மக்களின் நேசத்தையும் பாராட்டையும் அதிசயமான அளவுக்குச் சம்பாதித்திருந்தான்! அவனைப் பற்றி அழகழகான பல நாட்டுப் பாடல்களை என் சிறு வயதில் நான் கேட்டு அனுபவித்திருக்கிறேன்!

இத்தனை பெருமைக்கும் காரணம் என்ன என்று நினைக்கிறீர்கள்? பணக்காரர்களின் வீடுகளிலே கொள்ளையடித்து அந்தப் பணத்தை ஏழை மக்களுக்குத் தானம் செய்துவிடுவான் செம்புலிங்கம்! இதனால் காட்டுப்புறங்களிலும் குகைகளிலும் குடிசைகளிலும் அவனுக்குப் பாதுகாப்புத் தருவதற்குப் பல மக்கள் இருந்தார்கள்! கடைசியில் அவன் பிடிபட்டபோது அவனுக்காகக் கண்ணீர் வடித்த ஏழை மக்கள் ஆயிரம் ஆயிரம்! அப்படி ஒரு ஏழைபங்காளனாக அவன் இருந்தான்.

''மேட்டு நிலத்தில் உள்ள மண்ணை வெட்டிப் பள்ளத்திலே போடுவது'' என்ற சித்தாந்தத்திலே வாழ்ந்தவன் அவன்! இந்தச் செம்புலிங்கம் எப்படிப் பிடிபட்டிருப்பான் என்று நினைக்கிறீர்கள்? எத்தனையோ முயற்சிகளுக்குப் பிறகு அவனைத் துப்பாக்கியால் சுட்டார்கள். அந்தச் சோக முடிவு ஏற்படுவதற்குக் காரணம் அவனுடைய காதல் விவகாரந்தான்! ஆம்: அவன் பிடிபட்டது கொள்ளை அடிக்கும்போது அல்ல; அவனுடைய காதலியின் வீட்டில் இருந்தபோது!

இத்தனை ஒப்பற்ற புகழோடு செம்புலிங்கம் திகழ்ந்த போதிலும், வரலாறு அவனைத் திருடன் என்றுதான் அழைக்கிறது. செம்புலிங்கத்தைச் சடையப்ப வள்ளலோடு சேர்த்து வைத்து எண்ணுவதில்லை சரித்திரம்! கடைத் தேங்காயை எடுத்துவழிப் பிள்ளையாருக்கு உடைத்தவன் என்றே நீதி தேவனுடைய தீர்ப்பு சொல்லுகிறது!

நல்ல காரியத்தை ஒருவன் செய்தால் மட்டும் போதாது. அந்த நல்ல காரியத்துக்குரிய உபாயமும், கையாண்ட சாதனமும் நல்லவையாக இருக்க வேண்டும் என்பதுதான் நமது நாட்டின் அறம் கூறுகிற நெறிமுறை! இதையே தான் காந்திஜியும் நமக்கு எடுத்துச் சொன்னார். திருட்டுப் பணத்தை நல்ல காரியங்களுக்குச் செலவு செய்வதால், கள்ளத்தனம் நல்லதனம் ஆகிவிடாது!

அறன்ஈனும்; இன்பமும்
ஈனும்; திறன் அறிந்து
தீதின்றி வந்த பொருள்!

என்பது திருவள்ளுவரின் வேதம்.

'நாய் விற்ற காசு குலைக்குமா?' என்று கேட்கலாம். குலைக்காது. ஆனால் ஊளை இடும். வரலாற்றில் நின்று உரக்கவே ஊளை இடும்! பசுவைக் கொன்று செருப்புத் தானம் செய்கிற கதை அது!

• • •

''விடுகதை என்று இன்று அழைக்கிறோமே, அது பழங்காலத்தில் இருந்ததா?'' — மதுரையிலுள்ள மாணவி, பத்து வயதுச் சிறுமி சித்திரா எழுதிக் கேட்டிருக்கிறாள்.

சித்திரா பெரிய பெண்ணாக வளர்ந்ததும், 'தொல்காப்பியம்' என்று அழைக்கப்பெறுகிற தமிழ் இலக்கண நூலை எடுத்து, ''ஒப்பொடு'' என்று தொடங்குகிற சூத்திரத்தைப் பார்க்க வேண்டும் என்று விரும்புகிறேன். இப்போதைக்கு அவள் தன்னுடைய தமிழ் ஆசிரியையிடம் ''பிசி'' என்ற பழைய தமிழ்ச் சொல்லுக்கு என்ன பொருள் என்று கேட்டால், அதுதான் விடுகதை என்று ஆசிரியை சொல்லுவார். விடுகதைக்கு அந்தக் காலத்தில் ''பிசி'' என்று பெயர். தொல்காப்பிய உரையிலே வருகிற ஒரு மிகப் பழைய விடுகதையைச் சித்திராவுக்குச் சொல்லட்டுமா?

'பிறை கவ்வி மலை நடக்கும்' — இதுஎன்ன?

இது மீனாட்சி கோயிலிலுள்ள ஆனை! ஒரு மலையானது பிறைச் சந்திரனைக் கவ்விக் கொண்டு நடக்கிறது! பிறை போன்று வளைந்துள்ள தந்தக் கொம்புகளோடு ஆனை நடந்து செல்கிறது அல்லவா! அதுதான் ''பிறை கவ்வி மலை நடக்கும்!'' எப்படி இருக்கிறது தொல்காப்பிய விடுகதை?

தமுக்கம் என்பது 'தமுகமு' என்ற தெலுங்குச் சொல்லின் திரிபு. தெலுங்கில் 'தமுகமு' என்றால் விளையாட்டுப் பார்வை மண்டபம் என்றுபொருள். இவ்விளையாட்டுப் பார்வை மண்டபம், பல தூண்களையும், வளைவுகளையும், உடையதாய், நடுவில் கவிந்த குடை வடிவில் விதானம் ஒன்றையும்பெற்று, பல்வகைப் போர் நிகழ்ச்சிகளைக் கண்டு களிக்கும் வசதி கொண்டதாக அமைந்திருக்கும். இத்தகைய தமுக்கம் ஒன்றினை மதுரை நகரில் கி.பி.1670ல் அரசி மங்கம்மாள் கட்டினார்.

—பிஸ்மி ஹாஜா நஜிருதீன்.








"பொங்கல் வாழ்த்து டிசைனுக்காக அந்த நடிகையைக் கரும்பு தின்னுவது போல் போஸ் கொடுக்கச்சொன்னது தப்பாப் போச்சு."

"ஏன், என்ன ஆச்சு?"

"கரும்பைக் கடித்த போது பல் செட் உடைந்து விட்டதாம். நஷ்டஈடு கேட்கிறாள்."



"ஏன் அந்த நடிகையைக் கர்வம் பிடித்தவள் என்று சொல்றே?"

"பின்னே என்ன? பொங்கல் வாழ்த்து டிசைனுக்காக மண்பானையில் பொங்கல் பொங்குவது போல் போஸ் கொடுக்கச் சொன்னால் என் இமேஜ் கெட்டு விடும் என்று வெள்ளிப் பாத்திரம் தான்வேண்டும் என்கிறாள்."

# பொங்கலோ! பொங்கல்

"ஏன் அவர் பெண்டாட்டி அவர் கழுத்தில் மாலை போட்டு அவர் முன் பொங்கலை வைத்துப் படைக்கிறார்?"

"அவர் அந்தக் குடும்பத்துக்காக மாடா உழைக்கிறேன் என்று சொன்னாராம். இன்னைக்கு மாட்டுப்பொங்கலாச்சே."

—அரியநாச்சி ரத்னவேலு.






"உங்க வீட்டு முன்னே இரண்டு சாம்பல் குப்பையிருக்கே! இரண்டு போகி கொளுத்தினீங்களா?"

"இல்லே ஒண்ணு தான். மற்றது என் கணவர் புகைத்த சிகரெட்டுகளின் சாம்பல்!"



மாமனார்: ''மாப்பிள்ளே! பொங்கலுக்கு மோதிரமா அல்லது ரிஸ்ட் வாட்ச்சா எது வாங்கித் தரச்சொல்றே?

மாப்பிள்ளை: அது எதுவும் வேண்டாம். ஒரு மிக்ஸி வாங்கிக் கொடுங்க போதும். மாவு அரைக்க முடியாம சாவறேன்!



வக்கீல்: பொங்கல் அன்னிக்குச் சாராயக்கடை கைகலப்புல எதிரி உன்னே எத்தனே தடவை குத்தினுர்னு சரியாச் சொல்ல முடியுமா?

வாதி: சரியா கவனமில்லீங்களே...

வக்கீல்: அட ஒரு குத்துமதிப்பாச் சொல்லேன்!



அவர்: என்ன சார், பொங்கல் சிறப்பிதழ்ல வழக்கமான உங்களோட கரும்பு, சர்க்கரைப் பொங்கல் பத்தி ஜோக்ஸ் எதுவும் காணோம்?

எழுத்தாளர்: எனக்கு இப்போ டயபடீஸ். இனிப்பே கூடாதுன்னு டாக்டர் உத்தரவு.

# சிரிப்போ சிரிப்பு



''தை பிறந்ததும் சுயம்வரப் திறையா நடக்குதுசரி. ஆனு இளைஞர் களை எல்லாம் போலீஸ் ஏன் கடுமையா சோதனே போடறாங்க:''

''துப்பாக்கி பதுக்கி எடுத்து வந்திருக்காங்களோன்னுதான். எல்லாருமே பிரம்மச்சாரிகளாச்சே!''

- ஜம்புநாத்.



''கண்டேன்! கண்டேன்!! கண்டேன்!!!''

''அப்படி என்ன காணுததைக் கண்டு விட்டீர்கள்?''

''பொங்கலில் நாலு முந்திரிப் பருப்பு!''





## 24

உள்ளே நுழைந்தவனைப் பார்த்துச் சுந்தரி கண்களை விரித்தாள்.

''பாலாவா? என்ன அதிசயம் இது? வழி தவறி வந்திட்டியா? அக்காவ மறந்திட்டேன்னு இல்லே நினைச்சேன்!''—

''மாமா வந்திட்டாராக்கா?''—

''இப்பத்தான் மாடிக்குப் போனரு... காப்பி சாப்பிடறியா?''—

''ம்... நீயும் மாடிக்கு வறியா? உங்கிட்டக் கொஞ்சம் பேசணும்''

சில நிமிஷங்களில் சுந்தரி இரண்டு டம்ளர் காப்பியுடன் மாடி அறைக்கு வந்த போது ஆறு மணிக்கெல்லாம் நர்ஸிங் ஹோமை விட்டு பாலாஜி வந்து விட்டதைக் குறித்துக் குருமூர்த்தி கேலி பண்ணிக் கொண்டிருந்தார்.

''நல்லாக் கேளுங்க... உரைக்கற மாதிரி; கூடப் பிறந்தவ நான் ஒருத்தி இருக்குறதுகூட தெரியாம எந்த உலகத்துல வாசம் பண்ணிகிட்டிருக்கான்னும் கேளுங்க...''

விளையாட்டாக இல்லாமல் சற்று கோபமாகவும் அக்கா பேசுவது புரிய, பாலாஜி சிரித்து மழுப்பப் பார்த்தார்.

''நர்ஸிங் ஹோம்ல வேலை ஜாஸ்திக்கா... நோயாளிங்களைப்பார்த்து முடிக்கவே ஏழரை, எட்டு ஆயிடுது... அப்புறம் களைச்சிப் போயிடறதால...''

அவரை முடிக்க விடாமல் சுந்தரி குறுக்கிட்டாள்.

''அக்காவப் பார்க்க வர, அவளோட பேசத்தான், வேலை, களைப்பு எல்லாம்... அந்தப் பொம்பளையோட சிரிக்க, விளையாட, வெளில போக ஒண்ணும் இல்லே, அப்படித்தானே?''—

பாலாஜியின் காதுகள் சட்டென்று சூடேறின.

''எந்த பொம்பளைய சொல்றக்கா?''—

''வேற யாரு? சாந்தியத்தான்....''

ஓ! இவர்கள் வரையில் விஷயம் வந்து விட்டதா?

நேரடியாய் மனைவி கேட்டு விட்டது சங்கடத்தைத் தர, ''அது வந்து பாலா, அவ என்ன சொல்றான்னு'' என்று குருமூர்த்தி சமாதானம் செய்ய முற்பட,

''நீங்க சும்மா இருங்க. ஊர் பூராவும் ரம்ம பின்னால சிரிக்குதுன்ற விஷயம் அவனுக்குத் தெரியக் கூடாதுன்னு இன்னும் எத்தனை நாள் மூடி வைக்கிறது? நானும் பத்துப் பதினைஞ்சு நாளா போன்ல நாசூக்காச் சேதியச் சொல்லி, விழிப்பா நடந்துக்கத் தம்பினு எச்சரிக்கப் பார்க்கறேன்... எங்கே? ஆட்டாதானே! ஆனா சிக்கலியே... அதான் இன்னிக்குப் பொறுக்க முடியாம போட்டு உடைச்சிட்டேன்'' என்றாள் சுந்தரி அவசரமாய்...

# மாலையில் பூக்கும் மலர்கள்

பாலாஜி பார்வையை நிமிர்த்தி அக்காவை அழுந்த எறிட்டார்.

இனியும் தயங்குவதில் அர்த்தம் இல்லை என்று நிதானமாகப் பேசினார்.

''இது சம்பந்தமா உங்கிட்டே பேசத்தான் நான் இப்போ வந்திருக்கேன்க்கா...''

''எது சம்பந்தமா?''—

''சாந்தி சம்பந்தமா...''

''இதுலே பேச என்ன இருக்கு பாலா? கௌரி இல்லாத சூழ்நிலையைத் தனக்குச் சாதகமாக்கிட்டு அவ நுழையறது இப்ப வாச்சும் உனக்குப் புரிஞ்சா சரி... முதல்ல அந்தச் சனியனை வேலைய விட்டு நிப்பாட்டிட்டு, ஒரு ஆம்பிளை ரிஸப்ஷனிஸ்ட் வைச்சிக்க... அப்பத்தான் இந்த ஊர் வாயை மூட முடியும்... என்ன?''

இப்படி தான் சொல்வதையே சொல்லும் பழக்கத்தை அக்கா எப்போது விடப் போகிறாள் என்று எழுந்த எரிச்சலை நகங்களை



சிவசங்கரி

அரை நிமிஷம் ஆராய்ந்தபடியே அடக்கியவர், மென்மைக் குரலில் கேட்டார்.

''ஊர் வாயை அடக்க வேற வழி எதுவும் இருக்கறதா உனக்குப் படலியாக்கா?''

''என்ன சொல்ற நீ?''—

''சாந்திய நான் கல்யாணம் பண்ணிக்கிட்டாலும் இந்த வம்பு பேச்சு அடங்கிடும் இல்லியா?''—

''எ... என்னது! என்னது!''

''பதற்றப்படாம கேளுக்கா... வம்பு பேசறவங்க வாய அடைக்கணும்னு மட்டும் சாந்திய நான் கட்டிக்க விரும்பலே... ஐ லைக் ஹெர் எ லாட்... அப்புறம்...''

''பாலா.. சுந்தரி அதட்டலாய்க் கத்தினள்.

''மூளை கீளை பெரண்டு போச்சா உனக்கு? என்ன பேசறோம்ற உணர்வோட தான் பேசறியா? கௌரி செத்து இப்பத்தான் ஒரு வருஷம் பூர்த்தி ஆயிருக்கு; அதுக்குள் னாறவா? என்ன ஆச்சு உனக்கு பாலா?''

''எனக்கு ஒண்ணும் ஆகலே... ஆனு சுத்தி இருக்கறவங்கதான் என்னை நிம்மதியா இருக்க விட மாட்டேன்கறாங்க... ஒரு அழகான ஸ்னேகிதத்தை ஆரோக்யமா வளர விடாம, கிள்ளி எறியப் பாக்கறாங்க. அதான் எனக்கு எரிச்சலைக் கொடுக்குது...''

''பாருங்க இவனை! தத்துப் பித்துனு என்னமோ உளர்றான், நீங்களும் சும்மா உட்கார்ந்து கேட்டுக்கிட்டு இருக்கீங்களே!''

கணவர் கையைப் பிடித்துச் சுந்தரி உலுக்க, அவர் பேசுமுன் பாலாஜி முந்திக் கொண்டார்:

''தத்து பித்துனு பேசலே... ப்ளீஸ் கண்ட்ரோல் யுவர்செல்ஃப்... உங்க இரண்டு பேர் கிட்டவும் என் பிரச்சினையைச்சொல்லி, இதுக்குத் தீர்வு காண சாந்திய நான் கல்யாணம் பண்ணிக்கறதைத் தவிர வேற வழி இல்லேன்றதையும் விளக்கத்தான் நானே இங்க வந்தேன். ஆனா, அதுக்குள்ள நீ முந்திக்கிட்டு என்னென்னவோ பேசிட்ட... ஐயாம் ரியலி ஸாரிக்கா...''

குருமூர்த்தி மனைவியின் தோளில் தட்டிக் கொடுத்தார்.

''நீ கொஞ்ச சும்மா இரு சுந்தரி. அவன் என்ன சொல்றான்னு தான் கேட்பமே... பாலா... நீ என்ன பேசணும்னு வந்தே... முதல்ல அதைச் சொல்லு...''—

பாலாஜி கண்ணாடியைக் கழற்றி,விழிகளைத் தேய்த்து விட்டுக் கொண்டு மீண்டும் மாட்டினார்.

வார்த்தைகளைத் தேர்ந்தெடுத்து, கவனமாய்ப் பேசினார்.

''நான் சொல்றதை நீங்க சரியா புரிஞ்சிக்கணும் மாமா... இத்தனை வருஷமா என்னோட நீங்க பழகி இருக்கீங்க... அவசரப்பட்டு எந்த முடிவுக்கும் வர்ற ஆசாமி நான் இல்லேனு உங்களுக்குத் தெரியும்... கௌரி போனதுலேந்து நான் படற அவஸ்தை என் ஒருத்தனுக்குத்தான் தெரியும்... அந்தத் தனிமை, சூன்யம்... அவளைப் பத்தி பேச, அவளோடு வாழ்ந்த நாட்களின் இனிமையைப் பகிர்ந்து கொள்ளக் கூட யாருமே இல்லாம ஒரு தனி காட்டுல மாட்டிகிட்ட அவஸ்தை... நான் என்ன சொல்றேன்னு உங்களால புரிஞ்சிக்க முடியுதா மாமா?''—

''அவரை விடு... என்னைப் பார்த்துப் பேசு பாலா... தனியா இருக்கிறது கஷ்டமா இருக்குனு சொல்ல வரே... அதானே! சரி — இங்க வந்திடு. எங்களோட இரு... இல்லே, நான் வந்து அங்க உன்னோட ஒரு மாசம் போல இருக்கட்டுமா?''—

''நான் சொல்லறது உனக்குப் புரியலேக்கா. உன் கூட நான் வந்து தங்கிடறதாலேயோ, நீ ஒரு மாசம் அங்க வந்து இருக்கறதாலேயோ என் லோன்லினெஸ் சரியாகாது.... எனக்குனு யார் இருக்காங்க? நான் சாப்பிடும் போது, பாட்டு கேட்கும் போது கூட இருக்க, வெளியில போய்ட்டு வீட்டுக்கு வரும்போது எனக்காகக் காத்திருக்க... அது மட்டுமில்லே... சட்! எனக்குச்சரியா விளக்கத் தெரியலே...''

''அப்ப, சுதாவையோ, சுரேஷையோ தத்து எடுத்துக்கிட்டுக் கூடவே உனக்குனு வைச்சிக்க...''

பாலாஜி முடியாது என்று தலை அசைத்தார்.

''இல்லேக்கா... உனக்கு இன்னமும் புரியலே. நான் என்ன சொல்ல வரேன்னு...''

சுந்தரி கண்களை இடுக்கிக் கொண்டாள்... கேலியமாய்ச் சிரித்தாள்.

''மொத்தத்துல பொம்பளை சுகம் இல்லாம இருக்க முடியலேனு சொல்லவரே— அதானே?''—

''சுந்தரி''—

''ஏங்க அதட்டறீங்க! இவன் இதைச் சொல்லத்தானே இத்தனை தயங்கறான்?''—

முகத்தில் அக்கா காறித் துப்பிவிட்ட மாதிரி கூசிப்போன பாலாஜி உதட்டை அழுந்தக் கடித்துப் பிரயத்தனப்பட்டுப் பேசினார்.

''சத்தியமா இல்லேக்கா... என் கூடப் பிறந்த நீயே என்னைப் புரிஞ்சிக்காமப் பேசாதே... ப்ளீஸ்... கௌரியப் பத்திப் பேச, கௌரியோட நான் வாழ்ந்த வாழ்வை அலச, அதே ரீதில வாழ்க்கையைத் தொடர்ந்து நடத்தத்தான் சாந்திய நான் கல்யாணம் பண்ணிக்க விரும்பறேன்... ஒரு இதமான துணைய வேண்டித்தான்....''

சுந்தரி காதுகளைப் பொத்திக் கொண்டாள்.

கண்களில் நீர் குளமாக வழிப் போக ''வேணும் பாலா... அந்தப் புண்ணியவதிப் பேரைச்சொல்லிச் சப்பைக் கட்டு கட்டாதே.. வேணும்... இது மகாபாவம்...'' என்று கத்தியவள் அழுகையை நிறுத்திவிட்டு ''சாந்திய நீ உடனே கட்டிக்கிட்டாகணும்னு என்ன நிர்ப்பந்தம்? ஏதாவது ஏடாகூடமா நடந்திடுச்சா? பயப்படாம உண்மைய ஒத்துக்க... பணத்தைக்கொடுத்து அவளைச் சரிக் கட்டிடலாம்'' என்று கிசுகிசுப்பாய் வினவ, பாலாஜி தன் பொறுமை எல்லாம் கரைந்து விட்ட நிலையில் வேகமாய் எழுந்து நின்றார்.

உன்னதமான நட்பைத் தவிர இந்த நிமிஷம் வரையிலும் எங்கள் நடுவில் வேறு எந்த உணர்வும் தலைகாட்டியதில்லை; கௌரியை மறக்க விரும்பாத இரண்டு நபர்களாகத்தான் நாங்கள் நெருங்கி வந்தோம். பல விதத்திலும் ஒரே ரசனையைக் கொண்ட நண்பர்களாகப் பழகுகிறோம், சமுதாயம் வீண் பழி சுமத்தி இந்த நட்பை அழித்து விடப் போகிறதே என்ற பயத்தில், இதற்கு வேறு உறவைக் கொடுக்க நினைத்தேன், என் கௌரியின் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். இந்த கணம் வரை என் மனசில் கல்மிஷம் இல்லை. புரிந்து கொள்ளுங்கள்......

உரக்கக் கத்தத் துடித்த நாவைக் கட்டுப்படுத்தினார்.

புரிந்து கொள்வார்களா?

இவர்களா?

ம்ஹூம்—மாட்டார்கள்...

கண்ணைக் கட்டிவிட்ட குதிரையாய் இருக்கும் அக்காவை இப்போது எந்த சத்தியமும் திசை மாற்றாது என்பது புரிந்தது.

''என்னை நீ புரிஞ்சுக்காட்டாலும், என் நிலையை விவரிக்கவாவது சந்தர்ப்பம் தருவேனு நினைச்சேன். பரவாயில்லே. நான் வரேன்...''

மெல்லிய த்வனியில் பேசிவிட்டு நடந்தவரை ''நில்லு பாலா'' என்று தடுத்தாள் சுந்தரி.

''அப்ப, உன் முடிவுல மாத்தம் இல்லே?''—

''சாந்திகிட்ட இது பத்தி நான் இன்னும் பேசலே, அவளுக்கு ஆட்சேபணை இல்லேன்னு முடிவுல மாத்தம் எதுவும் இல்லேதான்.''—

''ஒண்ணு கேட்கறேன்— பதில் சொல்லிட்டுப் போ பாலா... நட்பு, துணை அது, இதுனு பேசறியே... சாந்திய கட்டிகிட்டா அவளுக்கு புருஷனு இருக்குற உத்தேசம் இல்லியா? இருக்கு இல்லே? அப்புறம் எதுக்காக இந்த வீண் கட்டுக்கதை எல்லாம்? உம்?''—

கேள்வி சுரீர்என்று ஹிருதயத்தைத் தாக்கியது. பதில் சொல்லத் தெரியாமல் கால் நிமிஷம் தடுமாறியவர், ''நீ கேட்கிற ரீதில நான் இதுவரைக்கும் எதுவுமே நினைத்ததில்லேன்றதால இதுக்கு உடனே பதில் சொல்ல எனக்குத் தெரியல. நம்பறதும் நம்பாததும் உன் இஷ்டம்'' என்று சொல்லிவிட்டுத் திரும்பி நடந்தார்.

''அய்யோ... இப்படிக் கூசாம பேசிட்டு அவன் போறான், நீங்களும் பார்த்திட்டு இருக்கீங்களே... இருவது வருஷம் கௌரி

# தலைவலி பலவகை உண்டு





# சிகிச்சை ஒன்றே ஒன்று!

# அனாஸின்

## இதில் அதிக அளவில் வலி-நிவாரணி அடங்கியுள்ளது

துரித நிவாரணம் அளிக்க, உலகெங்கும் டாக்டர்கள் மிக
அதிகமாக சிபாரிசு செய்யும், வலி-நிவாரணி மருந்து
அதிக அளவில் கொண்டது—அனாஸின்.

தலைவலி, ஜலதோஷம், ஃப்ளு, முதுகு வலி,
தசை வலி, பல் வலி ஆகியவற்றிற்கு
நல்ல பலனளிக்கிறது.

அனாஸின் மீது மட்டுமே
நம்பிக்கை வையுங்கள்.

இப்போது பாதுகாப்பான ஃபாயில் உறையில்.






இந்தியாவின் புகழ்பெற்ற வலி-நிவாரணி மருந்து

* Licensed user of T.M. : Geoffrey Manners & Co.Ltd.

GM-1-83 TM

யோட வாழ்ந்த வாழ்க்கையைப் பொய்யாக்கிட்டு, உடம்புதான் முக்கியம்னு இவனும், பணம் காசுதான் பிரதானம்னு அந்தச் சாந்தியும் அலையறாங்களே... தடுத்து நிறுத்தாம இப்படியே உட்கா...''

அக்கா பேசுவதை நின்று கேட்கப் பிடிக்காமல் பாலாஜி சரசரவென்று படிகளில் இறங்கி, வெளியில் வந்து, காரில் ஏறினார்.

கண்கள் பனிக்க, பார்வை மசமசக்க, மார்புக் கூட்டில் ஓராயிரம் முரசங்கள் கொட்ட, நர்ஸிங் ஹோமில் வண்டியை நிறுத்தி விட்டு அவர் உள்ளே நுழைந்த போது மணி ஏழேகால்.

வீட்டுக்குப் புறப்பட ஆயத்தம் பண்ணிக் கொண்டிருந்த சாந்தி பாலாஜி உள்ளே வந்த வேகத்தையும், சிவந்து கலங்கின அர்த்தக் கண்களையும் பார்த்து பயந்து அப்படியே அவரை விட்டுவிட்டுப் புறப்பட மனமில்லாமல் அறைக்குள் சென்று 'உடம்புக்கு ஒண்ணுமில்லியே டாக்டர்' என்று மெது வாய் வினவ, அவளை உட்காரச்சொல்லி, பத்து நாளாய்த் தான் தவித்தது, சிந்தித்தது, ஒரு முடிவுக்கு வந்தது, சற்றுமுன் அது விஷயமாய் அக்கா, மாமாவைச் சந்தித்தது, அங்கு அவர்கள் பேசினது — என்று அத்தனையும் ஒன்று விடாமல் கூறி முடித்த போது கண்களில் திரண்டு விட்ட நீர் கன்னத்தில் கோடு போடத் துவங்கியது.

கேட்டதை நம்ப முடியாமல் சாந்தி திகைத்திருந்தாள்.

எதிரில் அமர்ந்திருந்தவரை ஏறிட இயலாமல் தலையைக் குனிந்து கொண்டு கைக்குட்டையின் நுனியைத் திருகினாள்.

பாலாஜியின் வேதனை, தனிமை முக்கியமாய் நேர்மை எல்லாம் நன்றாகக் கலந்து ஆளை ஆக்ரமிக்க என்ன பேச வேண்டும் என்று தெரியாமல் ஒருவித கையாலாகாதத் தனத்துடன் மனசுக்குள் டாக்டர் டாக்டர் என்று மட்டும் அரற்றிக் கொண்டாள்.

சில நிமிஷங்களில் கொஞ்சம் நிதானத்துக்கு வந்ததும் பாலாஜி எழுந்து நின்றார்.

''உன் கிட்டயிருந்து நான் எதையும் மறைக்க விரும்பலே சாந்தி. அதான் நீ என்ன நினைச்சாலும் பரவாயில்லேன்னு அத்தனையும் சொல்லிட்டேன். ஐயாம் ஹெல்ப்லெஸ்.... கௌரிக்கு நான் துரோகம் பண்றேன்னு அக்கா நினைக்கறாங்க... நோ... அது உண்மை இல்லே... கௌரிய இழந்திட்ட மாதிரி, வேண்டாத வம்பு பேச்சால உன்னையும் இழந்திடுவேனோன்ற பயத்துல தான் இந்த முடிவுக்கு வந்திருக்கேன். இத நீ சரியாப் புரிஞ்சிக்கிட்டா நான் சந்தோஷப்படுவேன். அண்ட், ஐ வாண்ட்டு அட்மிட் ஒன்மோர் திங் — தீவிரமா யோசனை பண்ணிப் பாக்கறப்போ சுயநலவாதியா செயல்பட்டுட்டேன்னு கூடத் தோணுது... அக்கா கேட்ட மாதிரி உனக்கு நல்ல புருஷனு என்னால இருக்க முடியுமான்னதைப் பத்தி நினைச்சுப் பார்க்காம நான்... ஐம் ஸாரி சாந்தி... ஆனா, ப்ளீஸ் புரிஞ்சுக்க... வேணும்னு இப்படி திட்டமிட்டு நடந்துக்கலே... ஏதோ ஒரு வேகம்... ஏக்கம்... உன் முடிவு எதுவாயிருந்தாலும் அதை ஒரு நல்ல நண்பன்ற முறைல நான் வரவேற்பேன்.... அதை நினைவுல வைச்சிக்க... நான் வீட்டுக்குப் போறேன்.... ஐயாம் டயர்ட்...''



அவர்: என்ன சார் இது குழந்தைகளுக்கு க்யூவாலா, தியேட்டர்குமார், பால்கனி குமார்னு விசித்திரமான பெயர்களா, வெச்சிருக்கீங்களே?

இவர்: அதான் சொல்லிட்டேனே... என் மனைவி சரியான சினிமாப் பைத்தியம்னு. —சிவலட்சுமி.

பாலாஜி சென்று ஒரு மணி நேரம் போல் சாந்தி அங்கேயே, அப்படியே அமர்ந்திருந்தாள்.

''வேலை முடிஞ்சா உடனே வீட்டுக்கு வர வேண்டியதுதானே அவன் கூட அங்க என்ன பண்ணிக்கிட்டு இருக்கே? பெண்டாட்டி இல்லாதவன் ஒருத்தன் வகையா கிடைச்சான்னு வெட்கம் மானம் இல்லாம உடம்பு சுகத்துக்கு அலையறியாம். எனக்குத் தெரியாதுன்னு நினைக்காதே... பொம்பளையாப் பிறந்தவளுக்கு அடக்கம் வேணும்... நினைப்புல வைச்சிக்கிட்டு ஒழுங்கா இரு...''

கிட்டத்தட்ட இருபது நாட்களுக்கு முன் வீட்டில், அத்தனை பேர் முன்னால், அப்பா கத்தியது நினைவுக்கு வந்து உடம்பை உதறிப் போட வைத்தது.

ஒன்றுமே இல்லாத போது தாங்களாகவே கண்டதைக் கற்பனைப் பண்ணிக் கொண்டு தாறுமாறாய்ப் பேசும் உற்றார், உறவினர்....

இவர்களுக்காக நம் நிம்மதி, சந்தோஷத்தை ஆயுசு பரியந்தம் குழிதோண்டிப் புதைக்க வேண்டியது அவசியம்தானா?

புல்வெளியில் உட்கார்ந்து, ஆகாயத்தை வெறித்துக் கொண்டிருந்த பாலாஜி, விக்ரம் கொஞ்சலாக முனகியபடி எழுந்து ஓடுவதை உணர்ந்து தலையைத் திருப்பினார்.

சாந்தி.

''நீ இன்னும் வீட்டுக்குப் போகலியா?'' —

அழகான புன்னகையுடன் மெள்ள நடந்து கிட்டத்தில் வந்து கையிலிருந்த பத்திரிகையை அவர் முன் நீட்டி ''நாலாவது புதிர் எனக்குப் புரியலே உங்களுக்குத் தெரிஞ்சா சொல்லுங்களேன்'' என்றபோது, எங்கோ மறைவில் நின்று பூத்துக் குலுங்கிய பாரிஜாதத்தின் மணம் ஜிலீரென்று வீசிய தென்றலோடு கலந்து, அவர்களை மந்த ஹாஸ்யமாய்க் கழுவியது.

முற்றும்

# மால்டோவா சீரணி–
# அவர்களது குறும்புகள் வெகு நளினம்
# அதை நீங்கள் எண்ணுதல் வெகு கடினம்!

நிறைந்த சக்தி. வேடிக்கை விளையாட்டுக்களில் கலந்துகொள்ளும் உண்மையான ஆர்வம். அதனால் தான் குழந்தைகளுக்குத் தேவை மால்டோவா. பொன் வண்ண கோதுமை, பார்லி, தூய பால், செழுமையான கோககோ, சர்க்கரை இவற்றின் சங்கமமான மால்டோவா பாலுக்குச் சுவை கூட்டி பன்மடங்கு பலனையும் அளிப்பது. உங்கள் குழந்தைகளுக்கு மால்டோவா இன்றே கொடுக்க ஆரம்பியுங்கள்.

**சூரிய வெப்பத்தால் முதிர்ந்த கோதுமை, பார்லி மால்ட்**

பஞ்சாபிலிருந்து வரும் கோதுமையும் பார்லியும் மால்டோவா தொழிற்சாலையில் போஷாக்குத் தரும் மால்ட்டாக மாறுகின்றன. அவசியமான தாது உப்புக்களும் வைட்டமின் Bயும் நிறைந்த, நவீன தயாரிப்பு முறையில் உருவான மால்டோவாவின் சத்துக்கள் உடலில் எளிதில் கலந்துவிடும்.

**தூய, முழுமையான பால்**

எங்கள் பால் சேகரிக்கும் நிலையங்களில் மால்டோவா தயாரிக்கப் பயன்படும் பால் 100% தூய்மையும் போஷாக்கும் நிறைந்தது.

**சுவை கூட்டும் கோக்கோ**

மால்டோவாவில் தரத்திலுயர்ந்த வெளிநாட்டுக் கோக்கோ சேர்கிறது. அதன் சீரிய சுவையும், போஷாக்கும் உங்களுக்குப் புத்துணர்ச்சி யளித்து இன்பமுறச் செய்கின்றன.

**சக்தி தரும் சர்க்கரை**

உயர்தரமான வெண்மையான சர்க்கரை சேர்ந்தது மால்டோவா...தேர்ந்தெடுத்த இன்னமுதம்...சின்னக் குழந்தைகளுக்கு அதிக சக்தி தரத் தேவையான ஆரமுதம்.

**வைட்டமின்களின் விசேஷச் சேர்க்கை**

புரதம், கார்போஹைட்ரேட்டுகள், வைட்டமின்கள் A, $B_1$, $D_2$, நயாசின், தாது உப்புக்கள் அனைத்தும் இணைந்த ஈடிணையற்ற படைப்பு மால்டோவா. செயற்கைச் சுவையேதுமில்லாதது.






JIL ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

Monde (உலக) தரத்தேர்வில் தங்கமெடல் பெற்றது 1981, 1982

**வைட்டமின்கள் கூடிய மால்டோவா: ஆரோக்கியம், பலம் மற்றும் சக்திக்கு**

SIMOES/JIL/3/83 TAM

புத்தாண்டு - பொங்கல் நல்வாழ்த்துக்கள்



## கேட்டுப் போட்ட

**திருமதி லக்ஷ்மி வாசுதேவன், சென்னை-28**

அனுபவித்தேதான் அறிவது வாழ்வெனில்
ஆண்டவனே நீ ஏன்எனக் கேட்டேன்
ஆண்டவன் சற்றே அருகு நெருங்கி
அனுபவம் என்பதே நான்தான் என்றான்.

—கண்ணதாசன்

**ஆர். கனகா, கோவில்பட்டி**

''சினமிறக்கக் கற்றாலும்
சித்தி எல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு
வாயேன் பராபரமே!''.

—தாயுமானவர்





**ஆர். பி. சாரதி, கேளம்பாக்கம்**
(ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்)

வாட்டும் மழைநாள் வந்தாலும்
வசந்தம் பின்னால் வாராதோ?

—''ஷெல்லி''

**வரகூர் வை. சீனிவாசன், பம்பாய்-1**
(ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்)

மாலை செங்கதிரோன் செவ்வானில் மறையுங்கால்
நாணி முகம்சிவந்து மண்ணுலகை நோக்குவதேன்?
வெண்பரி ரதமேறி விண்வெளியில் விரையுங்கால்
கேடுகெட்ட மானிடனின் கொடுமைகளை கண்ணுற்றனனோ?

—லேமன் ஹீத்





**ஜி. வி. அர்த்தநாரி, வேலூர்—சேலம்**

கொய்த மலரைக் கொடுங்கையினாலணைந்து
மொய்குழலில் சூட்டுவான் முன்வந்து — தையலாள்
பாதார விந்தத்தே சூட்டினான் பாவைவிடைக்
காதார மின்மை அறிந்து.

—புகழேந்திப் புலவர்

## கவிதை வரிகள்

# உண்மை இவ்வாறிருக்க

● கல்கி ஆசிரியர் 'மட்டம் தட்ட'' முனைந்திருந்தால் 'இப்படியொரு' கட்டுரை முளைத்திருக்குமா? இப்போதாவது 'ஊக்கு விப்பே' சிறந்தது என்பதைப் புரிந்து கொள்ளட்டும் முருந்தன்.
பல்லாவரம், ப. பழநி.

● பாம்புக்கு முத்தம் கொடுக்கும் சிவ குமாரின் சாதனையைக் காட்டிலும், சீறும் மனைவிகளுடன் இல்லறம் நடத்தும் இருஹஸ் தர்களின் சாதனைகள் எந்த விதத்தில் சார் குறைந்தது!
ஸ்ரீரங்கம், ஆர். கோபாலன்.

● எடுத்த எடுப்பிலேயே 'ஜெட்' வேகத் தில் செல்கிறார் 'இந்தியாவில் ஜேம்ஸ் பாண்ட்.'
மதுரை—1 எஸ்.சாகுல் ஹமீது.

● ஏனய்யா! கட்டிப்போட்ட கவிதை வரி களில் எல்லார் புகைப் படமும் கிடைத்த உமக்கு கண்ணதாசனின் போட்டோ மட்டும் கிடைக்கலேயாக்கும். என்ன காது குத்தல் சாமி?
வியாசர் நகர், திருமதி. நாராயணராவ்.

● கௌரி இறந்த பிறகு கதையில் என்ன சுவை இருக்கப் போகிறது என்றெண்ணிய எமக்கு சுவையளிக்கும், வியப்பளிக்கும்வகை களில் வாரந்தோறும் வெளிவந்து கொண் டிருக்கிறது. மாலையில் பூக்கும் மலர்கள்.
விருத்தாசலம், க. பொன்னி.

● கடற்கரைக் காதல் எவ்வளவு 'ஆழ மானது' என்பதை அட்டைப் படக்காட்சி மூலம் நகைச்சுவையாகவே உலக இயல்பு களைப் படம் பிடித்துக் காட்டி விட்டீர்கள். 'இளசுகள்' புரிந்து கொள்ள வேணுமே!
நங்கைநல்லூர், பத்திராட்சி அம்மாள்.

● பரிசுக்கதை ''இதுதான் வாழ்க்கையின் நியதி'' ஒரு நல்ல கோணத்தில் எழுதப் பட்ட மாறுதலான கதை.
சென்னை—20 உமா ஸ்வாமிநாதன்.

● 'முழுப் பூசணிக்காயைச் சோற்றிலே மறைக்க முடியாது. முழுப்பூசணிக்காய்ச் சமாச்சாரங்களான மாருதி மற்றும் நிலக்கரி விவகாரங்களை ஒருபக்கத் தலையங்கத்திலேயே அடைத்துவிட' முடியும் என்று காட்டிக் கொண்டிருக்கிறீர்கள்; பரவாயில்லை. பூசணி களின் கனபரிமாணங்களை ஓரளவு புரிந்து கொள்ள முடிகிறது.
சென்னை—14, ஐயாறு எஸ். வாசுதேவன்.

● எல்லாக் கவிதைகளும் படித்து ரசிக்கும் படி இருந்தது! மு. மேத்தாவின் கவிதையை அடுத்தவாரம் எதிர்பார்க்கிறேன்.
திருவாரூர் என். நம்பி.

சத்துணவுத் திட்டச் சிற்பி காலஞ்சென்ற திரு. சபாரெத்னம் செட்டியார் தான். இவர் நாட்டுக்கோட்டை செட்டியார் வகுப்பைச் சேர்ந்தவர்.

1935—ஆம் ஆண்டில் லால்குடி உயர் நிலைப்பள்ளியில் இந்தத் திட்டத்தை ஏற் படுத்தினர் இப்பெரியவர். அதற்கென ரூ. 10 000 (பத்தாயிரம்) நன்கொடை வழங்கி திருச்சிராப்பள்ளி ஜில்லாபோர்டில் ஒரு அறக்கட்டளை ஏற்படுத்தி அதிலிருந்து வரும் வருவாயிலிருந்து லால்குடி உயர்நிலைப் பள்ளியில் படிக்க வரும் ஹரிஜன மாணவர் களுக்கு மதிய உணவு வழங்கத் திட்டமிட்டு நடத்தினர். உண்மை இவ்வாறிருக்க, பல வருடங்களுக்குப் பின்னால் இந்தத் திட் டத்திற்கு சிற்பி யார் என்று சிலர் போட்டி விடுவதைப் பார்க்க விநோதமாகவேயுள்ளது.
சென்னை—17. எல். என். கோபாலசாமி.

● இரண்டாம் பக்க அட்டைப்படத்தைப் பார்த்து ரசித்த எங்களுக்குத் தகவலை ஒழுங் காகக் கொடுக்க மறந்து விட்டீரே! குதிரை மீது கம்பீரமாகவும் அச்சமின்றியும் ஆரோ கணித்து என்பதற்குக் குதிரை மீது கை வைத்துப் புகைப்படத்திற்குப் போஸ் கொடுப்பது என்றுதான் உங்களது அகராதி யில் பொருளா?
அம்பத்தூர் கே. கே. பன்னீர்செல்வம்.

● சாலைகளில் தினமும் நாம் பார்க்கும் மாட்டு வண்டிகளில் ஏற்றப்படும் மிக அதிகமான சுமைகளைக் கண்காணிப்பவர் யார்? தாங்க முடியாத பாரத்தால் காளை திணறும்போது அதைக் குச்சியால் அடித் தும், குத்தியும் சித்திரவதை செய்கிறானே, வண்டிக்காரன் அவனைத் தட்டிக் கேட்பவர் தான் யார்? லாரிகளுக்குக் கூட ஏற்றக் கூடிய லோடுக்குக் கட்டுப்பாடு உண்டு. அரசுக் காவலர்கள் வாயில்லா ஜீவன்களுக் காகவும் கொஞ்சம் கருணை காட்டுவார்களா?
திருச்சி—14. வி. சுபத்ராதேவி.

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது)



## வட்டமேஜை







அப்பாவுக்குப் பிடித்தது — அம்மாவுக்குப் பிடிக்காது!





தாத்தாவுக்குப் பிடித்தது — பாட்டி விரும்பாதது!





அண்ணனுக்குப் பிடித்தது — அக்காவுக்கு ஆகாது!



ஆனால்
எல்லோருக்கும் பிடித்த
ஒன்று...

# நரசுஸ் காபி

அது குடும்பத்தின் தோழன்.



ஜீவனுள்ள ஒரே காபி!

# நரசுஸ்

"தெர்மலோ" காபி!

**நரசுஸ் காபி கம்பெனி**

சேலம் 636 007. கிளைகள்: தமிழ்நாடெங்கும்.

ADWAVE/NCC/2504



# வைரம் சதித்திட்டம்

## ஆக்டோபஸ்ஸி திரைக்கதையின் தமிழ் வடிவம்

### மூன்றும் பாகம்

உதய்பூர் ஏரியிலிருந்து தலையைத் தூக்கிய முதலையை வெறித்துப் பார்த்தான் ஆக்டோபஸ்ஸி. 007–இன் ஆயுள் கெட்டியாயிருந்தால் அவன் இந்தக் குரூரமான பற்களிடம் சிக்காமல் தப்பியிருக்கக் கூடும். அவளையும் அறியாமல் நீண்ட பெருமூச்சு வெளிப்பட்டது. சற்றைக்கெல்லாம் நிலா முற்றம் வெறிச்சோடியிருந்தது.

கசங்கி சரமாகிப் போயிருந்த சர்க்கஸ் விளம்பரச் சீட்டை சட்டைப் பையிலிருந்து எடுத்தான் ஜேம்ஸ்பாண்ட். பெரும் பிரயத்தனப்பட்டு உதய்பூர் ஏரியை நீந்திக்கடந்து கரையை அடைந்திருந்தான் அவன். பயங்கரமான முதலைகளையும், கொலை வெறி கொண்ட எதிரிகளையும் நீர்ச் சுழல்கள் நிரம்பிய ஏரியையும் வெற்றிகரமாகக் கடந்து வந்த பாண்டுக்கு உயிர் தப்பியதைப் பற்றி எண்ணக் கூட நேரமில்லை. அவன் சிந்தனையெல்லாம் அடுத்தபடியாக என்ன செய்ய வேண்டும் என்பது பற்றித்தான். கிழக்கு ஜெர்மனியில் கார்ல்மார்க்ஸ் மாநிலத்துக்குப் பறந்து விட்டது அவன் மனம். ஆக்டோபஸ்ஸி, கமல்கான், ஆர்லோவ் இவர்களை அடுத்த முறை அங்குதான் சந்திக்க வேண்டும்.

• • •

மேற்கு பெர்லினின் ஜன நெரிசல் மிக்க வீதிகளில் வகுடெடுத்துச் சென்றது அந்தக் கறுப்பு நிற கார். கிழக்கு ஜெர்மனியை நெருங்கியாயிற்று. கம்யூனிஸ்ட் எல்லைக்குள் பிரவேசிக்க வேண்டும். ஓட்டி வந்த 007 முகத்தில் எந்தவித சலனமும் இல்லை. அருகே அமர்ந்திருந்த அவனுடைய மேலதிகாரி 'எம்' மட்டும் கேள்விகளைக் கேட்டுக் குடைந்து கொண்டிருந்தார்.

''ஜெனரல் ஆர்லோவுக்கு இந்த நகைக் கடத்தலில் என்ன பங்கு? அற்பத் திருட்டுக்களில் ஏன் அவர் ஈடுபட வேண்டும்?''

பாண்ட் தலையை அசைத்தான். ''இதில் வேறு பல விஷயங்கள் இருக்கின்றன பாஸ். நகை விவகாரம் ஒரு கண் துடைப்பாகக் கூட இருக்கலாம்'' என்றான்.

கார் கிழக்கு ஜெர்மனி எல்லையை அடைந்ததும் எல்லைக் காவலரிடம் போலி பாஸ்போர்ட்டுகளைக் காட்டி அனுமதி பெற்றனர் இருவரும்.

சில மணி நேரங்களில் 007 ஆக்டோபஸ்ஸியின் சர்க்கஸ் கூடாரத்தினுள் அமர்ந்







திருந்தான். சர்க்கஸ் உச்ச கட்டத்தை அடைந்திருந்தது. அற்புதமான சாகசங்களைச் செய்து கொண்டிருந்தனர் ஆக்டோபஸ்ஸியின் பெண்கள். அவர்களுள் பலரை பாண்ட் அடையாளம் கண்டு கொண்டான். ஆனால் அவன் கவனம் எல்லாம் பார்வையாளர் பகுதியிலிருந்தது. கமல்கானும் ஆக்டோபஸ்ஸியும் அருகருகே அமர்ந்திருந்தனர்.

''கத்தி வீச்சு வீரர் மிஸ்கா இப்போது உங்களை மகிழ்விப்பார்'' என்ற அறிவிப்பு ஒலித்தது. இரட்டைச் சகோதரர்களான கிரிஸ்காவும் மிஸ்காவும் தோன்றினர். கிரிஸ்காவை மரப்பலகைக்கு முன் நிற்க வைத்து அவனை நோக்கிக் கூரிய கத்திகளை வீசினான் மிஸ்கா. ஒவ்வொன்றும் குறி தவறாமல் கிரிஸ்காவின் உடலை ஒட்டினாற் போல் மரக்கட்டையில் பதிந்தது. அந்தக் கத்தி வீச்சுக் காட்சி முடிந்ததும் ஆக்டோபஸ்ஸியும் கமலும் இணைந்து வெளியேறினர். பாண்டின் கண்கள் இதைக் கவனிக்காமல் போகவில்லை. உடனே எழுந்து அவர்களைப் பின்தொடர்ந்தான்.

அருகே இருந்த ரயில் - நிலையத்தை நோக்கிச் சென்றனர் கமல்கானும் ஆக்டோபஸ்ஸியும். சர்க்கஸ் சாமான்களை ஏற்றிய ரயில் பெட்டிகள் வரிசையாக நின்றன. கார் ஒன்று விரைந்து வந்து அந்தப் பெட்டிகளின் அருகே நின்றது. அதிலிருந்து இறங்கிய ஆர்லோவ் கார் டிக்கியைத் திறந்து வட்ட வடிவப் பெட்டி ஒன்றை எடுத்தார். கமலும் ஆக்டோபஸ்ஸியும் பின் தொடர ஒரு ரயில் பெட்டிக்குள் பிரவேசித்தார்.

உள்ளே நடப்பது என்ன என்று அறிந்து கொள்ளத் துடித்தான் பாண்ட். ஆனால் முட்டாள் தனமாக அவசரப்பட்டு உயிருக்கு ஆபத்து வரவழைத்துக் கொள்ள அஞ்சிச் சற்று மறைந்திருந்தான்.

ரயில் பெட்டியினுள் ஆர்லோவ் தாம் கொண்டு வந்த பெட்டியைத் திறந்தார். உள்ளே இருந்த வைர வைடூரிய நகைகள் கண்ணைப் பறித்தன. விஷயம் அறிந்த வல்லுனர்கள் அவற்றை ரஷ்ய அரச பரம்பரையின் நகைகள் என்று உடனே அடையாளம் கண்டிருப்பார்கள்.

சற்றைக்கெல்லாம் இரட்டையர்கள் கிரிஸ்காவும் மிஸ்காவும் அங்கு வந்து ஆர்லோவுக்கு வந்தனம் செலுத்தினர். சூழ்ந்திருந்த ஆக்டோபஸ்ஸி, கமல்கான் மற்றும் கோவிந்தா ஆகியோரின் மேற்பார்வையில் அச்சகோதரர்கள் தம் வேலையில் இறங்கினர். அந்த ரயில் பெட்டியின் நடுவில் ஒரு பெரிய பீரங்கி இருந்தது. ஒரு மனிதனையே குண்டாகப் பயன்படுத்தி அதனை இயக்கி அம்மனிதன் தூக்கி எறியப்படுவதையும், உயிரோடு திரும்புவதையும் காட்ட சர்க்கஸில் பயன்படும் பீரங்கி அது. ஆர்லோவ் கொண்டு வந்திருந்த நகைப் பெட்டியை மூடிப் பீரங்கியினுள் வைத்தார்கள் இரட்டையர்கள். அந்த வட்ட வடிவப் பெட்டி பீரங்கி குண்டு வைக்கும் இடத்தில் அழகாகப் பொருந்தியது. ஒரு தகட்டால் அதன் மீது மூடி வெல்டு செய்தான் கிரிஸ்கா. எவ்வளவு சாமர்த்தியமுள்ள சுங்க அதிகாரியும் இனி அந்த நகைகளைக் கண்டுபிடிக்க முடியாது.

''இந்த ரயில் பெட்டியை மெய்ன் டிராக்குக்கு மாற்றும் போது நீங்கள் இருவரும் அருகே இருங்கள்'' என்று உத்தரவிட்ட ஆர்லோவ் ஆக்டோபஸ்ஸியுடன் வெளியேறினார். மறைந்திருந்த ஜேம்ஸ்பாண்டுக்கு நடப்பது என்னவென்று தெரியாவிட்டால் மண்டை வெடித்து விடும் போல் இருந்தது. திட்டமிட்டுச் செயல்படுவதற்கு முன் அந்த ரயில் பெட்டி எஞ்சினுடன் இணைவதற்காக நகரத் தொடங்கியது. சுற்றுமுற்றும் ஒரு நோட்டம் விட்டுவிட்டு அதைத் தொடர்ந்து ஓடினான் 007. பெட்டியின் பின்னாலிருந்த கம்பியைப் பிடித்துத் தொற்றிக்கொண்டான். மெல்ல நகர்ந்த அப்பெட்டி மற்றொரு பெட்டியின் அருகே பக்கவாட்டில் போய் நின்றது. கூர்ந்து கவனித்ததில் இரண்டு பெட்டிகளும் ஒரே மாதிரி இருப்பது தெரிந்தது. பெட்டிகளின் உட்புறங்களும் ஒத்தாற்போல் இருந்தன. முதல் பெட்டியில் இருந்தது போலவே இரண்டாம் பெட்டியிலும் அதே பரிமாணத்திலும்

அளவிலுமான மற்றொரு பீரங்கி இருந்தது. கமலும் கிருஸ்காவும் மேற்பார்வையிட ரஷ்யப் படை வீரன் ஒருவன் ஆர்லோவ் கொண்டு வந்ததைப் போலவே மற்றொரு பெட்டியைச் சுட்டிக் காட்டினான்.

''கவனமாகக் கேளுங்கள். இதிலிருப்பது எஸ். எஸ். 70. இப்பெயர் கொண்ட அமெரிக்காவின் சமீபத்திய கண்டுபிடிப்பைப்போலவே ரஷ்யாவில் செய்யப்பட்டது. இது வெடித்தால்... என்ன ஆகும் என்று நான் சொல்லத் தேவையில்லை. இது வெடித்த பிறகு ஏற்படும் சேதங்கள் கூட அமெரிக்கத் தயாரிப்பு ஏற்படுத்தக் கூடிய ரசாயன, பௌதீக விளைவுகளையே ஒத்திருக்கும்.''

இரண்டு ரயில் பெட்டிகளுக்கும் இடையே ஒளிந்திருந்த பாண்டின் செவிகளுக்கு எட்டியது இந்தச் சம்பாஷணை.

''விசையை இயக்கி நான்கு மணி நேரங்கள் கழித்துக் குண்டு வெடிக்கும் வண்ணம் செய்துள்ளோம். இது வெடிக்கும் போது நீங்கள் குறைந்த பட்சம் 20 மைல்களுக்கு அப்பால் இருக்க வேண்டும்.''

நடந்த சம்பவங்களையும், கேட்ட சம்பாஷணையையும் தொடர்பு படுத்திப் பார்த்தான் 007. ஆர்லோவின் நோக்கம் நகைகளைத் திருடுவது மட்டும் அல்ல என்பது உறுதியாயிற்று. ரஷ்யாவை மேற்கத்திய நாடுகளுடன் மோத விடும் பயங்கர நோக்கமும் அந்த நீசனுக்கு இருக்கிறது என்பது அவனுக்குத் தெளிவாயிற்று.

ஆனால், குண்டு எந்த இடத்தில் வெடிக்கப் போகிறது? ரஷ்யச் சார்பு நாடான கிழக்கு ஜெர்மனியில் வெடிப்பதால் என்ன பயன்? பாண்ட் யோசித்துக் கொண்டிருந்த போதே ரயில் பெட்டியில் ஒட்டியிருந்த சுவரொட்டி அவன் கண்ணில் பட்டது. 'அடுத்த நிகழ்ச்சி மேற்கு ஜெர்மனியில் ஃபெல்ட்ஸ்டாட்டிலுள்ள அமெரிக்க விமானப் படைத் தளத்தில்' என்று அறிவித்தது அந்த விளம்பரம். புதிரின் கடைசிக் கட்டத்துக்கும் விடை கிடைத்து விட்டது. அமெரிக்கத் தளத்தில் குண்டு வெடித்தால் பயங்கர விளைவுகள் ஏற்படும். உலக யுத்தம் கூட மூளலாம்!

இப்போது உயிரினும் முக்கியம் இந்தச் சதியைத் தடுப்பதுதான் என்று தீர்மானித்த பாண்ட் நகைப்பெட்டி இருந்த வண்டிக்குள் ஏறினான். காவலாக நின்ற மிஸ்கா அவனைப் பார்த்ததும் வெல்டு செய்ய உபயோகித்த கருவியைக் கொண்டு நெருப்பைப்பாய்ச்சினான். அவன் குறியிலிருந்து சில அங்குல இடைவெளியில் தப்பிய பாண்ட் தன் துப்பாக்கியைத் தவற விட்டான். மிஸ்கா தன் கத்தி வீச்சு வித்தையைக் காட்ட ஆரம்பித்தான். கூரிய கத்திகளின் இலக்கிலிருந்து தப்ப பீரங்கியின் பின்புறம் சென்று அதற்கடியில் அமர்ந்து கொண்டான் பாண்ட். ஆத்திரத்துடன் தாவி வந்த மிஸ்கா பீரங்கிக் குழாயின் முனையை நெருங்கியதும் ஒரு விசையை இயக்கினான் பாண்ட். மேல் நோக்கியிருந்த பீரங்கியின் முனை மிஸ்கா மீது தடாலென்று விழுந்தது.

007 மிஸ்காவின் சடலத்திலிருந்து சர்க்கஸ் உடைகளைக் கழற்றி அணிந்து கொண்டான். கீழே விழுந்த துப்பாக்கியை எடுத்துக் கொண்டு ஆர்லோவை எதிர்பார்த்துக்காத்திருந்தான். முதல் இரண்டு பெட்டிகளைப் போலவே மூன்றாவதாக ஒரு பெட்டியைத் தூக்கி வந்தார் ஆர்லோவ். அதிலிருந்தவை போலி நகைகள். அசல் நகைகளைப் பெட்டியுடன் மிஸ்கா அப்புறப்படுத்தி – ஆர்லோவின் காரில் வைத்திருந்தான். நகல் அடங்கிய பெட்டியைப் பீரங்கிக்குள் வைக்க முற்பட்ட ஆர்லோவின் முகத்துக்கு நேராகத் திடீரென்று துப்பாக்கி முனை தோன்றியது.

''யார் நீ?'' திகைப்புடன் கேட்டான் ஆர்லோவ்.

''ஆங்கிலேய ரகசிய போலீஸைச் சேர்ந்தவன். அந்தக் குண்டு சமாச்சாரம் எனக்குத் தெரியும்.''

''தெரியுமா? அப்படியானால் உன் உயிரைப் பத்திரமாகப் பாதுகாக்க நீ எல்லா முயற்சிகளையும் மேற்கொள்ளலாம்.''

''அமெரிக்க விமானத் தளத்தில் வெடிக்கப் போகும் குண்டு பற்றித்தான் எனக்குக் கவலை. அமெரிக்கர்கள் எதிர்த்துப் போரிட்டால் என்ன ஆகும் தெரியுமா?''

''எதிர்த்துப் போரிடுவதா? யாரை எதிர்த்து?'' ஏளனமாய்ச் சிரித்தான் ஆர்லோவ்.

பாண்டின் மூளையில் ஒருவழியாக உண்மை உறைத்தது. அமெரிக்கதளத்தில் வெடித்தால் எல்லோரும் அது அமெரிக்காவின் அஜாக்கிரதையினால் நிகழ்ந்தது என்றே முடிவு கட்டுவார்கள். ரஷ்யாவின் சூழ்ச்சியால் நிகழ்ந்தது என்றோ குண்டு ரஷ்யாவில் தயாரிக்கப்பட்டது என்றோ யாருக்குத் தெரியும்? வெடியினால் ஏற்படும் பௌதீக, இரசாயன விளைவுகள் கூட அமெரிக்க குண்டு ஏற்படுத்தியதைப் போலவே இருக்குமே! ஐரோப்பாவில் அமெரிக்கா தன் அணு ஆயுதங்களை நிறுவுவதற்கு ஏற்கெனவே உள்ள எதிர்ப்பு வலுவடையும்.

அமெரிக்காவில் கென்டக்கி என்ற நகரத்திலிருந்து வெளிவரும் ஒரு செய்திப் பத்திரிகையின் விளம்பரப் பகுதியில் ஒருநாள் பின்வரும் விளம்பரம் காணப்பட்டது: ''நான் இப்போது கர்ப்பிணி. தினமும் ஆபீஸ் நேரம் தவிர மற்ற நேரங்களில் நாளிதழிலேயே தலையைக் கவிழ்த்துக் கொண்டிருக்காவிட்டால் இதை எப்போதோ தெரிந்து கொண்டிருப்பீர்கள்... உங்கள் மனைவி....''

—ஆர். எஸ். சுப்பிரமணியம்.



# ஈறுகளை பலப்படுத்துவீர்.
# பற்களுக்கு நீண்ட ஆயுளை அளிப்பீர்.




## ஈறுகளை பலப்படுத்துவதற்கான விசேட அஸ்ட்ரிஞ்ஜெண்ட் அடங்கியிருப்பது போர்ஹென்ஸ் ஒன்றில்தான்.

**இதன் கிளு கிளு சுவையே இதன் செயல்திறனுக்குச் சான்றாகும்!**

ஆரோக்கியமான பற்களுக்கும் கூட பலமான ஈறுகளின் ஆதாரம் தேவை. ஈறுகள் பலவீனமாகவும், மெத்து மெத்தென்றும் இருந்தால் உங்கள் பற்களுக்கு பலமான ஆதாரம் நீடிக்காது. ஆகவேதான், போர்ஹென்ஸில் விசேட அஸ்ட்ரிஞ் ஜெண்ட் என்ற உட்பொருள் சேர்க்கப்பட்டுள்ளது. அது ஈறுகளின் திசுக்களைச் சுருக்கி கெட்டிப் படுத்துகிறது. நீங்கள் பற்களை போர்ஹென்ஸ் உபயோகித்து பிரஷ் செய்யும் போது உங்களுக்கு கிடைக்கும் கிளுகிளு உணர்வு, அஸ்ட்ரிஞ்ஜெண்ட் செயல்படுவதை காட்டுகிறது. அது ஈறுகளை பலப்படுத்தி கெட்டிப்படுத்துகிறது. ஆகவே, உங்கள் பற்கள் நீண்ட ஆயுளைப் பெறும்.

**ஆகவே, உங்கள் பற்களுக்கு பலமான ஆதாரத்தை அளியுங்கள். உபயோகியுங்கள் போர்ஹென்ஸ்...விசேட அஸ்ட்ரிஞ்ஜெண்ட் அடங்கிய டூத் பேஸ்ட்.**



உங்கள் ஈறுகள் பலவீனமடைந்தால் ஆரோக்கியமான பற்களும் கூட பலவீனமடையும்.



போர்ஹென்ஸின் விசேட அஸ்ட்ரிஞ் ஜெண்ட் ஈறுகளின் திசுக்களை கெட்டிப்படுத்துகிறது.



உங்கள் ஈறுகளை பலப்படுத்தி பற்களுக்கு நீண்ட ஆயுளை அளியுங்கள்.




**நம்பகமான <u>போர்ஹென்ஸ்</u>** பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்.

306F-203-TAM

அதில் உலகமும் அமெரிக்கா அணு ஆயுதங்களை உற்பத்தி செய்யவே கூடாது என்று வலியுறுத்தும். அமெரிக்கா மதிப்பிழக்கும். ரஷ்யாவின் கை ஓங்கும். உலகம் முழுவதும் கம்யூனிஸம் வியாபிக்கச் சாதக சூழ்நிலை உருவாகும்.

விசில் சப்தம் கேட்டது. அணுகுண்டை ஏந்திய ரயில் புறப்பட்டது. ''வண்டியை நிறுத்துங்கள் ஜெனரல்'' என்று கூச்சலிட்டான் 007. ஆனால் காலம் கடந்துவிட்டது. ஆர்லோவ் ரயில் பெட்டியிலிருந்து குதித்து ஓட ஆரம்பித்தான். 007–க்கு ஒரு கணம் அந்தக் கோழை ஆர்லோவைப் பின்தொடர்வதா அல்லது ரயிலைத் தடுத்து நிறுத்துவதா என்ற குழப்பம். அவன் முடிவு செய்வதற்குள் புற்றிலிருந்து ஈசல்கள் போல் எல்லாத் திசைகளிலிருந்தும் இழக்கு ஜெர்மானியப் படை வீரர்கள் தோன்றினர்.

ரயில் பெட்டியிலிருந்து குதித்தான் பாண்ட். நேராக ஆர்லோவின் கார் இருந்த திசையை நோக்கி ஓடினான். நல்ல வேளையாகக் கார் சாவி அதன் துவாரத்திலேயே இருந்தது.. காருக்குள் பாய்ந்து ஊளப்பி வேகமாய்ச் செலுத்தி சிப்பாய்கள் கூட்டத்தைத் துளைத்து வழி ஏற்படுத்திக் கொண்டு சென்றான்.

நகைகள் வைக்கப்பட்டிருந்த காரை 007 ஓட்டிச் செல்வதைப் பார்த்த ஆர்லோவ் அலறி அடித்துக் கொண்டு மற்றொரு போர்ப்படைக் காரில் ஏறிப் பின் தொடர்ந்தான்.

ஆர்லோவ் பின் தொடர ஓடும் ரயிலைத் துரத்தினான் பாண்ட். ரயில் பாதையை ஒட்டிய நெடுஞ்சாலையில் விரைந்தான். துப்பாக்கித் தோட்டாக்கள் அவன் ஓட்டிய காரின் சக்கரங்களைத் துளைத்தவண்ணம் இருந்தன. லெவல் க்ராஸிங் ஒன்றை அடைந்ததும் பெரு முயற்சி செய்து காரைத் தண்டவாளங்களின் மீது ஏற்றித் திசை திருப்பினான். காரின் சக்கரங்கள் சரியாகத் தண்டவாளங்களின் மீது பதிந்தன. டிராம் வண்டி போல் தண்டவாளங்களின் மீது ஓட ஆரம்பித்தது கார். சக்கரங்கள் கிரீச்சிட முன்னால் சென்று கொண்டிருந்த ரயிலை எட்டிப் பிடித்தது கார். கடைசி ரயில் பெட்டிக்கு மிகமிக அருகே வந்ததும் ஒரு தாவு தாவி ரயிலை நோக்கிக் குதித்தான். அவன் கைகள் பெட்டியின் பக்கவாட்டில் இருந்த கம்பியைப் பற்றின. மெல்லக் கால்களை மேலே இழுத்துக் கொண்டு ரயிலின் கூரை மீது ஏறினான்.

ஐம்பது கஜங்களுக்குப் பின்னால் சாலையில் ஆர்லோவ் ஓட்டிய கார் வந்து கொண்டிருந்தது. ரயிலின் கூரையிலிருந்த காற்றுப் போக்குக்கான வட்ட வடிவ துவாரத்தின் வழியே மெல்ல எட்டிப் பார்த்தான் பாண்ட். உள்ளே மிஸ்கா கத்திகளை மறு முனையிலிருந்த இலக்கின் மீது வீசிப் பயிற்சி செய்து கொண்டிருந்தான். வீசிய கத்திகளைத் திரும்ப எடுத்து வர அவன் அந்தப் புறம் சென்ற சமயம் பெட்டிக்குள் ஜன்னல் வழியே பூனைபோல் ஓசையின்றிக் குதித்தான் 007. மிஸ்கா திரும்புவதற்கு முன் சர்க்கஸ் உடைகள் நிறைந்த அலமாரிக்குப் பின்னால் ஒளிந்து கொண்டான்.



இந்தியா முழுவதும் தீபாவளிப் பண்டிகை கொண்டாடப்பட்ட அதே நேரத்தில் கென்யாவிலுள்ள இந்துக்களும் அமர்க்களமாகத் தீபாவளியைக் கொண்டாடினார்கள். இந்துக்களின் தூது குழு பிரதமரிடம் சென்று கேட்டுக் கொண்டதன் பேரில் தீபாவளி அன்று விடுமுறையாக அறிவிக்கப்பட்டது. கென்யா நாட்டில் தீபாவளிப் பண்டிகை விடுமுறையுடன் கொண்டாடப்படுவது இதுவே முதல் தடவை!

—ஆர். எஸ். சுப்பிரமணியன்.

• • •

இதற்கிடையில் ரயில் பெட்டிக்கு வெளியே பல காரியங்கள் நடந்து கொண்டிருந்தன. ரஷ்ய ஜெனரல் கோகோல் அந்நாட்டு அரச பரம்பரையின் நகைகள் திருட்டுப் போனதில் ஆர்லோவுக்குப் பங்கு உண்டு என்று கணித்து அந்த அயோக்கியனைத் தொடர்ந்து இழக்கு ஜெர்மனிக்கு வந்தார். ஆக்டோபஸ்ஸியின் சர்க்கஸ் நடந்த இடத்துக்கருகே வந்து சேர்ந்தார். தண்டவாளத்தில் அனாதையாக விடப்பட்டிருந்த ஆர்லோவின் காரைக் கண்டுபிடிக்க அவருக்கு வெகுநேரம் பிடிக்கவில்லை. இழக்கு ஜெர்மானிய சிப்பாய் ஒருவன் கார் டிக்கியிலிருந்து பிதுங்கிய நகைப் பெட்டியைச் சுட்டிக் காட்டினான்.

கோகோல் மௌனமாகத் தலை அசைத்தார். பொறுப்பான பதவி வகிக்கும் ஒரு ரஷ்ய ஜெனரலுக்கு இத்தகைய நீச புத்தியா?

''ஆர்லோவ் இப்போது எங்கே இருக்கிறான்?''

''கடைசியாக மேற்கு ஜெர்மனி நோக்கி விரைந்து கொண்டிருந்தார்.''

''அவனை உடனே தடுத்து நிறுத்த வேண்டும்.''

ஹெலிகாப்டரில் இழக்கு ஜெர்மானிய எல்லையை நோக்கிப் பறந்தார் கோகோல்.

(தொடரும்)





துப்பாக்கி சுட்டார்



கேக் வெட்டுகிறார்

# நகர் வலம்

# ஆபாசம் ஆடைக்குறைப்பில் மட்டுமல்ல

● அருணோதயம் அருணனுக்கு சஷ்டி அப்த பூர்த்தி. மயிலையில் ஒரு கலியாண மண்டபத்தில் நடந்தது. காலை 4 மணி முதல் ஆறரை மணி வரை நகரத்தார் சமூக முறைப்படி சடங்குகள். பின் அருணன் கேக் வெட்டி, முதல் துண்டைத் தம் திருமதிக்குக் கொடுத்தார். வித்தியாசமாக இருந்தது. தொடர்ந்தவை கவியரங்கமும், வாழ்த்தரங்கமும்.

● 'இதுவரை நான்' — வைரமுத்து புதுக் கவிதை நடையில் எழுதிய சுயவரலாறு புத்தகமாய் வந்து விட்டது. வெளியீடு பாரதி பதிப்பகம். அதில் வைரமுத்துவின் முன்னுரையிலிருந்து சில வரிகள்:

நான் வரைய நினைத்தது
சித்திரம்தான்.
வரைந்திருப்பவை
கோடுகளே!
ஆனால்—
கோடுகளும் சித்திரம்தானே!

● சென்னைத் தொலைக்காட்சியில் புத்தாண்டு தினத்தையொட்டி டிஸ்கோ—டிஸ்கோ என்று சிறப்பு நிகழ்ச்சி வழங்கியவர் அபஸ்வரம் ராம்ஜி. மோகன், சுரேஷ், பிந்துகோஷ் என பலர் பங்கேற்றனர். நிகழ்ச்சி படு டக்கர், டிஸ்கோவைப் பொருத்தமட்டில். ஆனால் டிஸ்கோவில் துலாபாரக் கதையை இணைத்து நாரதர் கிருஷ்ணன், ருக்மணி, சத்யபாமா எல்லாரையும் டிஸ்கோ ஆட வைத்தது கசப் புணர்வையே ஏற்படுத்தியது. 'தெருக் கூத்து, கதக்களி என்று பல ரகம், இல்லையா, அப்படி டிஸ்கோவில் துலாபாரம், என்று ராம்ஜி முன்னுரையிலேயே சமாதானம் கூறுவது போல் பேசியது ஏற்கக் கூடியதாய் இல்லை. டிஸ்கோ துலாபாரத்தை ஒருவர் ரசித்திருக்கக் கூடும்—வீரமணி. இஸ்லாம் அல்லது கிறிஸ்தவ மதத்தை இப்படி இழிவு படுத்த முன்வருவாரா ராம்ஜி? அல்லது டி. வி. நிலையம் தான் ஒளிபரப்பத் துணியுமா? ஸ்டேஷன் டைரக்டர் ஸார், ப்ளீஸ் நோட் — ஆபாசம் என்பது ஆடைக்குறைப்பில் மட்டுமல்ல.

● சென்னை விமான நிலையத்தில் அரைமணி நேரமே தங்கினார்கள் சரண்சிங், வாஜ்பாயி இருவரும். நகரினுள் வரவே இல்லை. விமான நிலையத்தில் அவர்களைச் சந்தித்தார் ஒரு அமைச்சர். வணக்கம் கூறித் தம்மை அறிமுகப்படுத்திக்கொண்டார். புகைப்படக்காரர் போட்டோ எடுத்தார். அமைச்சர் புறப்பட்டுவிட்டார். ஒன்றுமே பேசவில்லை. அந்த அமைச்சர் காளிமுத்து.

● தி. நகர்' டக்கர் பாபா வித்யாலயத்தில் ராஜாஜி பற்றிப் புகைப்படக் கண்காட்சி. சுமார் 100 போட்டோக்கள் இருந்தன. பல்வேறு தலைவர்களுடன் ராஜாஜி இருக்கிற போட்டோக்களுடன், ராஜாஜி துப்பாக்கி சுடுவதுபோல, ஏர் உழுவதுபோல, டிராக்டர் ஓட்டுவது போல, வாலிபால் ஆடுவதுபோல என பல வித்தியாசமான போட்டோக்கள் இடம் பெற்றிருந்தன.

● ''கு. அழகிரிசாமி செய்தித்தாட்களில் ஆபிச்சுரி பகுதியில் செய்திகளைத் தவறாகப் போடுகிறார்கள் என்று குறைப்படுவார் அடிக்கடி. அவர் நோய்வாய்ப்பட்டிருந்த போது, நான் போய்ப் பார்த்துவிட்டுத் திரும்புகையில், தலையணை அடியிலிருந்து ஒரு காகிதத்தைக் கொடுத்தார். அதில் இருந்தது அவரே எழுதின அவரது ஆபிச்சுரி செய்தி. 'தப்பாய்ப் போட்டு விடாமல் இருக்கத்தான் இப்படி' என்றார் நகைச்சுவையாக.'' — சொன்னவர் நா. பா. — இலக்கிய சிந்தனைக் கூட்டத்தில்.

—சின்ன கொலம்பஸ்



டிஸ்கோ துலாபாரம்








# TAMILNADU INDUSTRIAL DEVELOPMENT CORPORATION LTD.,

REGISTERED OFFICE :
735, ANNA SALAI, MADRAS-600 002.

## ACCEPTS/RENEWS DEPOSITS ON MONTHLY INTEREST PAYMENTS AT

| Number of years | 1 | 2 | 3 |
|---|---|---|---|
| Rate of interest per annum | $10\frac{1}{2}\%$ | $11\frac{1}{2}\%$ | $12\frac{1}{2}\%$ |

On deposits of charitable, educational, scientific research and benevolent institutions an increased rate of ½% is offered subject to production of satisfactory evidence.

**INTEREST PAID TO CHARITABLE INSTITUTIONS FULLY EXEMPTED FROM INCOME-TAX (SECTION 13 OF THE INCOME-TAX ACT 1961.)**

**INTEREST PAID TO OTHERS QUALIFIES FOR THE BENEFITS UNDER SEC. 80 L OF THE INCOME-TAX ACT 1961 UPTO Rs. 7,000.**

APPLICATION FORMS ARE AVAILABLE AT THE REGISTERED OFFICE

Particulars to be furnished as per Sub Rule (2) of Rule (4) of Companies (Acceptance of Deposits) Rules 1975 (as amended) framed under section 58A of the Companies Act 1956

(A) Name of the Company — TAMILNADU INDUSTRIAL DEVELOPMENT CORPORATION LIMITED

(B) Date of Incorporation of the Company — 21st May 1965

(C) Business carried on by the Company and its subsidiaries with the details of branches or units — TIDCO establishes and runs medium and large scale industrial units in the public and the joint sector in Tamil Nadu. So far, 21 units were established and 7 units are under implementation in the joint sector.

A mini steel plant is run directly by TIDCO as its unit at Arakkonam in North Arcot District.

**Subsidiaries**

Tamil Nadu Cements Corporation Ltd., Madras, is running two large cement plants one at Ariyalur, Trichy District and another at Alangulam, Ramanathapuram Dist. and an Asbestos Cement Sheet Plant at Alangulam.

Arakkonam Steels Ltd., Arakkonam has not yet commenced its activities.

Tamil Nadu Industrial Explosives Ltd., Katpadi is implementing an explosives project at Katpadi in North Arcot District.

Tamil Nadu Chemical Products Ltd., Madras-34, is manufacturing Sodium Hydrosulphite and Liquid Sulphur dioxide in its plant at Karaikudi, Ramanathapuram District.

(D) Brief particulars of the management of the company — The Company is a wholly owned enterprise of the Government of Tamil Nadu and is managed by the Board of Directors with the Chairman and the Managing Director to control the day-to-day affairs of the company.

(E) Names, addresses and occupation of the Directors

| Name of Directors | Occupation and Address |
|---|---|
| 1. Thiru C.V.R. Panikar, IAS. | Chairman, Tamil Nadu Industrial Development Corporation Ltd., 735, Anna Salai, Madras-600 002. |
| 2. Thiru S.J. Ambrose, BE, FIE | Chief Engineer (General), Public Works Department, Chepauk, Madras-600 005. |
| 3. Thiru C.Ramachandran, IAS. | Commissioner & Secretary to Govt., Finance Department, Madras-600 009. |
| 4. Thiru S. Sivasubramaniam, IAS. | Director of Industries & Commerce, Chepauk, Madras-600 005. |
| 5. Thiru M.A.K. Tayab, IAS. | Commissioner & Secretary to Government, Industries Department, Madras-600 009. |
| 6. Thiru B. Vijayaraghavan, IAS. | Chairman, Tamil Nadu Electricity Board, Madras-600 002. |
| 7. Thiru K. Venkatesan, IAS. | Managing Director, Tamil Nadu Industrial Development Corporation Ltd., Madras-600 002. |

(F) & (G) Profits of the company before and after making provision for tax and dividends declared by the company for the three preceding financial years (Rs. in lakhs)

| Year ended 31st March | Profit before tax | Profit after tax | Dividends declared |
|---|---|---|---|
| 1981 | 29.61 | 29.61 | Nil |
| 1982 | 159.78 | 159.78 | Nil |
| 1983 | 192.75 | 192.75 | Nil |

(H) Summarised financial position of the company as appearing in the two latest audited balance sheet of the company as at 31st March (Rs. in lakhs):-

| LIABILITIES | Figures for the year 1982 | Figures for the year 1983 | ASSETS | Figures for the year 1982 | Figures for the year 1983 |
|---|---|---|---|---|---|
| Share Capital | 3322.77 | 4072.77 | Fixed Assets | 326.57 | 319.01 |
| Reserves and surplus | — | — | Rolling Mill Project under construction | 13.08 | 321.09 |
| Secured loans | — | 200.00 | Investments | 3015.46 | 3188.55 |
| Unsecured loans | 2363.51 | 2658.74 | Current Assets | 762.50 | 842.79 |
| Current Liabilities and provisions | 767.89 | 855.86 | Loans & Advances | 1867.74 | 2772.02 |
| | | | Misc. expenditure | 38.27 | 42.11 |
| | | | Profit & Loss account | 442.55 | 249.60 |
| Total | 6454.17 | 7736.37 • | Total | 6454.17 | 7736.37 |

Brief particulars of contingent liabilities

| | | | As on 31.3.1982 | As on 31.3.1983 |
|---|---|---|---|---|
| | | | (Figures in lakhs) | |
| 1. | Claims not acknowledged as Debts | Rs. | 33.67 | 10.91 |
| 2. | Unclaimed liability in respect of partly paid shares | Rs. | 37.50 | 0.01 |
| 3. | Contracts remaining to be executed on Capital Account | Rs. | 80.83 | 269.37 |
| | | SF | 1.33 | — |
| | | $(£)$ | 410.40 | 429.80 |
| | | DM | 0.46 | — |
| | | Yen | — | 6.05 |
| 4. | Indemnity Bond to comply with the provisions of the Central Excise Rules | Rs. | 1.00 | 1.00 |
| 5. | Amount of guarantees issued by the Corporation either solely or jointly with co-promoter in favour of Financial Institutions | Rs. | 1405.24 | 288.26 |
| | | US $ | 103.35 | 8.28 |
| | | SF | 52.02 | |
| | | DM | 56.14 | |
| | | £ | 0.53 | |
| | | Yen | 156.09 | |
| 6. | Estimated liability on accrual basis towards gratuity | Rs. | 31.18 | 30.73 |

(I) (a) The amount which the company can raise by way of deposits as on 31.3.1983 as per rule — Rs. 932.42 lakhs
(b) Deposits actually held as on 31.3.1983 — Rs. 208.16 lakhs

(J) Over due deposits on the date of Advertisement — Nil

(K) It is hereby declared that :

i) the company has complied with the provisions of the Companies (Acceptance of Deposits) Rules 1975 (as amended);

ii) the said compliance does not imply that repayment of deposits is guaranteed by Central Government and

iii) the deposit accepted by the company are unsecured and shall rank pari passu with other unsecured liabilities.

**Note : This advertisement is issued on the authority and in the name of the Board of Directors of the company and the text of the advertisement has been approved by the Board of Directors of the Company at its meeting held on 30th June 1983.**

Place : Madras.
Date : 1st September, 1983.

By Order of the Board
K. KANDASAMY
Secretary

Note : A copy of the advertisement duly signed by a majority of the Directors of the company has been registered with the Registrar of Companies, Madras 6, pursuant to Rule 4 (4) of the Companies (Acceptance of Deposits) Rules 1975 (as amended).

# ஜங்ஷனிலே ஒரு மேம்பாலம்

ஏறி வந்த படிகள்

12

காசி - நல்லவனுக்கு நல்லவன் பொல்லாதவனுக்குப் பொல்லாதவன். வலுச்சண்டைக்கு வந்தால் விடமாட்டான். ஜங்ஷனுக்குப் பக்கத்தில் கடைவீதியில் சைக்கிள் கடை வைத்திருக்கிறான் காசி. குழந்தைப் பருவத்திலிருந்தே உடன் வளர்ந்து வந்த ஜெயாவைச் சகோதர பாவத்துடன் காண்கிறான். அவளுக்கு நல்ல கணவனாக அமைய வேண்டுமே என்று கவலைப்படுகிறான். ஆனால் அவளோ அவன் மீது பாசத்தை மட்டுமின்றிக் காதலையும் சொரிவது போல் தோன்றவே குழப்பத்தில் ஆழ்கிறான்.

மல்லானூர் கூட்ஸ் வாகன் கொள்ளை வழக்கில் பிடிபட்டுக் கம்பி எண்ணிக் கொண்டிருக்கும் கேடி வில்வம் விடுதலையாகி வெளியே வந்து காசியைப் பழிதீர்க்கக் காத்திருக்கிறான்.

அந்த ஊருக்குப் புதிதாக ஒரு பெண் வந்து சேர்கிறாள். ஜங்ஷனில் இறங்கி நடக்கும் அந்த அழகி கேடிகளிடம் சிக்காமல் காத்து அழைத்துப் போய் வீட்டில் சேர்க்கிறான் ஹரி. அவன் காசியின் ஆருயிர் நண்பன். தமாஷாகப் பேசி அனைவரையும் சிரிக்க வைப்பவன். அந்தப் பெண்ணின் பெயர் எஸ்தர். அவளைச் சந்தித்துப்பழகும் சந்தர்ப்பங்கள் காசிக்கு ஏற்பட, தன் மனத்தில் எழும் தேக்கங்களுக்கு அவள் உள்ளத்திலும் எதிரொலிகள் கிளம்புவது போல் உணர்கிறான். ஆனால் அவளோ வில்வத்தைப் பற்றி ஹரியிடம் ஓரிரு தடவை விசாரித்திருக்கிறாள். ஜெயாவுடைய போக்கினால் மட்டுமின்றி எஸ்தர் நடந்து கொள்ளும் விதத்தாலும் குழப்பமடைகிறான் காசி.

சைக்கிள் கடையில் கேடிகள் புகுந்து தாக்கியதையொட்டி மருத்துவமனையில் சில நாட்கள் இருந்து அனைவரையும் தன் அன்பாலும் சிநேக பாவத்தாலும் சிரிக்க வைத்துவிட்டுக் குணமடைந்து திரும்புகிறான் ஹரி. வில்வம் விடுதலையாகி வரும் நாளும் நெருங்குகிறது.

**கா**சி அந்தக் காலடியோசை மிகவும் நெருங்கி வருவதைக் கேட்டான்.

அது வில்வமா?

உருவம் தெரியவில்லை.

ஆனால் அவன் மனசில் உஷார் உணர்ச்சிக்கு முந்தி, எதையும் சந்திக்கிற துணிவிற்கு முந்தி ஒரே ஓர் எண்ணம் பூவாணம் போல் சீறிப் பூத்து உதிர்ந்தது.

## வையவன்



ஜெயா.

இன்னும் ஜெயாவுக்குச் செய்ய வேண்டிய கடமை ஒன்று பாக்கியிருக்கிறது. சரி, அதற்கு அவகாசமில்லை. அவள் பாதுகாப்பு! வில்வம் அவளைப் பார்ப்பது கூட அவனுக்குக் குமட்டிற்று.

''ஜெயா நீ உள்ளே போ'' என்று சீறுகிற தொனியில் கட்டளையிட்டான்.

அதன் வேகம் அவளைக் கீழ்ப்படிய வைத்தது. அவள் படிக்கட்டில் ஏறி உள்ளே போனாள். வீட்டிற்கு மேலிருந்த 'டாப்-லைட்' பளிச்சென்று எரிந்தது. ஜெயாதான் போட்டாள்.

அந்த வெளிச்சத்தில் வந்தவன் அதை எதிர்பார்க்காதவன் போன்று சற்றுப் பின் வாங்கிக் கண்கள் கூச இமை சுருக்கிக் கொண்டு நின்றான். மணி. நன்கு குடித்திருக்கிறான் என்பது. தூரத்திலிருந்தே வரும் சாராய நாற்றத்தில் தெரிந்தது.

மணிக்கும் காசிக்கும் இடையில் பத்தடி இடைவெளி இருந்தது. இருவரும் ஒருவரையொருவர் வெறித்துப் பார்த்தனர். ஓரிரண்டு நிமிஷம் ஏதோ கலவரம் நடப்பதற்கு முன்தோன்றும் ஒரு நிசப்தம் நிலவிற்று.

முதலில் மணிதான் பேச்சை ஆரம்பித்தான்.

''பயந்துட்டியா?''

காசி இளக்காரமாக, வெறுப்பு தெரிகிற மாதிரி ஒருமுறை கனைத்தான்.

''இன்னா விசயம்?''

மணியின் கண்கள் சிவந்து விட்டிருந்தன.

''ரொம்ப டாங்ஸ்ப்பா.''

காசிக்கு இவன் குடிவெறியில் பேசுகிறானா கிண்டல் செய்கிறானா என்று சந்தேகமாக இருந்தது.

''அரிக்குக் கூட டாங்ஸ்ப்பா. இன்ஸ்பெட்டர் மொய்லியாரு சொல்லி அனுப்பிச்சாரு. நீங்க ரெண்டு பேரும் ரிப்போட் குடுத்துட்டிருந்தா வகையா மாட்டிக்கினு இருப்படா மணின்னு.''

அவர்: ''ஆறு மாசம் கூட ஆகல்ல... அதுக்குள்ள பேண்ட் ஷர்ட்டைப் பாத்திரக்காரனுக்குப் போடப்போறயா? ''

மனைவி: ''சும்மா இருங்க. உங்களுக்கு ஒன்னும் தெரியாது. துணிகள் பழசாறதுக்குள்ள பாத்திரங்கள் விலை ஏறிடும்.''

—சிவலட்சுமி.



அப்போது கூட காசிக்கு அவன் மீது நம்பிக்கை வரவில்லை.

''நம்ம விசயத்திலே நீ கிராஸ் பண்ணிட்டேன்னுதான் கோவம் வந்துடுச்சி. தப்பா நெனைக்காதே.''

காசி மணியை அளவெடுப்பது போன்று அவன் கண்களைப் பார்த்தான். அவன் கைகளை, அவன் கால்கள் வைத்திருக்கும் போக்கை, தனக்கும் அவனுக்கும் மத்தியிலிருந்த இடைவெளியை, பக்கவாட்டில், அவனுக்குப் பின்னால் என்று காசியின் பார்வை பாய்ந்து எல்லாவற்றையும் ஒருதரம் நிச்சயித்துக் கொண்டது.

''நம்ப மாட்டேன்றே இல்லே?''

மணி குழறிக் கொண்டே கேட்டான்.

காசி பதில் சொல்லவில்லை.

''குடிச்சிட்டுப் பேசறேன்னு நெனைக்கிறே... இல்லே.''

காசி அவன் கால்களை மாற்றி வைப்பதையே கவனித்தான்.

''நெஜம்மாலும் சொல்றேன். நீ நம்பாகாட்டி போ... ரொம்ப டாங்ஸ்.''

''சரி.''

''அத்தோட போவணும்னு வரலே.''

''வேற இன்னா?''

''வில்வம் அண்ணாத்த சாயங்காலமா வந்துட்டாரு.''

''மெரட்டிட்டு வாண்ணு சொல்லி அனுப்பிச்சாரா?''

''அட.... இன்னாப்பா நீ கோவமாவே பேசறே?''

காசி அலட்சியமாகச் சிரித்தான். அந்தச் சிரிப்பில் வெறுப்பு பொங்கி வழிந்தது.

''நீ இன்னா ஒன்னாலும் நெனைச்சிக்கோ. நீ டேசன்லே ரிப்போட் குடுக்க மாட்டேன்னே பாரு... அது என்னை 'டச்' பண்ணிடுச்சி. ஒன் நன்மைக்காகச் சொல்றேன். நாளைக்கி ஒனக்கு கெடுவு வச்சிருக்காங்க. இப்ப வில்வம் அண்ணாத்த டைரிட்டா வந்து மாட்டிக்க மாட்டாரு. அவ்வளதான் சொல்வேன்... நீ ஜங்ஷன்ல இருக்க வாணாம்... பூடு... எங்கியாவது பூடு..''

கண்கள் உருண்டு உருண்டு சுழல அவன் நிற்க முடியாமல் தள்ளாடிக் கொண்டே சொன்னான். அவன் உண்மை பேசுகிறான் என்று காசிக்கு இப்போது திடமாயிற்று. அவன் சொன்னதை முழுக்கவும் நம்பினான்.

''அவ்வளதான். நான் வர்ட்டா?''

மணி வந்த வேலை முடிந்து விட்ட மாதிரி திரும்பித் தள்ளாடித் திணறிக் கொண்டு சாலைக்குச் செல்லும் மேட்டில் ஏறினான்.

ஜங்ஷனுக்குள் ஒரு ரயில் வந்து நிற்கும் ஓசை கேட்டது. திருப்பத்தூருக்குப்போகும் டாக்ஸியின் ஹாரன் ஒலி விட்டுவிட்டுப் பிரயாணிகளை அழைப்பது கேட்டது. காசி அங்கேயே நின்றான்.

பின்னாலிருந்து மெட்டி ஓசையும் மல்லை வாசனையும் வந்தன.

அவன் திரும்பினான்.

ஜெயா திண்ணையோடு நின்று கொண்டிருந்தாள்.

''நீ உள்ளே போய்ப் படு.''



"நான் சங்கீத வித்வான்னென்கிறதாலே அந்த கடையிலே புடவை வாங்கினேன்னு சொல்றீரு? அதுதான் இல்லே! ராகமாலிகா கடை வந்ததற்கப்புறம்தான் என் சம்சாரத்திற்கு என் சங்கீதமே பிடிக்க ஆரம்பிச்சுது."

**ராகமாலிகா சேலைகள்**
நெ. 12 நாகேஸ்வரராவ் ரோடு
பனகல் பார்க் அருகில்
தி. நகர், சென்னை-600 017
ஞாயிறு கடை உண்டு



REGD. No. 130727

சுவை, மணம் நிறைந்த
செண்பகம் பிராண்ட்
D.L.C பிராண்ட் நெய் -
உபயோகியுங்கள்.

- அக்மார்க் முத்திரையுள்ளது -




MFRS:-

# தனலட்சுமி & கோ

**நெய்மண்டி... திருப்பூர்-4.**

போன்: 21557

அவன் அசையவில்லை.

"அல்லாத்தையும் நான் கேட்டுக்கினு தான் இர்ந்தேன்."

அவன் ஜெயாவை ஏறிட்டுப் பார்த்தான்.

"போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் இந்த மாதிரி மணி வந்து சொல்லிட்டுப்போறான்னு ஒரு வார்த்தை சொல்லிட்டு வந்தா...?"

"எதுக்கு?"

"ஒரு பாதுகாப்புக்கு."

"மறுபடியும் மணியை மாட்டி வக்கவா... இவன் துரோகம் பண்ணிட்டான்னு அந்த வில்லம் இவனை ஒதிப்பான்..."

"அப்போ?"

"அப்போ இன்னு... இப்போ இன்னு பண்ணிடுவாங்க? பாத்துடலாமே."

அவனுக்கு அவன் அலட்சியம் எரிச்சலாக இருந்தது.

"அது சரி... இன்னு பண்ணிடுவானுங்கன்னு... பண்ணிட்டதுக்கு அப்புறமா தான் பார்க்கனும்."

அவன் கயிற்றுக் கட்டிலை நிமிர்த்தினான். உள்ளே போய் ஒரு ஜமக்காளத்தையும் தலையணையையும் எடுத்து வந்து கட்டிலின்மீது போட்டான். அவன் நிதானத்தையும் அலட்சியத்தையும் பார்த்துக் கொண்டு அங்கேயே நின்று கொண்டிருந்தாள்.

"ஏன் நின்னுக்கினு கிறே... வெளக்க அவிச்சுட்டுப் போயிப் படு."

அவள் தலையணை மீது சாய்வதைப் பார்த்தவாறே நின்றான்.

"அவ்வளவுதான்... குடுத்து வச்ச மகராசன்... நிம்மதியா தூங்கிடுவே..."

அவன் தலையைத் திருப்பினான்.

அவள் கைவளையல்களை ஒவ்வொன்றாக எடுத்து எடுத்து விட்டபடி பேசினாள்.

"யாரு எப்படிப் போனா ஒனக்கு இன்னு... நீ யாரை நம்பிக்கினு கிறே... அவனுங்க வந்து இன்னு பண்ணாலும் ஒனக்குக் கவலையில்லே..."

'அட பைத்தியமே' என்று தனக்குள் நினைத்தான் காசி.

"கவலைப்படறதுன்னாலும் இனிமேதான் படுவே... அதுக்கு தான் இப்ப புதுசா ஆள் ஆட்டுறீயே!"

சந்தேகப்பட்டது சரிதான். அவளது முந்தைய மௌனம், காரணமாகத்தான்... எஸ்தர்... எஸ்தர்...

ஜெயா திடீரென்று விம்மினாள். அவன் பார்வை அவளை நோக்கி நகர்ந்தது.

அந்த விம்மல் சிறிதாய்த் தொடங்கிற்று. அடுத்து அடுத்து என்று அதன் ஓசைகள் வலுத்துக் கொண்டே போயின. அவன் கட்டிலில் படுத்தவன் எழுந்து உட்கார்ந்தான்.

"இத பாரு... ஜெயா... இன்னு நடந்து பூடுச்சின்னு அழுவறே? அவனுங்க வந்து மெரட்டிட்டா என் உசிரைக் காப்பாத்திக்க எனக்குத் தெரியாதா?"

அவள் தேம்பித் தேம்பி விம்மினாள். காசி கட்டிலில் அமர்ந்தபடியே அவள் தலையைத் தடவிக் கொடுத்தான்.

---

"பலவிதமான பல் நோய்கள் பற்களைச் சுத்தப்படுத்தப் பயன்படுத்தும் டூத் பிரஷ்ஷிலிருந்தே வருகின்றன" என்று எச்சரிக்கிறார் டாக்டர் வி. எஸ். ராமன். டூத் பிரஷ்ஷை பாத்ரூமின் ஒரு மூலையில் எறிந்து விட்டுப் போகிறோம். மறு நாள் காலைக்குள் அதில் ஏகப்பட்ட பாக்டீரியாக் கிருமிகள் குடிபுகுந்து கொள்ளும். பிரஷ்ஷை வெய்யிலில் காய வைக்க வேண்டும் அல்லது ஸ்டெரிலைஸ் பண்ண வேண்டும். டேபிள் ஸால்ட் பயன்படுத்தி விரலால் தினம் ஈறுகளை மஸாஜ் செய்வது ஆரோக்கியமாய் வைத்திருக்க வழி.



## மாமனிதர் யார்?



வாசகர் தீர்ப்பு

**1983**-ம் ஆண்டின் மாமனிதர் தமிழக முதல்வர் எம். ஜி. ஆர். அவர்களே என்று ஐயப்பாட்டுக்கு இடமின்றி கல்கி வாசகர்கள் தீர்ப்பளித்திருக்கிறார்கள்.

எம். ஜி. ஆருக்கு அடுத்தபடியாக அன்னை தெரஸாவே மாமனிதராகக் காட்சி தருகிறார், நமது வாசகர்கள் மதிப்பீட்டில்.

அப்புறம்தான் மற்ற மற்றவர்களெல்லாம்!

"நமக்குச் சம்பந்தப்பட்டவர்களிடம் பிரியம் காட்டி உதவுவது அன்பு; சம்பந்தப்படாதவரிடமும் அன்பு செலுத்தி உதவுவது அருள்" என்று விளக்கம் தருகிறார் திருமுருக கிருபானந்த வாரியார்.

அருளுடையவர்களை நமது வாசகர்கள் எவ்வளவு உயர்வாக எண்ணுகிறார்கள் என்பதை இம்மாமனிதர் தேர்வு உணர்த்துகிறது.

பல்வேறு மேன்மக்களை மாமனிதரெனத் தேர்ந்தெடுக்க வாசகர்கள் கூறும் காரணங்கள் ரசமானவை. அவை அடுத்து வரும் சில இதழ்களில் பிரசுரமாகும்.

மேலட்டை வண்ணப்படம்: யோகா

---

"பைத்தியம் மாதிரி அலறாதே. ஒன்னை அநாதையா வுட்டுட்டு நான் பூடுவேன்னு நெனக்கிறியா... அப்படியே போறதா இர்ந்தாலும் இந்த உசிரு ஒன்னை ஒரு பொறுப்பானவன் கைல ஒப்படைக்கிற வரிக்கும் போவாது..." காசியின் குரல் திடீரென்று கனமுற்றது. அதில் அவன் வாழ்வின் அர்த்தம் முழுவதும் எதிரொலிப்பது போன்று ஒரு தொனி வந்தது.

அவள் தேம்பிக் கொண்டிருந்தவள் சட்டென்று நிறுத்தினாள். கண்களிலிருந்து மாலை மாலையாக நீர் கொட்ட அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

"ஒர்த்தன் கைல ஒப்படைக்கறதுக்கு நீ யாரு?"

அவனுக்குக் கன்னத்தில் பளாரென்று அறைந்தது போலிருந்தது.

"நானு... நானு கேசவ நயினா புள்ளெ... அவரு வளத்திருந்தாலும் கூட அவரு புள்ளெ... ஒனக்கு அண்ணன்."

அவன் வாயிலிருந்து இதுவரையில் அந்த வார்த்தை வந்ததில்லை. இதைச் சொல்வது கூட அவனுக்கு ஏதோ டிராமா சினிமாவில் சொல்வது மாதிரி சொல்லவே கூச்சமாக இருந்தது. ஆனால் இதைச் சொல்ல வேண்டிய நேரம் வந்துவிட்டது. சொல்லியே ஆக வேண்டிய நிர்ப்பந்தம் நேர்ந்து விட்டது என்று காசி தனக்குள் ஏற்பட்ட கசப்பை விழுங்கினான்.

ஜெயா ஆணியறைந்த மாதிரி நின்று விட்டாள். தலையில் பட்டென்று அந்த வார்த்தை அடித்தது. அதை விட மேலாக ஒரு நிரபராதி போல், ஓர் அநாதைபோல் எவ்வித மாசு மறுவும் காண முடியாத ஒரு வேதனையோடு சொன்ன விதம் அவள் மண்டையில் விழுந்தது. ஆற்று வெள்ளம் வந்து சரசரவென்று ஒரு புற்று கரைந்து கரைந்து நீரோட்டத்தில் அடித்துச் செல்வது மாதிரி எதுவோ தன்னிடமிருந்து உதிர்ந்ததை அவள் உணர்ந்தாள்.

அது உதிர்ந்தது. இடிந்தது. இளகியது. உருகியது. கரைந்தது. மெதுவாக, மெதுவாகக் கொஞ்சம் கொஞ்சமாகக் காணாமற் போனது. அந்த உணர்வுகளின் அதிர்ச்சியை அவளால் தாங்க முடியவில்லை.

மயக்கம் வரும் போலிருந்தது. தள்ளாடி விழுந்து விடுகிற மாதிரி தோன்றிற்று. ஜெயா சமாளித்துக் கொண்டாள். தலை குனிந்து மெதுவாக வீட்டிற்குள்ளே சென்றாள்.

வெகு நேரம் வரை வீட்டின் உள்ளே இருந்து எந்த ஓசையும் கேட்காமல், விழித்திருந்தான் காசி. டாப்-லைட் எரிந்துகொண்டிருந்தது. அதை வேண்டுமென்றே எரிய விட்டுக் கொண்டிருக்கிறாளா? இல்லை மறந்து விட்டாளா? அவனுக்குப் புரியவில்லை.

அவன் விழித்துக் கொண்டே படுத்திருந்தான். உள்ளே போய் விளக்கை அணைத்து விட்டு வரலாமா என்று ஒரு முறை தோன்றிற்று. ஆனால் போகத் தயக்கமாய் இருந்தது. தான் சொன்ன அந்த வார்த்தை அவளை என்னவோ செய்து விட்டது என்பதைக் காசி நன்றாய் உணர்ந்தான்.

ஹரியிடம் அவள் தன் மனசைத் தெரிவிப்பதற்கு முன்னே அதைச் சொல்லியிருக்கக் கூடாதா என்று வருத்தமாக வந்தது. அதைச் சொன்ன பின்பு அதன் விளைவுகள் என்ன? ஆராய்கிற மாதிரி அவள் உள்ளே போனதற்கு அப்புறம் வீட்டில் நுழைந்து விளக்கை அணைக்க அவன் விரும்பவில்லை.

காசி விழித்து விழித்துக் கண் சோர்ந்து எப்போது தூங்கினானோ அவனுக்கே தெரியவில்லை. திடீரென்று ஒரு நேரமாக விழிப்பு வந்தபோது மெய்ன் ரோடில் ஒன்றைத் தொடர்ந்து ஒன்றாக லாரிகளின் கியர் மாற்றும் ஓசைகள் காதில் விழுந்தன. மணி ஒன்றாவது இருக்கும் என்று அவனுக்குத் தோன்றிற்று.

இன்னும் டாப்-லைட் எரிந்து கொண்டிருந்தது. காசி எழுந்து விளக்கை அணைக்க உள்ளே போனான். உள்ளே ஜெயா பாய் மீது கவிழ்ந்து படுத்திருந்தாள். தலையணையில் ஒருக்களித்திருந்த அந்த முகம் அமைதியான தூக்கத்தில் ஆழ்ந்திருந்தது.

பெண்... எவ்வளவு ஆழமானவள். ஒன்றாகவே பதினெட்டு வருஷம் வளர்ந்து கூட கண்டுபிடிக்க முடியாமல் என்ன ஆழம்!

அவன் விளக்கை அணைத்து விட்டு வெளியே வந்தான்.

(தொடரும்)

# தாத்தா வருவார் முன்னே...



தாத்தா மியூசிக் சீசனுக்காகச் சென்னை வரப்போகிறார் என்று அறிந்ததுமே எனக்கு அரைப் பிராணன் போன மாதிரி ஆகி விட்டது.

தாத்தா என்றால் நீங்கள் ரொம்ப இளக்காரமாக ஏதோ 85, 90 வயதுத் தாத்தா என்று நினைக்கக் கூடாது. 84தான் ஆகிறது வயது.

சங்கீதத்தில் தாத்தாவுக்கு இருக்கிற ஈடுபாடு சொல்லி முடியாது. ஜக்கனிராஜ என்று பாத்ரூமில் பாட ஆரம்பித்தால் (வெளியே வந்த பிறகுதான் "தாத்தா அது ஜக்கனி ராஜ இல்லை; சக்கனி ராஜ!" என்று சொல்ல முடியும்) அநுபல்லவியில் வேறு ஒரு பாட்டுக்குத் தாவி விடுவார். அத்தனை அபார சங்கீத ஞானம். பாகவதர் கல்யாணி பாடினால் "என்ன லதாங்கி பாடறான்!" என்பார். ரீதிகௌளை பாடினால் "ஆபேரியை இன்னும் சரியாப் பாடத்தெரியாம என்னத்துக்கு மேடைக்கு வரணும்!" என்று சத்தம் போடுவார். சண்முகப்ரியாவும், சிம்மேந்திர மத்யமமும் அவருக்கு ஒன்றுதான். "என்னடா பெரிய வித்தியாசத்தைக் கண்டுட்டே?" என்று கையை (வாக்கிங் ஸ்டிக்கோடு சேர்த்து) ஓங்குவார். எதற்கு வம்பு என்று ஒதுங்கியவன் நான். அப்படிப்பட்ட தாத்தா வருகிறார் என்றால் ஏன் குலைநடுங்காது?

தாத்தாவுக்கு நல்ல(!) சாரீரம். மார்கழிக் குளிரில் பிர்க்காக்கள் அப்படியே உதிரும். (குளிரில்) உடம்பே குலுங்கப் பிர்க்காக்களை உதிர்க்கும் ஒரே பாடகர் தாத்தாதான். இதில் அம்மாவுக்கு ஏகப் பெருமை வேறு. "சங்கீதம் பரம்பரையாவே எங்க ரத்தத்துல ஓடறதுடா!" என்பாள். ஏ குரூப், பி குரூப் மாதிரி 'சங்கீத ரத்தம்' என்று உண்டோ? அதுவும் எப்பேர்ப்பட்ட 'சங்கீதம்'! பூர்வ ஜன்மத்தில் யாராவது மோசமான சங்கீத வித்வான் எங்கள் குடும்பத்துக்கு ரத்த தானம் செய்திருக்கிறாரோ என்னவோ?

அம்மா பாடினால் கேட்கவே வேண்டாம். "நீ பாடிப் பாடித்தான் அப்பா அல்பாயுசில் போயிட்டார்!" என்று அண்ணா அம்மாவிடம் ரொம்ப அந்நியோன்யமான சமயத்தில் சொல்லிவிட்டு அடி வாங்காமல் தப்பித்துச் சென்றதுண்டு...

தாத்தாவை வரவேற்க சென்ட்ரல் ஸ்டேஷனில் நான் நின்றபோது மங்களூர் மெயிலிலிருந்து இறங்கினார் தாத்தா.

''எத்தனை ப்ரோக்ராம்டா இதுவரை ஆச்சு? எதுக்கெல்லாம் போனே?'' என்றார் எடுத்த உடனே.

''எல்லாம் நடந்திண்டிருக்கு தாத்தா. நீங்க நிறையக் கேக்கலாம்!'' என்றேன் துக்கத்தை அடக்கிக் கொண்டு. அத்தனைக்கும் கூடப் போக வேண்டுமே! பொடி போட்டுக் கொண்டுவிட்டு, அவர் கச்சேரி நடுவில் போடுகிற ராட்சதத் தும்மல்களையும் இருமல்களையும் கேட்டு யாரும் எங்களை முறைத்துப் பார்க்கக் கூடாதே என்று திருப்பதி வேங்கடாஜலபதி முதல் பிட்ஸ் பர்க் வேங்கடாஜலபதி வரை வேண்டிக் கொண்டுதான் போவேன். இதற்கு நடுவில் தாத்தா பாப்கார்ன் சாப்பிடணும் போலிருக்கு என்பார். ராகம் தானம் பல்லவியின் போது மட்டும் தாத்தாவுக்கு எப்படி மூக்கில் வியர்க்கிற மாதிரி பாப்கார்ன் சாப்பிடத் தோன்றுகிறது? எனக்கு இது நாள்வரை புரிபடாத கேள்வி இது. பாப்கார்ன் பாக்கெட் உண்டாக்கும் நரநர சத்தம் வெகு உச்ச ஸ்தாயியில் கேட்க, தாத்தா பாப்கார்ன் சாப்பிடும் அழகே அலாதி. பாகவதர் முகத்துக்கு எதிரே பாப்கார்ன் சாப்பிட்ட ஒரே ரசிகர் தாத்தாவாகத்தான் இருக்க முடியும்.

கையில்லாத ஸ்வெட்டர்; அதன்மேல் ஒரு முழுக்கை ஸ்வெட்டர், காது, கன்னம், தலை எல்லாம் சேர்த்து இறுகக் கூடிய உல்லன் மஃப்ளர். இதற்கு மேல் தாரிவால் கம்பளி ஒன்றை இழுத்து உடம்போடு போர்த்துக் கொண்டு என்ன கச்சேரி கேட்க வேண்டியிருக்கிறது? 'எனக்கு உங்க கூட வர்ரதுக்கு வெக்கமாயிருக்கு தாத்தா!' என்று ஒரு பேரன் சொல்லிவிட்டு ஒதுங்கி விட முடியுமோ? ஏதோ படுத்துக்கொண்டு தூங்கப் போகிறவர் மாதிரி எதற்கு இந்தத் தடிக் கம்பளி எல்லாம் — என்றால் கேட்க மாட்டார். காதில் இவ்வளவு இறுக்கமாக மஃப்ளர் சுற்றிக் கட்டினால் என்ன பாட்டுக் கேட்கும் என்று இதுவரை நானும் கேட்டதில்லை. தாத்தாவும் பதில் சொன்னதில்லை.

தாத்தா, காலையில் நடக்கும் லெக்சர் டெமான்ஸ்ட்ரேஷன்களையும் விட்டு வைப்பதில்லை. அண்டார்ட்டிகாவில் கிராமிய இசை பற்றிப் பேச்சு நடந்தாலும் போவார்! மீரா பஜன் எல்லாம் மீரா எழுதினதே இல்லை என யாராவது சொன்னால், தாத்தா சப்போர்ட் அவருக்கு நிச்சயம் உண்டு. ''ராஜாவே பாட்டு எழுதலைன்னு பாலசந்தர் சொல்றார். அப்போ எப்படிடா ராஜாவோட பொண் பாட்டு எழுத முடியும்?'' என்று சண்டைக்கு வந்தவர் தாத்தா.

வாத்திய ஆராய்ச்சியிலும் அநியாய(!) நாட்டம் உண்டு தாத்தாவுக்கு. மிருதங்கத்துக்கும் டோலக்குக்கும் இடைப்பட்ட வாத்தியம் கண்டுபிடிக்கிறேன் பேர்வழி என்று வீட்டில் இருந்த ஒரே மிருதங்கத்தைத் தொப்பி வேறு உடம்பு வேறு என்று உடைத்துப் போட்டதுமல்லாமல், மயிலாப்பூர் மிருதங்க ரிப்பேர்க்காரருக்கு நூறுரூபாயையும் தொலைத்துவிட்டு வந்தது அவ்வளவு எளிதில் மறக்கக் கூடிய விஷயம் அல்ல. இரண்டு கஞ்சிராவைச் சேர்த்து ஒரு மிருதங்கம் பண்ணலாம் என்று யாருக்கும் தோன்றாத புது உத்திகள் தாத்தாவுக்கு மட்டுமே தோன்றும். இதனால் பல சேதங்களும், சேதாரங்களும் உண்டாகும் என்பது வெளிப்படை. ஆனால் ''எதையும் சயன்ட்டிஸ்ட்டோட ஐடியாவுலே பார்க்கணும்டா அப்பத்தான் புதுசா புதுசாக் கண்டுபிடிக்கலாம். இல்லேன்னா பழசையே கட்டிண்டு அழ வேண்டியதுதான்!'' என்பார். பழசைப் பாழாக்கியவர் செய்த உபதேசம் இது....

''என்னமாப் பாடறார் வித்வான்! மதுரை மணி பாணி!'' என்று முதல்நாள் இரவு கச்சேரி கேட்டுவிட்டு வந்து பாராட்டினார் தாத்தா. சற்றைக்கெல்லாம் ஹைதராபாத்திலிருந்து ஓர் அவசரத் தந்தி வந்தது: மாமாவுக்கு உடம்பு சரி இல்லை என்று. தாத்தா பதறிக் கொண்டு புறப்பட்டார்.

''கவலைப்படாமல் போங்கள் தாத்தா. மாமாவுக்கு ஒன்றும் இருக்காது!'' என்று அனுப்பி வைத்தோம். ''அதுக்கில்லேடா! அநியாயமா கச்சேரி எல்லாம் கேட்க முடியாம போறதே!'' என்று ரொம்பவும் ஆதங்கப்பட்டார்.

வண்டியிலேற்றி விட்ட பிறகும் கூட. ''நான் சீக்கிரமா வந்துடறேன்!'' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார்.

''வாங்கோ! மெட்ராஸ்ல கச்சேரிக்கு என்ன பஞ்சம்? பொங்கல் வரைக்கும் ராம கான சபா சேஷராமன் கூட ஏதோ யக்ஞம் மாதிரி நடத்தறார். வந்து நன்னாக் கேட்கலாம்!'' என்று ஆறுதல் சொன்ன பிறகே தாத்தா மனச்சமாதானம் அடைந்தார்.

எப்போ வருவாரோ — என்று நானும் பயந்து கொண்டேயிருக்கிறேன்! எக்ஸ்பர்ட்ஸ் கமிட்டியில் சேர வேண்டுமாம் அவருக்கு.

செய்தித்தாளின் கனத்தில் மூன்றில் ஒரு பங்கு அளவில் இரும்புத் தகடுகள் தயாரிக்க முடியும் என்றால் நம்புவது கடினமே! ஆனால் இது சமீபத்திய உண்மைச் செய்தி! ஜப்பான் நாட்டிலுள்ள ஒரு நிறுவனம் இந்தச் சாதனையைச் செய்துள்ளது.

—ஆ. சந்திரசேகரன்.





★

பாஸ்கர்: ராத்திரியிலே வீட்டுல ஏதாவது சின்னதா சத்தம் வந்தாக் கூட திருடங்கன்னு எழுப்பிடறா என் பெண்டாட்டி.
சங்கர்: திருட வர்றவங்க அப்படியெல்லாம் சத்தம் போட்டு மாட்டிக்க மாட்டாங்கன்னு சொல்றதுதானே?
பாஸ்கர்: சொன்னேன். அப்படிச் சொன்னதே வம்பாப் போச்சு. இப்பல்லாம் நிசப்தமா இருந்தாக்கூட சந்தேகப்பட்டு எழுப்பிடறா.



★

ஆசிரியர்: சரித்திர நாவலாசிரியர் என்ன தகராறு பண்றார்?
இணை ஆசிரியர்: அவருடைய கதைக்குப் பரிசா நாம் கொடுக்கிற மொபெட் வேண்டாமாம். ஆறு குதிரைகள் பூட்டின தேர்தான் வேணுமாம்.



★

மானேஜர்: கிளார்க் ராமசாமியை நீங்க குடையால அடிச்சிட்டீங்களாமே?
டைப்பிஸ்ட்: ஆமாம் சார். ஆனா எனக்கு அந்த எண்ணம் கொஞ்சம் கூட இருக்கலே.
மானேஜர்: எந்த எண்ணம்?
டைப்பிஸ்ட்: குடையை ஒடைக்கிற எண்ணம்!

கே. உமா,
பி. காம். இரண்டாம் ஆண்டு.
மதுரை பல்கலைக்கழகம்.

ஏ! சிகரெட்டே!

துயரத் தோணியில்
ஏறியவர்க்கு
நீ
துடுப்பாக உதவுகிறாயாம்;
ஆயினும் முடிவு
மூழ்குதல்தானே?

உன்னைத் தாங்கும்
பெட்டிகள்
மனிதரின் சவப்பெட்டிக்கு
மாதிரிகள்.



'தெய்வம்
நின்று கொல்லும்'
என்றால் நீயும்
தெய்வத்திற்குச் சமம்.
ஏனென்றால்
உனக்குக் கொள்ளி
வைப்பவர்களுக்கு
காத்திருந்தல்லவா நீ
கொள்ளி வைக்கிறாய்.

புற்று நோய்க்கு
வித்தான உன்னை
எத்தனை நுரையீரல்கள் தினம்
தத்தெடுக்கின்றன!

சி. நப்பின்னை,
இளங்கலை மூன்றாம் ஆண்டு (அரசியல்),
எஸ்.ஐ.ஈ.டி. மகளிர் கல்லூரி, சென்னை.

---

எங்கள் கல்லூரி உடற்பயிற்சி ஆசிரியர் ஒரு முன்னுதாரணமாகத் திகழ்பவர். பஞ்ச கச்சம் வேஷ்டியும், தூய வெள்ளை நிறக் கதர் ஜிப்பாவும், நெற்றியில் திருநீறு சந்தனப் பூச்சும், தலையில் குடுமியுமாக அமைதி தவழும் முகத்துடன் இவர் இருப்பதைப் பார்த்தாலே நம் மனத்தில் அச்சமும் பக்தியும் தானாகவே தோன்றும். இவர் பாரதத்தின் மிகச் சிறந்த நல்லாசிரியராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு ராஷ்டிரபதி விருது பெற்றவர். இவர் தானாகத் தயாரித்து ஜிப் வைத்துத் தைத்திருக்கும் ஒரு பல அறைகள் கொண்ட பையைத்தான் கல்லூரிக்குக் கொண்டு வருவார். அதில் ஒரு சிறு தொழிற்சாலையே அடங்கியிருக்கும். பல கருவிகள், உபகரணங்கள், எல்லாமே அதற்குள் இருக்கும். எதற்கும் யாரையும் எதிர்பார்க்கக் கூடாது என்ற கொள்கை உடைய திரு. ஹரிஹரன் இங்கு பயில்வோரின் குறைகளைத் தந்தையைப் போலக் கேட்டுக் கவனித்து ஆவன செய்கிறார்.

ஜெயா சுந்தரராமன்,
பி. எட். மாணவர்.
அழகப்ப செட்டியார் ஆசிரியர் பயிற்சி
கல்லூரி, காரைக்குடி.



''இப்ப என்னம்மா செய்யறது?'' என்றேன். ''ஊரார் பணம் நமக்கு வேண்டாம்ப்பா. மீதி மாத்திரைகளுக்கான பணத்தைக் கொண்டு போய்க் கொடுத்திடு'' என்றாள் அம்மா. நடந்தது இது தான். 'பூமா மெடிக்கல்ஸில்' பிரிஸ்கிரிப்ஷனை நீட்டி பில்லுக்குப் பணம் கொடுக்கப் போகும் போது தான் தெரிந்தது கையில் அவ்வளவு பணமில்லையென்று. கடைக்காரர் நாலு மாத்திரைகளைக் குறைத்து பில் போட்டு உரிய பணத்தை வாங்கிக் கொண்டார். 'பாக்' செய்த சிப்பந்தி கவனப் பிசகாக மாத்திரைகளைக் குறைக்காமலே கட்டித் தந்து விட்டார். விலையுயர்ந்த மாத்திரைகள். கிட்டத்தட்ட எட்டு ரூபாய் கணக்கில் உதைக்கும். பாவம் அந்தக் கடை முதலாளி. முப்பத்திரண்டு ரூபாய் நஷ்டப்படுவாரே என்ற பரிதாபம் என்னுள் சுரந்தது.

மறுநாள் கடைக்காரரிடம் சென்று விஷயத்தைக் கூறி மீதிப் பணத்தையும் கொடுத்தேன். கடைக்காரருக்கு ஒரே சிரிப்பு. ''உங்களைப் போல நாலு பேர் இருக்கிறதாலே தான் தம்பி, நாட்டிலே மழையே பெய்யறது'' என்று மனமாறப் பாராட்டினார். எனக்கும் பெரும் சுமையை இறக்கிய நிறைவு. அன்று மாலை அபிராமி அம்மன் கோவிலில் பிராகாரத்தைச் சுற்றி பிள்ளையாரை வலம் வந்து கொண்டிருந்தேன். 'தம்பி' என்ற குரல். எதிரே 'பூமா மெடிக்கல்' சிப்பந்தி. ''ஏந்தம்பி பெரிய யோக்கியனாட்டம் அந்த ரூபாயைக் கொண்டு வந்து கொடுக்காட்டி என்ன? 'பூமா மெடிக்கல்ஸ்' நொடிஞ்சா போயிடும்? இப்படி வியாபாரம் நடந்தா, என் தலையிலே துணியைப் போட்டுக்க வேண்டியது தான்னு, முதலாளி என்னை வீட்டுக்கு அனுப்பிச்சிட்டாரு. மகராசன்! எப்படியோ என் பிழைப்பிலே மண்ணைப் போட்டுட்டே. திருப்திதானே ஒனக்கு?'' வயிற்றெரிச்சலுடன் கேட்டுவிட்டு அவர் திரும்பிப் பாராமல் போய் விட்டார். நான் இடிந்து போய் நின்றேன். அடக்கடவுளே! நான் நல்லது நினைத்துச் செய்ய, அது ஒரு ஏழையின் தலையில் இடியாய் விழுந்து விட்டதே. என் நாணயத்தில் ஒரு பக்கத்தைப் பார்த்துக்கொண்ட நான், மறுபக்கம் எப்படியிருக்கும் என எண்ணிப் பாராதது தவறுதானே? ஒன்றும் விளங்காமல் விநாயகரைப் பார்த்தேன். துயர் துடைக்கும் அந்தத் தும்பிக்கையோன் முகம், என் குழப்பம் கண்டு சிரிப்பது போலிருந்தது.

கே. ஆனந்த்.
முதலாண்டு பி. எஸ்ஸி. கெமிஸ்ட்ரி,
ஜி. டி. என். கலைக்கல்லூரி,
திண்டுக்கல்.

# நாணயத்தின் மறுபக்கம்





# மாணவர் பக்கம்



## கட்டாயத் தேர்ச்சி!

சமீபத்தில் தேர்வு விடைத்தாள்கள் திருத்திக் கொண்டிருந்த எனக்குத் தெரிந்த ஆசிரியர் ஒருவர் திடீரென்று பென்சிலை எடுத்து இடது கையால் விடைத்தாளில் சில விடைகளை எழுத ஆரம்பித்தார். வலது கைக்காரர் இடது கையால் தாளில் எழுதிய எழுத்து சிறுபிள்ளை எழுத்து போல இருக்கவே எதற்காக இவ்வாறு எழுதுகிறீர்கள் என்று நான் கேட்ட கேள்விக்கு அவர் சொன்ன பதில்:

''மாணவர்களை மூன்றும் வகுப்பு வரை அவர்களது வருகை நாள் 75 சதவீதம் இருந்தால் அவர்களுக்குத் தேர்ச்சிகொடுக்கப் பட வேண்டும் என்று ஒரு வழக்கு நடைமுறைக்கு வந்துள்ளது. அதேசமயம் அவர்களுக்கு மதிப்பெண்களும் குறைவாக இருத்தல் கூடாது. எனவே நான் மாணவனைப் போல் கிறுக்கெழுத்து எழுதி அதற்கும் மதிப்பெண் போட்டுக் கொள்கிறேன்'' என்று போட்டார் ஒரு போடு.

நான் சிரிப்பதா, அழுவதா என்று புரியாமல் திகைத்தேன்.

இதுகுறித்துப் பள்ளி ஆசிரியர் பலரை அணுகிக் கேட்ட போது அவர்கள் கூறிய தகவல்கள் மாணவர்களின் இளம் பருவக் கல்வி நிலை அச்சமூட்டுவதாக உள்ளது.

எல்லா ஆசிரியர்கள் மட்டுமின்றிப் பல பெற்றோர்களும் இந்தச் சட்டத்தினால் உள்ள தீமையே அதிகம் என ஒத்துக் கொள்கிறார்கள்.

''இன்றைய கிராமத்தின் பல சிறுவர்கள் மதியம் பள்ளியில் அளிக்கப்படும் உணவுக்காகத்தான் பள்ளிக்கு வருகிறார்கள். இவர்களும் காலையில் பள்ளி வந்து, மதிய உணவை முடித்துவிட்டு மதிய வகுப்பிற்கு வராமல் சென்று விடுகிறார்கள்.

பள்ளிக்கு வந்தாலும் வராவிட்டாலும் நாம் பாஸ் என்ற நிலை மாணவர்களுக்கு நன்றாய்த் தெரிகிறது. எனவே ஆசிரியர்களின் அச்சுறுத்தல்கள் மாணவர்களிடம் எடுபடாமல் போகிறது.''

இவ்வாறாக ஒரு பஞ்சாயத்து யூனியன் பள்ளி தலைமையாசிரியர் தெரிவித்தார்.

இதுபோல மற்றொரு பள்ளி ஆசிரியர் கூறிய கருத்து: ''இப்பள்ளியில் சத்துணவு உண்ணும் மாணவர்களின் எண்ணிக்கை 150. என்னதான், சத்துணவு பொறுப்பாளர்கள் போடப்பட்டாலும், அனைத்தையும் நிர்வாகம் பண்ணுவது கடினம். எனவே, நாங்கள் எங்கள் பள்ளியில் உள்ள ஒன்றும், இரண்டாம் வகுப்பு ஆசிரியர்களை 12 மணியளவில் உதவிக்கு அழைத்துக் கொள்கிறோம். அவர்களும் இக்கிராமத்தில் இருப்பவர்கள். ஆதலால் "இவ்வேலைகளில் ஈடுபடக் கௌரவம் பார்ப்பதில்லை.''

நிலைமை இவ்வாறு இருந்தால் மாணவர்களுக்குப் பாடம் அளிப்பது எப்போது?

''எங்கள் பள்ளியில் 5 வகுப்புகள் உண்டு. 3 வகுப்பு வரை கட்டாய தேர்ச்சி அளித்து விட்டு 4—வது வகுப்பில் திறமை அடிப்படையில் தேர்ச்சி செய்ய நினைத்தால் 20 சதவீத மாணுக்கரே தேர்ச்சி அடைவர். எனவே எங்கள் பள்ளியில் 5—வது வகுப்பு வரை எல்லோரையும் தேர்ச்சி பெறச் செய்து அனுப்பி விடுவோம்'' என்கிறார், மற்றொரு பள்ளியின் ஆசிரியர்.

இத்திட்டம் கொண்டு வரப்பட்டபோது சொன்ன காரணம் இளம் மாணவர்கள் தோல்வியடைந்து கல்வியில் நம்பிக்கை இழந்து விடக் கூடாது என்ற எண்ணத்தால் கொண்டு வரப்பட்டது எனவும், மேலைநாடுகளில் உள்ள கல்வித் திட்டத்தைப் பின்பற்றி இத்திட்டம் கொண்டு வரப்பட்டதாகக் கூறப்பட்டது.

நமது நாட்டுச் சூழ்நிலைக்கும், மாணவர்களின் மனத்திறனுக்கும் பொருந்துகிறதா எனப் பார்க்கத் தவறி விட்டார்கள்.

ஆனால் படித்த பெற்றோர்களின் குழந்தைகள் மட்டும் இம்முறையில் பாதிக்கப்படுவதில்லை. ஏனென்றால் அவர்களே தம் குழந்தைகளுக்கு அடிப்படைக் கல்வியைத் தந்து விடுகின்றனர்.

அவசரமாக ஆலோசிக்க வேண்டிய பிரச்சினைகளில் இதுவும் ஒன்று.

திருவாரூர் வேதா.
இளம் அறிவியல் (வேதியியல்.)
புஷ்பம் கல்லூரி,
பூண்டி. தஞ்சாவூர்.

---

### அவளுக்காக....

நான்—
குருடனாகப் போக வேண்டும்
உன்னைக்—
காணாத கணங்களில்...
நான்—
செவிடாகிப் போகவேண்டும்
நீ—
பேசாத பொழுதுகளில்....
நான்—
ஊமையாகிப் போக வேண்டும்
உன் பெயரை—
உச்சரிக்காத பொழுதுகளில்...

கு. மகுடேஸ்வரன்,
எம். ஏ. இரண்டாம் ஆண்டு
தமிழ்த்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

---

# ருத்ராக்ஷ மகிமை

புருஷர்களில் விஷ்ணுவும், கிரகங்களில் சூரியனும், நதிகளில் கங்கையும், முனிவர்களில் காசிபரும், தேவிகளில் கௌரியும், தேவர்களில் மகாதேவரும், குதிரைகளில் உச்சைஸ்வரமும் எப்படி மேலானவர்களோ அப்படியே மணிகளில் ருத்திராக்ஷமணி மேலானது.

''தேவிபாகவதம்''

இனிப்பு, கார தின்பண்டங்களில் எங்கள் தயாரிப்புகளே மேலானது

இனிப்பு: குலோப் ஜாமூன், ரஸமலாய், சோன்பப்டி, பாதாம் அல்வா முதலியன.

காரம்: தட்டை, தேன்குழல், முறுக்கு, நவரத்ன மிக்ஸர், சமோசா முதலியன.

திருமண வைபவங்களுக்கு பருப்புத் தேங்காய், சீர்முறுக்கு அதிரசம் திரட்டுப்பால் ஆகியவற்றை தயாரித்து தருகிறோம்.

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு, சென்னை-600 020

போன்: 412557

காமதேனு சூப்பர் மார்க்கெட், தேனாம்பேட்டை, சென்னை

---

அனைவருக்கும் எமது பொங்கல் வாழ்த்துக்கள்

## கோபால் பல்பொடி டின் ஒன்று வாங்குபவர்களுக்கு ரூ. 1-50 பெருமான துணிப்பை இனாமாக கொடுக்கப்படுகிறது




தயாரிப்பாளர்கள்: எஸ்.பி.எஸ். ஜெயம் அண்டு கம்பெனி

(வேல் கெமிக்கல் ஒர்க்ஸ்), 25, கீழ நாப்பாளையத் தெரு, மதுரை-625 001



○ உயர்வு ○ மன நிறைவு

○ ஆர். சிவராஜ், லால்குடி.

? என். டி. ஆரைப் போல் எம். ஜி. ஆரும் மத்திய அரசிடம் வெள்ள நிவாரண நிதிக்கு 100 கோடி கேட்டிருப்பது சரியா?

! ஒன்றுக்குப் பத்தாகக் கேட்டால், பத்தில் ஒன்றாவது கிடைக்காதா என்றுதான்.

○ லட்சுமி சிவம், சென்னை 7.

? 84 ல் ஜெயலலிதா முதலமைச்சரா?

! பாரதிதாசன் பல்கலைக் கழகக் கேள்வித்தாள் படி அவர் பிரதமர்! மார்கரெட் தாட்சராக ஜெ மாறுகிறாரோ இல்லையோ, நமது பல்கலைக் கழகங்களெல்லாம் வால் பிடிக் கழகங்களாகமாறி வருகின்றன.

○ ஜி. சந்திரசேகரன், சின்ன சேலம்.

? கா. கா. தே. கா. ஜனதாவைவிட்டுக் கழன்று கொள்வது உண்மையா?

! அங்கே கழன்றாலும் இங்கே இணைய முடியாது என்று மிச்சமிருக்கும் கா. கா. தே. கா. கூறுகிறதே! குமரி ஜனதாவிலிருந்து விலக எண்ணினால் இரண்டு இடத்திலும் அவருக்கு மதிப்பு போய்விடும். தொடர்ந்து ஜனதாவில் பணியாற்றிக் கட்சித் தொண்டர்களையும் பொது மக்களையும் கவர முயல்வதே புத்திசாலித்தனம்.

○ ஆர். அப்துல் சலாம், திருச்சி.

? சென்னை டெஸ்டில் இந்திய அணி வெற்றி பெறும் வாய்ப்பை அநியாயமாக மழை வந்து கெடுத்து விட்டதே?

! என்ன அநியாயம் பாருங்கள்! மழை மட்டும் இல்லாதிருந்தால் நம்ம கட்சியினர் அபாரமாய் ஆடி ரன்களைக் குவியோ குவியென்று குவிப்பதுடன் மேற்கிந்தியரை மனுக் மனுக் கென்று அவுட்டாக்கி இதுவரை அடைந்து வந்த அவமானத்தையெல்லாம் துடைத்து எறிந்திருப்பார்கள்! எல்லாவற்றையும் மழை



○ உருக்கம்

வந்து கெடுத்து விட்டது. ஹூம்!

○ எம். எச். சாதிக்பாட்சா, நீடூர்

? செயற்கை மழைக்குச் சில லட்சம் ஒதுக்குவதற்கும் இயற்கைமழை காரணமாகப் பெருகும் வெள்ளத்துக்குச் சில கோடி ஒதுக்குவதற்கும் வித்தியாசம் என்னவோ?

! பொய்க்கும் மெய்க்கும் உள்ள வேறுபாடு.

○ வி. கோபிநாத், லெட்சுமாங்குடி.

? கர்நாடகத்தைப் போல் தமிழகத்தில் எம். எல். ஏக்களை விலைக்கு வாங்க இ. காங்கிரஸ் ஏன் முயலவில்லை?

! இங்கேதான் கும்பலாகக் கோவிந்தா போடக் காத்திருக்கிறார்களே!

○ எஸ். வி. டி. ராஜன், லால்குடி.

? பாக்கியராஜ் போல் பாரதிராஜா நடிப்பதனால் வெற்றி பெற வாய்ப்புண்டா?

! புலியைப் பார்த்துப் பூனை சூடு போட்டுக் கொண்டதாக முடியும்.

○ கே. எஸ். எஸ். மணியன், சென்னை 50.

? சென்னையில் நடக்கும் இசை நிகழ்ச்சிகளில் நீங்கள் விரும்பி ரசித்த நிகழ்ச்சி எது?

! டி. கே. ஜே.யின் உருக்கமான பாட்டு; கே.வி. நாராயணசாமியின்உயர்வான சங்கீதம்; சந்தானத்தின் மனநிறைவான கச்சேரி; டி. வி. சங்கர நாராயணனின் ஜிலு ஜிலுப்பான இசை என்று பலவற்றைச் சொல்லிக் கொண்டே போகலாம். ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதத்தில் பிடிக்கும். சங்கீதசீசனில் பிடிக்காததைப் பட்டியலிடுவது சுலபம். கேட்டுக் கொள்ளுங்கள்: 1) சுவாதித் திருநாளை அவமதித்து வீணை பால



○ ஜிலுஜிலுப்பு

சந்தர் விநியோகித்த துண்டுப் பிரசுரங்கள். அதை அகாடமி தடுக்க நேர்ந்தது. பாலசந்தரைத் தாக்கமுயற்சிநடக்கலாம்என்பதால்காணப்பட்ட போலீஸ் பந்தோபஸ்து. 2) பல சபாக்களிலும் காணப்படுகிற, வளைய வந்து தாறுமாறாக நடந்து கொள்கிற ஒரு 'குடி. மகனை' நிர்வாகிகள் கண்டும் காணாதது போல் இருப்பது.

○ என். நம்பி, திருவாரூர்.

? வெள்ளப் பகுதிகளை முதல்வரும் கலைஞரும் போட்டி போட்டுக் கொண்டு பார்வையிடுவதால் என்ன பயன்?

! இந்த மாதிரி சமயங்களில்தான் வயது வந்தவர் அனைவருக்கும் வோட்டுரிமை என்று அண்ணல் வற்புறுத்தியது எதற்கு என்பது நமக்கு நன்றாக விளங்கும். படித்தவருக்கு அல்லது பணக்காரருக்கு

## 84ல் ஜெயலலிதா

மட்டுமே வோட்டு என்றிருந்தால் நாட்டின் ஏழைகளை யாரும் கவனிக்கவே மாட்டார்கள்!

○ எம். இந்திரா, கோனேரிராஜபுரம்.

? எனக்கு வயது பதினெட்டு. என் உயரம் 4 அடி ஏழு அங்குலம். நான் உயர்வதற்கு ஏதேனும் வழி சொல்லுங்களேன்?

! பதினெட்டுக்குப் பிறகு வளர்ச்சி பெறுவது அபூர்வம்தான். இருந்தாலும் சிரசாசனம் கற்றுக் கொண்டு செய்து பார்க்கலாம். அரை நிமிஷத்தில் ஆரம்பித்துப் படிப்படியாக அதிகரிக்க வேண்டும். இறங்கியதும் சவாசனத்தில் ஓய்வு அவசியம். பத்துப் பன்னிரண்டுவயதிலேயே ஆரம்பித்திருந்தால் நல்ல பலன் கிட்டும். வளர்ச்சியை நிர்வகிப்பது, தலைக்குள்ளே இருக்கும் பிட்யூட்டரி சுரப்பி. சிரசாசனத்தில் அதற்கு ரத்தம் கூடுதலாகச் செலுத்தப்படுவதால் புத்துணர்ச்சி பெற்று நன்கு இயங்கும். ஒன்றிரண்டு அங்குலம் உயர்த்திக்காட்டும் தடிமனான காலணிகளும் விற்கப்படுகின்றன.

○ நாகை பொன்னி, விருத்தாசலம் ★

? ஆண்மை, பேராண்மை ஒப்பிடுங்கள்?

! தன்னைக் கொல்லமுயன்றவனுக்காக இரண்டாவது ஜான் பாலாகிய போப்பாண்டவர் தாம் சஸ்திர சிகிச்சைபெற்று குணமடைந்ததும் மனமுருகிப் பிரார்த்தித்தது ஆண்மை. சிறையில் வாடும் அவனை நேரில் சென்று பார்த்து அன்புடன் அளவளாவி ஆறுதல் கூறி பாப மன்னிப்பும் கொடுத்தது பேராண்மை.

○ மூ. நாதன், அலங்கியம்.

? காலந்தப்பி மார்கழியில் மழை பெய்துள்ளதே?

! என் நண்பர் ஒருவர், மின் வாரியத்தில் பணியாற்றி ஓய்வுபெற்றவர், இத்தகைய காலதாமத மழையும் ஒரு நியதிப்படி, அதாவது எட்டு அல்லது பத்து ஆண்டுகளுக்கு ஒருமுறை பெய்வதாகக் கூறுகிறார். பருவ மழைகளைப் பல ஆண்டுகளாகத் தேதி வாரியாகப் பட்டியலிட்டு வரைபடம் போட்டுப் பார்த்தவர் இவர். இம்மாதிரியான ஆய்வுகள், இறம்பட மின் நிலையங்களை நிர்வகிப்பதற்கு மட்டுமின்றி, வெள்ளச் சேதங்களை முன்னெச்சரிக்கையுடன் தவிர்க்கவும் அரசுக்கு உதவும். ஆனால் ஆட்சியிலிருக்கும் யார் இதிலெல்லாம் அக்கறை எடுத்துக் கொள்ளப்போகிறார்கள்!

○ ஸ்ரீ ராகவ்ராஜ், சேலம்.

? புத்தாண்டில் தங்களை மகிழ்வித்த செய்தி எது?

! டென்மார்க் நாட்டின் பிரதிநிதியாகச் சென்னையில் பணியாற்றும் தொழிலதிபர் கே.எஸ். நாராயணனுக்கு அந்நாட்டின் அரசி 'நைட்' (மாவீரர்) பட்டம் அளித்துக் கௌரவித்திருக்கிறார் என்ற செய்தி.



○ டேனிஷ் பிரதிநிதி

○ ஆர். நாகராஜன், பராஜூர்.

? புத்தாண்டில் தங்கள் மனத்தை வாட்டியது எது?

! ஹாப்பி நியூ இயர்! சொல்லிக் கொண்டு ஜனவரி முதல் தேதி என்னைக் காண வந்த அமெரிக்க நண்பர், பம்பாய் விமான நிலையத்தின் கஸ்டம்ஸ் இமிகிரேஷன் பகுதிகளில் அயல் நாட்டுப் பயணிகள் பல மணி நேரம் காரணமின்றிக் காக்க வைக்கப்படுவது பற்றிக் கதை கதையாகக் கூறிய போது மனம் ரொம்பவும் வாடத்தான் செய்தது. இதனால்இங்குவரும் அயல்நாட்டுச்சுற்றுலாப் பயணிகளின் எண்ணிக்கை குறையுமே என்பதால். சின்ன விஷயங்களில் நாம் பெரிய தவறுகள் செய்து பொருளாதார ரீதியில் பேரிழப்புக்களை அடைகிறோம்.

○ மது: ஜெயபால், அத்திமலைப்பட்டு.

? சிவாஜி கணேசனைப் புரிந்து கொள்ள முடியவில்லையே!

! தேவலாமே, அப்படியானால் மற்ற பல அரசியல் கட்சித் தலைவர்களைப் புரிந்து கொண்டு விட்டீர்கள் என்றாகிறது. மாமேதைதான் நீங்கள்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
நாகை பொன்னி,
99, ஆலடி ரோடு,
விருத்தாசலம் 606 001.



# நீங்கள் கேட்டவை

— தராசு

# முதலமைச்சரா?

# இளைய பிறவிகள்



கதை என்று எடுத்துக் கொண்டால், யாருக்குமே இரண்டாவது அபிப்பிராயம் இருக்க முடியாது; அப்படி எல்லாம் பெரிசாய் எதையும் வைத்துக் கொண்டு தவிக்கிற எண்ணம் இயக்குனருக்கு இல்லை என்பதில்.

கல்லூரி சூழ்நிலை. மாணவ மாணவியர் அடிக்கும் கொட்டங்கள், தையாத்தக்கா என்று துள்ளுகிற மாணவர்கள் பாதிப்படத்திற்கு மேல் திடீர் புத்தி வந்து திருந்திப் போதல் என்ற பழைய பஞ்சாங்கத்தையே பக்கம் மாற்றிப் புரட்டியிருக்கிறார்கள்.

ஜான் துணியோடு டிஸ்கோ ஆடுகிற மாணவியாய்(!) இடைவேளை வரை அனு ராதா. முன்பாதிப் படம் வேகமாக நகர்கிறது. அம்மாவுக்குப் பயந்த பையனும் ஆரம்பித்து, அனுராதாவின் சவால்கவர்ச்சியில் மயங்கி, கற்பிழந்து, பின் அவரால் உதறப்பட்டு, விரக்தியில் மற்றப் பெண்களிடமும் வாலாட்ட ஆரம்பிக்கிற மாணவனாய் ராஜீவ். அவரது ஆரம்ப சாதுத்தனத்தை ரசித்து, இப்படி புத்தி தடுமாறிப் போனதை நினைத்து வருந்தி, தன்னால் மட்டுமே அவரைத் திருத்த முடியும் என்று உணர்கிற சக மாணவியாய் மகாலட்சுமி.

அவ்வளவாய் வருத்திக் கொள்ளத் தேவையில்லாத பாத்திரம் என்று உணர்ந்து ராஜீவ் சுலபமாய் இருக்கிறார். நேசிக்கிறவனிடத்தில் அநாவசிய குழைவுகள் இல்லாமல், ஒருசின்ன மிடுக்கோடு தன்னைச்சேர்த்துக் கொள்கிற கட்டங்களில் மகாலட்சுமிக்கு பாவங்கள் சுலபமாய் கைவருகின்றன. துடிப்போடு இருவருமே அவ்வப்போது படத்தை நகர்த்துவது பிடிக்காமல் அவர்களுக்குப் பதிவு மணம் செய்து வைப்பதோடு கதை நொண்ட ஆரம்பிக்கிறது. அப்புறம் நினைத்துக் கொண்டாற் போல கிராமம், வயல், பட்டம் வாங்கியவர்களும் செய்ய வேண்டிய விவசாயம் என்று செவ்வாய்க்கிழமை பார்க்கிற டி. வி. நாடகம் மாதிரி ரப்பர் ரப்பராய் நீட்ட ஆரம்பிக்கிறார்களா, தியேட்டரில் ஏகப்பட்ட 'ஹால் ஹால்'களும், 'கொர் கொர்'களும் சோம்பல் முறிக்கின்றன.

நிலையில்லாமல் தவிக்கிற காமிரா.

சங்கர் கணேஷின் இசை. 'கார்மேகம்' பாடல் பரவாயில்லை என்பதோடு நிறுத்திக் கொள்வோம்.

வேண்டிப் போய்ப் பார்க்கவோ, வேண்டாமென்று உதறித் தள்ளவோ முடியாத இரண்டுங்கெட்டான் ஜாதி.

— ஜெயமன்மதன்

எதிர்ப்பக்கம்:

**அனுராதா ரமணன்**

வண்ணப்படம்: போகா



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran

20 ஆண்டுகளுக்கு முன் திறந்திருந்தாலும் எங்கள் முதல் வாடிக்கையாளர் இன்றும் எங்களுடனே இருக்கிறார்.



நாங்கள் வியப்படையவில்லை ஏனெனில் எங்கள் நோக்கம் வாடிக்கையாளரின் திருப்தி ஒன்றே.

ஜி. ஆர். தங்க மாளிகை — வாடிக்கையாளர் ஒவ்வொருவரும் எங்களுக்கு நிகரற்றவர் — தங்கத்தைப்போல.

# ஜி. ஆர். தங்க மாளிகை

## ஜுவல்லரி

104, உஸ்மான் சாலை, தியாகராயநகர்
சென்னை-600 017 போன் : 445062

# கலிதீரும்

குயிலன்

காப்பியம் தொடங்கும் முன்னர்
 செந்தமிழ்க் கவிகள் போற்றிக்
காப்பெனத் தொடுத்த தெல்லாம்
 கணபதி காப்பே யன்றோ?
மூப்பெனும் வேடம் தாங்கி
 முருகன்ஐங் கரனை வேண்ட
பூப்பத வள்ளி யம்மை
 பொற்கரம் பற்றச் செய்தான்!

பிள்ளையார் சுழியை யிட்டே
 பின்சிவ மயமே என்று
தெள்ளிய தமிழர் முன்பு
 செயலினைத் தொடர்தல் பண்பு.
எள்ளள வேனும் 'விக்னம்'
 இன்றியே காக்கும் எங்கள்
குள்ளனின் அருளால், தம்பி
 குடமுழுக் காட்டு செய்வோம்!



பழநியோ தெற்கே! சென்னைப்
 பதிவட பழநி தன்னில்
அழகுறக் கோயில் கொண்டே
 அண்டிய பக்தர்க் கெல்லாம்
மழைதரு மேகம் போல
 வரையிலா வரங்கள் நல்கும்
கழலிணை போற்று வோர்தம்
 கலியெலாம் தீரும் கண்டீர்!

வள்ளி தெய்வானை யோடு
 வனப்புறக் காட்சி தந்தே
உள்ளுவார் உள்ள மெல்லாம்
 ஒளிதரும் ஞானம் தன்னை
வெள்ளமாய்ப் பொழியும் எங்கள்
 வேலன்கை வேலைக் கண்டால்
துள்ளியே ஓடும் பொய்மை!
 சூழ்ந்திடும் நன்மை நம்மை!

---

உள் அட்டை: மதுரை மாரியம்மன் கோவில், குளம்
வண்ணப்படம்: ஹரலிங்கம்

# மெய்ஞானம் பழுக்கும் வடபழனி

ஆனந்தி



○ வடபழனி முருகன்

அழகனான முருகன் வழிபாடு தமிழ் நாட்டில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகவே இருந்து வந்திருக்கிறது என்பது சங்க இலக்கியங்களால் தெரியவருகிறது. முருகப் பெருமானிடம் சென்று அவன் அருளைப் பெறுமாறு வழி சொல்லி பக்தர்களை அனுப்புவதாக அமைந்துள்ள திருமுருகாற்றுப் படை நக்கீரர் இயற்றியது. அந்த நூலில் திருவாவினன்குடி என்று அவர் கூறும் தலம்தான் இன்று பல்லாயிரம் மக்கள் ஆவலோடு தரிசனம் செய்யும் பழனி. ஆவியர் குலத்தில் பிறந்தவர்கள் அரசாண்டு வந்த படியால் ஆவினன்குடி என்று பெயர் பெற்றது.

இந்தப் பிரதேசத்தை ஆண்டு வந்த வையாவிக் கோப்பெரும் பேகன் என்ற அரசனை இலக்கியங்கள் மிகவும் புகழ்ந்து பாடுகின்றன. மேகங்கள் சூழ்ந்ததைக் கண்ட மயில் சிலிர்த்து ஆடியது. 'ஐயோ! குளிரினால் இந்த மயில் நடுங்குகிறதே என்று நினைத்து அளப்பருங் கருணையோடு தன் தோளில் கிடந்த சால்வையை எடுத்துப் போர்த்தி விட்டானாம் இந்த அரசன். பழனி மலைப் பிரதேசத்தில் அரசாண்ட ஒரு மன்னனே இத்தனை கருணையுள்ளம் படைத்தவன் என்றால் அங்கே குடிகொண்டுள்ள முருகப்பெருமான் இன்னும் எவ்வளவு கருணையோடு நம்மைக் காப்பான்! அழகு என்பதே கருணைதான். முக்கண்ணனின் ஞானக்கண்ணில் ஒளிச்சுடராகத் தோன்றியவன் முருகன். சரவணப் பொய்கையில் தவழ்ந்து குமார குருவாகி ஞானப் பிழம்பாக நின்றவன்.

முருகப்பெருமான் பழனியாண்டிக்கோலம் பூண்ட கதை எல்லாருக்கும் தெரிந்ததே.

அண்ணனின் முன்யோசனை தனக்கில்லையே என்ற வருத்தம் மேலிட வெட்கமடைந்து, எல்லாவற்றையும் துறந்தவனாக ஆண்டிக் கோலத்தைப் புனைந்து கொண்டு கைலாய மலையை விட்டுப் போய் விட்டான். தெற்கே சிவகிரியில் கையில் தண்டமும் தலையில் ருத்ராக்ஷமுமாகத் தண்டாயுதபாணியாக நின்று விட்டான்.

இளைய புதல்வனின் பிரிவைத் தாங்க முடியாமல் ஈசனும் உமையும் சிவகிரியை அடைந்து ''உனக்கு வேறு பழம் எதற்கப்பா? பழம் நீ அப்பா'' என்று கெஞ்சிக் கூத்தாடிச் சமாதானம் செய்தார்கள். அதனால்தான் அந்த மலைக்குப் 'பழனி' என்று பெயர்.

⌘ பிரார்த்தனை நிறைவேற்றும் மக்கள்



ஞானப் பழமாக விளங்கும் பழனி அப்பன் 19–ஆவது நூற்றாண்டில் தமிழ் நாட்டில் சென்னை நகரின் அருகில் விளையாடத் திருவுளம் கொண்டான். இன்று வடபழனி கோவில் இருக்கும் இடத்தில் சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்னால் அண்ணாசாமி நாயக்கர் என்பவர் வசித்து வந்தார். இவருக்குத் தீராத வயிற்றுவலி இருந்தது. ஒருசமயம் பழனியிலிருந்து வந்த

சுவாமிகள் ஒருவர், ''நீ கிருத்திகை தோறும் திருப்போரூர் சென்று வழிபாடு செய்'' என்று கூறவே அண்ணுசாமி நாயகரும் அப்படியே செய்து வந்தார். மழை வெயில், வெள்ளம் என்று பாராமல் நடந்தே சென்று வருவார். ஒரு கிருத்திகை தரிசனம் செய்து விட்டுத் திரும்பும்போது களைத்துப் போய்த் தூங்கி விட்டார். கனவில் ஒரு பெரியவர், ''ஏன் சிரமப்படுகிருய்? உன் வீட்டிலேயே முருகன் இருக்கிருனே!'' என்று சொன்னுர். அதுமுதல் வீட்டிலேயே முருகனைத் தியானித்து வழிபட்டு வந்தார்.

ஒருசமயம் திருத்தணிகைக் குமரப் பெருமானைத் தரிசிக்கச் சென்ருர். கிருத்திகை நட்சத்திரத்தில் பரவசமாக மலையேறிக் கோவிலை வலம் வந்தவர் பலிபீடத்துக்கு அருகில் வந்ததும் தமது நாவைத் துண்டித்துப் பலிபீடத்தின் மீது வைத்துவிட்டு மயங்கி விழுந்து விட்டார்.

மயக்கம் தெளிந்து புறப்பட்டபோது ஒரு படக்கடையில் உள்ள முருகன் படத்தைப் பார்த்து மெய்மறந்து நின்ருர். யாரோ அதை வாங்கி அவர் கையில் கொடுத்தார்கள். வீடு வந்து சேர்ந்தவர் அந்தப் படத்தை வைத்துப் பூஜித்து வந்தார். மக்கள் அவரைத் தம்பிரான் என்று அழைக்கலாயினர். அவருடைய வயிற்று வலியும் தீர்ந்தது. நாக்கும் வளர்ந்து விட்டது!

○ ஸ்ரீவாட அருள்லங்கம்



மற்ெருருசமயம் அண்ணுசாமித் தம்பிரான் பழனி ஆண்டவனைத் தரிசிக்கக் கிளம்பினுர். பழனியில் தண்டாயுதபாணியைத் தரிசனம் செய்து விட்டுத் திரும்பம்போது ஒரு படக்கடையில் இன்னொரு முருகன் படத்தைக் கண்டார். அதை வாங்க அவரிடம் பணமில்லை. ஆனுல் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. தம்பிரானைக் கண்டதும் அந்தக் கடைக்காரர் முருகன் படத்தை எடுத்துக் கொடுத்து ''இந்த முருகனைத் தங்களிடம் சேர்ப்பிக்கச் சொல்லி நேற்றிரவு என் கனவில் உத்தரவாயிற்று'' என்று கூறி வணங்கினுர். இறைவன் அருளை வியந்து கொண்டே தம்பிரான் அந்தப் படத்தையும் எடுத்துக் கொண்டு வந்து தம் வீட்டில் வைத்துச் சிரத்தையுடன் பூஜை செய்து வந்தார்.

பூஜை செய்யும்போது சில சமயங்களில் அவருக்கு ''அருள்'' வரும். அந்தச்சமயத்தில் அவர் வாக்கு அப்படியே பலிக்கும். அவர் வாக்குச் சொல்கிற இடம் 'குறி மேடை' என்று பெயர் பெற்றது.

அண்ணுசாமித் தம்பிரானிடம் அத்யந்த அன்பு கொண்டிருந்த இரத்தினசாமித் தம்பிரான், அந்த இடத்தில் ஒரு கோவில் எழுப்பினுர். பழனி தண்டாயுதபாணி சிலையைச் செய்து கோவிலில் பிரதிஷ்டை செய்தார். 1865—ஆம் ஆண்டில் வடபழனி ஆண்டவா கோவில் கும்பாபிஷேகம் நடை பெற்றது. இவருக்குப் பின் பாக்கிய லிங்கத்தம்பிரான் என்பவர் வடபழனி ஆண்டவர் கோவிலுக்குப் பல திருப்பணிகள் செய்தார்.

இவர்கள் மூவருமே வருங்காலத்தைப் பற்றிக் குறி சொல்லும் ஆற்றல் பெற்றிருந்தார்கள். இதனுல் ஜனங்களிடையே இவர்களுடைய செல்வாக்குப் பெருகியது.

நாளடைவில் வடபழனிக் கோயில் நன்ருக வளர்ச்சி பெற்று இன்று பல மண்டபங்களுடன் திகழ்கிறது. ஒரே கோபுரத்துடன் விளங்கிய இந்தக் கோவிலுக்கு மூன்று பக்கங்களிலும் புதிய கோபுரங்கள் எழுப்பியுள்ளார்கள். பல லட்ச ரூபாய் செலவில் புதுப்பிக்கப்பட்டு வருகிறது இந்த ஆலயம்.

ஐம்புலன்களையும் அடக்கிய மகான்கள் வாழ்ந்து பூஜித்த தலம் வடபழனி. சரீரத்தில் மிகவும் முக்கியமான புலன் ருசியை அறியக் கூடிய நாக்கு. அதுவே பேசுகின்ற புலனுகவும் இருப்பதால் கர்மேந்திரியம், ஞானேந்திரியம் இரண்டுமாக விளங்குகிறது. நாவை அடக்கினுல் நம்மையே அடக்கியவர்களாவோம் என்று காட்டினுர்கள்போலும் இந்த ஞானிகள். கேட்பதற்குக் கூசினுலும் 'நாவாடம்' என்ற ஒரு தியாகத்தைச் செய்து தமது புலன்களையே பழனி ஆண்டவருக்குச் சமர்ப்பித்தார்கள்.

○ பக்தர்கள் வரிசை



**ஆ**ருத்ரா தரிசன நந்நாள். அகிலாண்ட கோடி பிரும்மாண்ட நாயகனை நடேசப் பெருமானுக்கு விடியற்காலை ஐந்து மணிக்குள்ளேயே அபிஷேகங்கள் முடிந்தாகி விட்டது. பாலிலும் பஞ்சாமிர்தத்திலும் சந்தனத்திலும் நந்நீரிலும் திளைத்து உள்ளம் குளிர்ந்த நடராஜப் பெருமானுக்குத் திரை மறைவில் அலங்காரம் நடக்கிறது.

திருவாதிரைக் களி விநியோகமாகிறது. அங்கே ஒரு நீண்ட க்யூ வரிசை காணப்படுகிறது. அலங்காரமாவதற்குள் அவருடைய குமாரனை குமரனைத் தரிசித்து விடலாம். ஆண்டியான முருகப் பெருமானைத் தரிசிக்க வந்த நமக்கு ஓர் இன்ப அதிர்ச்சி. இன்று பழனி ஆண்டி, சிங்காரவேலனாக அரச கோலம் பூண்டிருக்கிறான். கிரீட குண்டல அலங்காரங்களுடன் சந்தனக் காப்பும், வெள்ளிக் கவசமும் அணிந்து வெற்றிவேல் தரித்து ஒய்யாரமாகப் புன்னகையுடன் நமக்குக் காட்சி தருகிறான். தந்தையின் பிறந்த நாள் அல்லவா?

ராகமாலிகையாக அர்ச்சனை செய்கிறார் குருக்கள். சூரியோதய காலத்தில் மனம் ஒருமித்து வேல்முருகனைத் தியானிப்பது மனத்துக்குத் தெம்பாக இருக்கிறது. தீபாராதனை செய்த பிறகு பிரஸாதம் வாங்கிக்கொண்டு நடராஜப் பெருமான் வீற்றிருக்கும் மண்டபத்துக்கு வருகிறோம்.

இதோ திரை விலகி விட்டது. அடுக்கடுக்காக மாலைகள் அணிந்து, மலர்க் கிரீடத்துடன், கணபதியும், சிவகாமி அம்மையும், மணிவாசகப் பெருமானும் சண்டேசரும் உடன் காட்சி தர அற்புத தரிசனம் தருகிறார் நடராஜப் பெருமான்.

உலோகத்திலான அழகிய நடராஜ மூர்த்தி இக்கோயிலில் எழுந்தருள வழி வகுத்து ஒவ்வொரு ஆண்டும் திருவாதிரை கட்டளையை மேற்கொண்டிருப்பவர்கள் திருமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி, திரு சதாசிவம் தம்பதி என அறிகிறோம்.

அலங்கார தீப ஆரத்திகள் நடக்கும் போது மெய்சிலிர்க்கிறது. நாகஸ்வர இசையும், தாள ஒலியும், மணிகளின் முழக்கமும் அதிகாலை நேரத்தில் நம் உள்ளத்தைப் பரவசப்படுத்துகின்றன.

அண்டம் எழுகோடி
பிண்டம் எழுகோடி
தெண்திரை சூழ்ந்த
திசைகள் எழுகோடி
எண்திசை சூழ்ந்த
இரங்கம் எழுகோடி
அண்டன் நடம்செயும்
ஆலயம் தானே!

பிண்டம்: பரமாணுக்கள்,
இரங்கம் – நட்சத்திரங்கள்.

திருமூலரின் திருவாக்கில் கோடி கோடி தத்துவம் புதைந்திருக்கிறது. எளிமையாகவும் இருக்கிறது. Spac3 என்று ஆங்கிலத்தில் கூறும் பேரண்டப்பெருவெளி முழுவதுமே அவனுடைய அரங்கம் தான். அவனே நமது இதய அம்பலத்திலும் ஆடுகிறான்.

ஓதுவாரை அழைக்கிறார்கள். பரிவட்டம் கட்டி மாலை மரியாதை செய்கிறார்கள். திருவெம்பாவை பாடத்தொடங்குகிறார் ஓதுவார். ஒவ்வொரு பாடலுக்கும் மணிவாசகப் பெருந்தகைக்குத் தீபாராதனை. ஒவ்வொரு முறையும் தீபாராதனை செய்யும்போது தக தகிட என்று கண்ட கதியில் பெரிய வெண்கல தாளத்தை இசைக்கும்போது பஞ்சாட்சரத்தையே அந்தக் கதியில் கேட்பதாகத் தோன்றுகிறது. நடராஜாவும் மற்றைய மூர்த்திகளும் புறப்பட்டு வீதி வலம் வருகிறார்கள். ஆருத்ரா தரிசனத்தைக் கண்ட ஆனந்தப் பரவசத்துடன் கோயிலை வலம் வருகிறோம். கும்பாபிஷேகப் பெருவிழாவுக்காக யாக சாலைகள் அமைக்கக் கட்டிடம் எழும்புகிறது. தங்கரதம் வைக்க இடம் தயாராகிறது.

மீனாக்ஷியம்மன் சந்நிதியில் ஒரு நிமிடம் நின்று தியானம் செய்து விட்டு கோஷ்டத்தில் உள்ள அங்காரகனைத் தரிசித்துப் பிரஸாதம் பெறுகிறோம். அப்படியே துவஜஸ்தம்பத்தினருகில் சென்று நமஸ்கரித்து விட்டு அங்கே சஞ்சீவி மலையைத் தாங்கி நிற்கும் வாயு புத்திரனைத் தரிசனம் செய்கிறோம். பிறவிப் பிணியைத் தீர்க்கும் முருகன் கோவிலில் உடற்பிணியைத்தீர்க்கும் மூலிகைகளை உடைய சஞ்சீவி மலையைத் தூக்கிக் கொண்டு வந்த ஹனுமாரும் இருக்கிறார். திருத்துழாய் மணக்கும் தீர்த்தத்தை வாங்கிக் கொண்டதும் சிரம் குளிர சடாரி சாதிக்கிறார் அர்ச்சகர். திருவடியின் திருவடியை வணங்கிய பெருமிதத்துடன் குறிமேடையை நெருங்குகிறோம். முதன் முதலில் நூறு ஆண்டுகளுக்கு முன்பு தவத்திரு அண்ணுசாமித் தம்பிரான் பூஜை செய்த முருகனின் திருப்படங்களையும் தரிசிக்கிறோம்.

நிர்வாக அதிகாரி கோலப்பன் மிகவும் ஊக்கத்துடன் கும்பாபிஷேக வேலைகளைக் கவனிக்கிறார். காலை திருப்பள்ளி எழுச்சிக்குத் தவறாமல் சுமார் ஐம்பது பேர் பதினைந்து வருடங்களுக்கு மேலாக வருகிறார்கள் என்று தெரிவித்தார். இப்படிப்பட்ட பக்தர்களைப் பெற்ற வடபழனி ஆண்டவர் பாக்கியசாலி என்பதில் சந்தேகமில்லை.

மேலட்டை வண்ணப்படம்,
புகைப்படங்கள்: உத்ரா

---

அருணகிரிநாதர், 'அடுத்த பிறப்பு என்று வருமானால் 'முருகா! நான்கு வரக் கூடாது. செவிடு வேண்டாம்! குருடு வேண்டாம். வடிவு குறைவு வேண்டாம்! வறுமை கொஞ்சங்கூட வேண்டாம்!'' என்று பழனிமலைத் திருப்புகழில் கூறுகின்றார். அப்பாடலை ஒவ்வொருவரும் வழிபாட்டில் நாள்தோறும் ஓதவேண்டும்.





# ஆறுபடை வீடு

திருமுருக கிருபானந்த வாரியார்

**சே**னைகளும் சேனாதிபதியும் தங்கியிருக்கின்ற இடத்திற்குப் படைவீடு என்று பெயர். படைகள் தங்கும் வீடு ஆதலின் அப்பேர் பெற்றது.

விடு என்ற முதனிலை நீண்டு வீடு என்றாயிற்று. இது தொழிற் பெயர். விடுபடுவது வீடு. ஆன்மாக்கள் மும்மலக் கல்லில் இருவினைக் கயிற்றில் கட்டுண்டிருக்கின்றன. அக்கட்டினின்றும் விடுபடுவதே வீடு எனப்படும்.

முக்தி என்பது வடசொல். பந்தத்தினின்றும் விடுபடுவது முக்தி. சிப்பியினின்றும் விடுபடுவதனால் முத்து எனப் பேர் பெற்றது தானம். பந்தத்தினின்றும் விடுதலையுற்றவன் ஜீவன் முக்தன்.

இந்த வீடுபேற்றைத் தருகின்றவன் முருகன். வீடு பேற்றுக்குத் தடையாக இருப்பவர் காம, க்ரோத, லோப, மோக, மத மாற்சரியங்கள் என்ற ஆறு பகைவர்கள். அப்பகைவர்களை அழிக்கின்ற ஞான வீரர் முருகன். கந்தன் என்ற சொல்லுக்குப் பகைவர்களுடைய ஆற்றலை வற்றச் செய்பவன் என்பது பொருள். 'சத்ருன் சோஷயதீதி ஸ்கந்த' என்பது நிகண்டு.

ஆகவே அகப்பகை, புறப்பகை என்ற இரு பகைகளையும் அழிக்கின்ற வெற்றிவேல் வீரனாகிய விமலன் தங்கியிருக்கின்ற வீடு படைவீடு எனப் பேர் பெற்றது. இனி முருகன் எல்லாத் தேவர்களையும் தனக்குச் சேனையாக உடைய தேவசேனாதிபதி. அப்பெருமான் தங்கியிருக்கின்ற தலங்களுள் மிகமிக முக்கியமான தலங்கள் ஆறு.

அவை திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை.

ஆறுபடை வீடுகளையும் சேவித்து அறுமுகப் பெருமானுடைய ஆறெழுத்தை ஓதும் அடியாரது அகக்கோயிலில் இறைவன் எப்போதும் வீற்றிருப்பான்.

"ஆறுதிருப்பதி கண்டாறெழுத்தும் அன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே."

என்று கந்தர் கலிவெண்பா கூறுகிறது.

இனி இந்த ஆறுபடை வீடுகளை அருணகிரிநாதர் கந்தர் அந்தாதியில் கூறுகின்றார். அப்பாடல் அடியில் வருமாறு:

"திருவாவி னன்குடி பங்காள ரெண்முது சீருரைசதிர்
திருவாவி னன்குடி வானார் பரங்குன்று சீரலைவாய்
திருவாவி னன்குடி யேரகங் குன்றுதொ றாடல்சென்ற
திருவாவி னன்குடி கொண்டதண் கார்வரை செப்புமினே"

பதவுரை

திரு—மகாலட்சுமிக்கு, ஆவி—உயிராகிய (திருமாலும்), நன்குடி—நல்ல தேவியை, பங்காளர் — பாகத்திலுடைய பரமசிவனும், எண்—மதிக்கத் தக்க, முதுசீர் — பழமையாகிய சிறப்புப்பொருந்திய, உரை — (வேதாகமப் பொருளைச்) சொல்லிய, சதிர் — சதுரப்பாட்டையுடைய, உலாவினன் — இளையோனாகிய முருகவேளுக்கு, குடி — உறைவிடமாகிய, வான் ஆர் — ஆகாயத்தையளாவிய, பரங்குன்று — திருப்பரங்குன்றையும், சீரலைவாய் — திருச்செந்தூரையும், திருவாவினன் குடி — திருவாவினன் குடி (பழனி)யையும், ஏரகம் — திருவேரகத்தையும், குன்றுதொறாடல்—பலகுன்றுகளையும், சென்று — கடந்து, அதிர் — முழங்கும், உவா — யானைகளின், இனன் — கூட்டங்கள், குடிகொண்ட —நீங்காது உறைகின்றதும், தண்கார் — குளிர்ந்த மேகம் தவழ்வதுமாகிய, வரை—பழமுதிர் சோலையையும், செப்புமின் — துதி செய்யுங்கள்.

நீவிர் — தோன்று ஏழுவாய், செப்புமின்— பயனிலை.

கருத்துரை

இலக்குமி சமேதரான திருமாலும், பார்வதி பங்கரான பரமசிவனும் புகழ்கின்ற கீர்த்தியும் வல்லமையும் உடைய முருகவேள் உறைகின்ற திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழனி, திருவேரகம், குன்றுதோறாடல் பழமுதிர்சோலை இந்த ஆறு தலங்களையும் துதியுங்கள்.

நமது உடம்பிலே ஆறு ஆதாரங்கள் அமைந்திருக்கின்றன. மூலாதாரம், சுவா



× திருப்பரங்குன்றம்



× திருச்செந்தூர்



× பழனி



## லண்டனில் முருகன்

கிழக்கு லண்டனில் சுமார் மூவாயிரம் தமிழ்க் குடும்பங்கள் வாழ்கின்றனர். தினசரி வழிபாட்டுக்கும் மற்றைய பொது நிகழ்ச்சிகள் நடத்தவும் ஓர் ஏற்ற இடம் வேண்டும் என்று விரும்பிய இவர்கள் மனோர் பார்க், சர்ச் சாலையில் உள்ள எழுபத்தெட்டாம் இலக்கக் கட்டிடத்தைக் கோயிலாக மாற்றி அமைத்துள்ளனர்.

டாக்டர் அழகராஜாவைத் தலைவராகக் கொண்ட ஒரு குழு முழுமூச்சுடன் இப்பணியில் ஈடுபட்டுள்ளது. ''காஞ்சி பீடாதிபதி ஆசியுடன் இதனை துவங்கியுள்ளோம் அவர் ஆசியில் தான் இந்த அளவு வளர்ச்சி அடைந்துள்ளது'' என இக்குழுவினர் கூறுகிறார்கள்.

இந்தியாவைச் சேர்ந்த தொழிலதிபர்கள் ராடசுப்பிரமணிய ராஜா அர்ஜுன ராஜா டி. ஆர். கிருஷ்ணமூர்த்தி முதலியோர் உதவ முன்வந்துள்ளனர். பாதுகாப்பு அமைச்சர் ஆர். வெங்கடராமன் இந்தக் கோயில் வளர்வதில் ஆர்வம் காட்டியுள்ளார்.

வள்ளி தெய்வயானையுடன் முருகன் மூலஸ்தானத்தில் காட்சி தருகிறார். விநாயகருக்கும் சிவனுக்கும் தனி ஆலயங்களும் உற்சவ மூர்த்திகளான ஸ்ரீவெங்கடேஸ்வரர், பத்மாவதித் தாயார், ஐயப்பன், விநாயகர், சுப்ரமணியர் ஆகியோருக்குத் தனி மண்டபமும் அமைத்துள்ளனர்.

கிழக்கு லண்டன் பகுதியில் வாழும் தென்னிந்திய மக்கள் இனி திருமணங்கள், கலாச்சார நிகழ்ச்சிகள், பொதுக் கூட்டங்கள் முதலியவற்றை முருகன் கோயிலிலே நடத்தப்போகிறார்கள். இவ்வாண்டு பிப்ரவரி 12—ல் கும்பாபிஷேகம்.

திருப்பணிக் குழுவில் உறுப்பினரான **டாக்டர் பாலகிருஷ்ணன்** கூறக் கேட்டவர்:

**சித்தி**

திஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை எனப்படும்.

மூலாதாரம் — திருப்பரங்குன்றம், சுவாதிஷ்டானம் — திருச்சீரலைவாய், மணிபூரகம்— திருவாவினன்குடி, அநாகதம் — திருவேரகம், விசுத்தி — குன்றுதோறாடல் ஆக்ஞை —பழமுதிர்சோலை.

இந்த ஆறு ஆதாரங்களிலும் ஆறுமுகப் பெருமான் வீற்றிருக்கின்றான். அகமுகத்தினால் ஆறுபடை வீடுகளின் ஆறுமுகனைத் தரிசிக்க வேண்டும். அதற்கு அடையாளமாகப் புறக்கண்ணாலும் அன்பர்கள் கண்டு உய்வு பெறும் பொருட்டு அவன் ஆறுபடை வீடுகளிலும் எழுந்தருளியிருக்கின்றான்.

குன்றுதோறாடல் என்பது எல்லா மலைகளும் சேர்ந்த ஒரு தொகுப்பு.

பழமுதிர்சோலை என்பது மதுரைக்கு வடகிழக்கே உள்ள அழகர்கோயில் என வழங்கும் திருத்தலம்.

1) தெய்வ யானையை மணந்து உல்லாசமாக விளங்கு தலம் — திருப்பரங்குன்றம்.

2) சிந்தனையாகிய அலைகள் வந்து திருக்கோயிலின் மதிற்புறத்தே ஓய்ந்து கவலை தேய்கின்ற, நிராகுலம் அடைகின்ற (ஆகுலம் — துன்பம்) இடம் —திருச்செந்தூர்.

3) ஞான தண்டபாணியாகக் காட்சியளிக்கும் யோகத்தலம் — திருவாவினன்குடி.

4) தந்தைக்கு இதமாக ஓம் என்பதன் உட்பொருளை உபதேசித்த தலம் — திருவேரகம்.

5) சல்லாபமாகக் குறிஞ்சி நிலமாகிய மலைகளில் விளையாடுகின்ற தலம் — குன்றுதோறாடல்.

6) விநோதம் — பொழுது போக்காக ஞானப்பழம் உதிர்கின்ற சச்சிதானந்த சோலையாக விளங்குவது பழமுதிர்சோலை.

''உல்லாச நிராகுல யோக இத
சல்லாப விநோதனும் நீயலையோ.''

என்று இந்த ஆறுபடை வீட்டினையும் குறிப்பாகக் கந்தரநுபூதியில் அருணகிரிநாத சுவாமிகள் கூறுகின்றார்.

ஆறுதலையின்றி அநேக பிறப்புக்களையெடுத்து அலைகின்ற ஆன்மாக்களாகிய நாம் ஆறுபடை வீடுகளையும் சென்று வணங்கி ஆறுதலையுடைய அண்ணலின் தண்ணருளைப் பெற்று ஆறுதலை அடைவோமாக.

[வாரியார் சுவாமிகள் எழுதிய ''சிந்தனைச் செல்வம்'' என்ற நூலில் ஒரு கட்டுரை பிரசுரம் வானதி பதிப்பகம் சென்னை—17. விலை: ரூ. 15.]

படங்கள்: கோமதிசுவாமிநாதன், தமிழக அரசு செய்தித்துறை








தலைவலி,
உடல்வலி,
ஜலதோஷம்
மறைந்திடும்
இங்கே
AMRUTANJAN
PAIN BALM
AMRUTANJAN LTD.
42-45, Luz church Road Madras-4


90 ஆண்டுகளாக நம்பகமானது.
அமிர்தாஞ்சன்
துரித நிவாரணம் உறுதியுடன் அளிப்பது.
தீய பின்விளைவுகள் இல்லாதது.

# வடபழனியில் கும்பாபிஷேகம்

**பிப்ரவரி 6ல் வடபழனி கோயில் கும்பாபிஷேகம். பொதுவாகக் கும்பாபிஷேகம் செய்வதன் நோக்கம்; இதற்காகச் செய்யும் சடங்குகளின் பொருள்; இவை பற்றி விசுவநாத சிவாச்சாரியார் கூறுகிறார்:**

**க**ல்லில் பலவகை உண்டு. முருகன் போன்ற விக்கிரகங்களுக்கு ஆண் கல்; வள்ளி, தெய்வயானை போன்றவர்களுக்கு பெண் கல்; 'அலி' எனப்படும் கல் நந்தி, பலிபீடம் ஆகியவைகளுக்குப் பயன்படுகின்றன. சிற்பிகள் அனுபவத்தில் இதைக் கண்டு உணர்வார்கள்.

இத்தகைய விக்கிரகங்களுக்கு, 12 வருடம் வரை சக்தி இருப்பதாக ஐதீகம். பின்னர், 'பாட்டரி சார்ஜ்' செய்வது போல சக்தி ஏற்ற வேண்டும். இதற்காகத்தான் கும்பாபிஷேகம் நடத்துகிறார்கள்.

எல்லாக் கோயிலிலும் கும்பாபிஷேகம் ஒரே மாதிரிதான். ஆகமம், வைதிகம் என்ற இரண்டு வகை உண்டு. முன்னதில் வைதிகத்துக்கு முக்கியத்துவம் சிறிது கம்மி. காஞ்சி காமாட்சி அம்மன் கோயிலில் வைதிக முறைப்படி கும்பாபிஷேகம் செய்தார்கள்.

எந்தக் காரியமானாலும் இடையூறின்றி நடக்க வேண்டி விநாயகரைப் பிரார்த்தனை செய்து கொள்ளுவது போல, இதற்கும் விநாயகரை வழிபடுகிறார்கள். இந்தக் கிரியை செய்பவர் கிருகஸ்தராக இருக்க வேண்டும். (மனைவி உயிரோடு இருப்பது முக்கியம்.)

வீடு கட்டுவதற்குத் திருஷ்டி பரிகாரமாக பூசணி வைப்பது மாதிரி, ''வாஸ்துசாந்தி'' என்கிற சடங்கு செய்வார்கள். கல்யாணத்தில் பாலிகை வைப்பது போல், புற்று மண்ணை எடுத்து ''அங்குரார்ப்பணம்' செய்வது அடுத்தபடி; செய்யப்படும் குடமுழுக்கின் நல்ல தன்மையை அறிவதற்கான சடங்கு இது.

இந்த வைபவம் முடிவதற்குள், ஆசாரியருக்கு ஏதாவது ''அசந்தர்ப்பம்'' ஆகிவிட்டால், தொடர்ந்து அவர் காரியங்களை நடத்த ரக்ஷை கட்டிக் கொள்ளவேண்டும்.

அடுத்ததாக நடத்தப்படும் சடங்கின் பொருள், ஆசாரியரை, இறைவனோடு ஐக்கியமாகச் செய்வது. அதாவது கிரியை நடத்துபவர், கடவுளோடு ஒன்றவேண்டும். 'பஞ்ச சுத்தி', 'மந்திர சுத்தி' ஆகிய சடங்குகள் இதற்காக நடத்தப்படுகின்றன.

ஹ்ரஸ்வரம், தீர்க்கம், ப்லுதம் என்று மூன்றுவிதமாக மந்திரத்தை உச்சரிக்க வேண்டும். உச்சரிப்பு மிக முக்கியம். (உச்சரிப்பில் தவறு ஏற்பட்டதால், விருத்திராசுரனுக்குத் தன் மகனையே இழக்க வேண்டியதாயிற்று.) உதாரணம் சொல்ல வேண்டுமானால், கடலில் முத்துக் குளிப்பவனுக்குச் சகல விதமான உபகரணங்கள் கொடுப்பது மாதிரி, குடமுழுக்கு நிகழ்த்தும் ஆசாரியர்



✕ திருப்பணி நடப்பதால் திரையிடப் பட்டுள்ள கோபுரம்

○ விசுவநாத சிவாச்சாரியார்



○ எந்த உயரத்திற்கும் பரண் தயார்

தன்னைக் காத்துக் கொள்ளச் செய்யும் சடங்குகள் இவை.

இச்சடங்கின் கடைசி அம்சம்: வலது உள்ளங்கையில் சந்தனத்தினால் இடது பெரு விரலால் சந்தனம் பூசி அதில் முக்கோணம் வரைந்து, நடுவில் ப்ரணவம் எழுதித் தன்னைச் சிவ ஸ்வரூபமாக நினைத்துப் பிறகு தனது உடலில் சந்தனத்தைப் பூசிக்கொள்ளுதல்.

குடத்தை மந்திர பூர்வமாக அலங்கரித்து இறைவனின் எல்லாச் சக்தியும் குடத்துள் ஏற்றி இந்தக் குடத்தைத்தான் சகலவித உபசாரங்களுடன் யாக சாலைக்கு எடுத்து வருவார்கள். யாக சாலையின் அமைப்பு; யாக குண்டங்களில் பூசிக்கப் பெறும் அக்னி வகை – இதற்கெல்லாம் தனி விதிமுறைகள் உள்ளன. இங்கு நடத்தப்படும் பூஜைகளால் இறைவனது அருட்சக்தி மேன்மேலும் வலுவுள்ளதாகிறது.

பீடத்துக்கு எட்டு மருந்துகள் இடித்துச் சாத்துவது அவசியம். சுக்கான், குங்கிலியம், கொம்பரக்கு, காவி, செம்பஞ்சு, லிங்கம், வெள்ளை மெழுகு, – வெண்ணெய்–இவையே அந்த மருந்துகள். அதற்குரிய அளவு கொண்டு பீடத்தில் சாத்த வேண்டும். ''அஷ்ட பந்தனம்'', என்று இதையே குறிப்பிடுகிறார்கள். மேலே சொல்லப்பட்ட மருந்துகளைத் தங்கச் சருள் கொண்டு கெட்டிப்படுத்துவது ''சொர்ணபந்தனம்.''

யாகசாலையில் பூஜிக்கப்பட்ட கும்பத்தில் இருக்கும் . தண்ணீரை விமானத்திலுள்ள கலசத்தின் வழியாக அபிஷேகம் செய்வது தான் இறுதிச் சடங்கு. எல்லா விக்கிரகங்களுக்கும் இதன் மூலமாகத்தான் சக்தி பரவுகிறது. மின் சக்தி போல, இறைவனது அருட்சக்தி பரவி எல்லோரையும் மேம்படுத்துகிறது.

பேட்டி: **வாதூலன்**

---

- வடபழனி கோயிலை நிறுவிய ஆதி புருஷர்களில் ஒருவர் ஆஞ்சநேய உபாசி. அவர் விருப்பப்படி முருகன் எதிரேயே ஆஞ்சநேயரைப் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள்.

- வடபழனிக்கு அந்த நாளில் வழக்கமாக வந்த பிரமுகர்கள்:
  பி. டி. ராஜன், வசந்தகோகிலம், தேவன், ஹரிஜன் எம். எல். ஏ. பரமேசுவரன் என்பவர் தேவனுடன் வந்தாராம். சில மாதங்களிலேயே அவருக்கு மந்திரி பதவி கிடைத்தது. அறநிலையப் பாதுகாப்பு அமைச்சர்!

- எம். கே. டி. பாகவதர் ஜெயிலில் அடைபட்டிருந்த போது, அவருடைய உறவினர் தொடர்ந்து ஸஹஸ்ரநாம அர்ச்சனை செய்தாராம். கடைசி அர்ச்சனை முடியும் தருணம், வேலில் குத்தப்பட்டிருந்த எலுமிச்சம்பழம் எகிறிக் கீழே விழுந்தது. பத்துநிமிடத்துக்குள்ளாகவே, ''எம். கே. டி. விடுதலை ஆகிவிட்டார்'' என்கிற செய்தி கிடைத்ததாம்.

—சகுவர்குமார்

## வடபழனி 1, 2, 3!







ஔவையாரிடம் முருகன், ''அன்னையே! உலகிலே இனியது எது?'' என்று வினவினர்.

''இனியது கேட்கின் தனிநெடு வேலோய்!
இனிது இனிது ஏகாந்தம் இனிது!''

'தேன் இனிது, பால் இனிது, கற்கண்டு இனிது' என்று கூறவில்லை.

இனிமை தனிமையில் கிடைக்கின்றது. ஏகாந்தமாக இருக்கின்ற போது அரிய சாந்தி கிடைக்கிறது.

'பசித்திரு, தனித்திரு, விழித்திரு' என்பவர் இராமலிங்க அடிகள். அப்படியிருந்தால் முதலில் வரும் பசித்திரு முதல் எழுத்து ப. தனித்திரு முதல் எழுத்து த; விழித்திரு முதல் எழுத்து வி; பதவி வரும்.

சதா கூட்டம் போட்டு ஊர்க்கதைகளைப் பேசி சீர்கெடக்கூடாது. ஏகாந்தமாக இருந்து பழக வேண்டும்.



○ திருக்கோ[illegible]

# அழகின் பல

முருகப் பெருமானைத் தமிழ்த்தெய்வம், தமிழ் தந்த தெய்வம் என்று போற்றுகிறோம். முருகன் இசையின் வடிவமாகவும் விளங்குகிறான். இசையுலகத் திருமூர்த்திகளில் ஒருவரான ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதருடைய பெற்றோர்கள் வைத்தீச்வரன் கோவிலில் ஒரு மண்டலம் முத்துக்குமாரஸ்வாமியின் சந்நிதியில் விரதமிருந்து அருந்தவப் புதல்வனைப் பெற்றெடுத்தார்கள். அதனாலேயே முத்துஸ்வாமி என்று பெயர் வைத்தார்கள். பாடல்களில் அவர் முத்திரையும் குருகுஹன் என்றே அமைந்தது.

முருகனுக்கு மயில் வாகனம் என்பதை அறிவோம். அவனுக்கு அஜவாகனம் கஜவாஹனம் கூட உண்டு. ஆட்டின் மீது வீற்றிருப்பவன் அஜவாஹனன். திருமுருகாற்றுப்படையில் பிணிமுகம் என்ற யானையின் மீது முருகன் ஆரோகணித்திருப்பதாகக் கூறுகிறார் நக்கீரர்.

வேதம் முருகனைக் குஹன் என்று கொண்டாடுகிறது. தஹராகாசம் என்ற இதய வெளியில் இருப்பவன் குஹன். ஹ்ருதய குகையில் வசிப்பவன். திருத்தணியில் குகையில் இருந்ததாகக் கருதப்படுகிறது. திருச்செந்தூரிலும் வள்ளி குகை என்பதாகக் கூறுகிறார்கள்.

திருச்சாய்க்காடு என்ற தலத்தில் முருகப் பெருமானை வில் ஏந்திய வேலனாகக் காண்கிறோம். இந்த அழகு வடிவமான விக்ரகம் சமுத்திரத்திலிருந்து தற்செயலாகக் கிடைத்ததாம். அதுவே ஓர் அற்புதம்தான். வில்லும் அம்புமாக இருப்பதால் ஸ்ரீராமர் என்று நினைத்துக் கொண்டு விட்டோமோ என்று மயில் நீண்ட தோகையோடு அருகே தலையைத் தூக்கிப் பார்த்துக் கொண்டு நிற்கிறது. "சூடு கோதண்டம்" என்று அருணகிரிநாதர் திருப்புகழில் முருகனுடைய வில்லைக் குறிப்பிடுகிறார். மால் மருகனல்லவா முருகன்!

சுவாமிமலை கும்பகோணத்துக்கு அருகே இருக்கிறது. இங்கே முருகன் முன் குடுமியோடு பிரும்மசாரிக் கோலத்தில் சுப்ரமண்யனாக விளங்குகிறார். ஐந்து அடி உயர வடிவம். உபநயனம் செய்து கொண்ட கோலத்தில் முருகன் விளங்குவதால் இங்கே புத்திரர்களுக்குப் பூணூல் போடுவது ரொம்ப விசேஷம். சரவணப் பொய்கையில் தாமரை மலர்களில் தோன்றிய கந்தனுக்குப் பொன்னால் தாமரை மலர்கள் செய்து மாலையணிவித்திருக்கிறார்கள்.



○ சாயாவனம் - வில்லேந்திய வேலன்



○ கந்தகோட்டம் - முருகன்



○ வைத்தீஸ்வரன் கோயில் முத்துகுமாரசாமி

# டிவங்கள்

தந்தைக்கு உபதேசம் செய்த முருகன் கோலத்தைத் தேசிகமூர்த்தி, தகப்பன் சுவாமி என்று பலபடக் கூறுவது வழக்கம்.

முருகன் ஆறு பொறிகளிலிருந்துதோன்றி ஆறு குழந்தைகளாக ஆறு பெண்களால் பாராட்டி வளர்க்கப்பட்டான். ஒரு குழந்தையை மட்டும் உமையவள் அணைத்துக் கொண்டால் மற்ற குழந்தைகள் ஏங்குவார்களே என்பதால் முருகன் ஒரு உடலும் ஆறு முகங்களும் உடைய பெருமானாக மாறி அன்னையின் தழுவலுக்கு உட்படுத்திக் கொண்டான். ஷண்மதங்களுக்கும் தலைவன் ஷண்முகன். ஷடக்ஷரத்தில் மகிழ்பவன். ஷட்கோண சக்கரத்தில் உறைபவன். ஆறு படை வீடுகள் உடையவன். ஆறு என்ற எண் ரொம்ப அதிர்ஷ்டகரமான எண் என்று திருமுராலஜியில் கூறுகிறார்கள். அதில் என்ன சந்தேகம் இருக்க முடியும்?

கார்த்திகை நட்சத்திரப் பெண்களால் வளர்க்கப்பட்டதால் கார்த்திகேயன் என்ற பெயருடையவன் கந்தன். அவன் உதித்த நக்ஷத்திரம் விசாகமே ஆனாலும் கிருத்திகை நக்ஷத்திரத்துக்குத்தான் மகத்துவம் அதிகம். ஸப்தரிஷிகளில் வசிஷ்டருடைய தர்ம பத்தினியான அருந்ததி நீங்கலாக மற்ற ஆறு ரிஷிபத்தினிகளும் வெகு காலம் தவம் செய்த காரணத்தால் முருகப்பெருமானுக்குப் பாராட்டி வளர்க்கும் பேறு பெற்றார்கள். அவர்கள்பால் உள்ள அன்பு காரணமாகக் கிருத்திகா நக்ஷத்திரத்துக்கு முக்கியத்துவம் அளித்தான் முருகன். கிருத்திகை விரதத்துக்குத்தான் பலன் அதிகம். வடநாட்டில் கார்த்திகேயன் என்றுதான் வழங்குகிறார்கள்.

செம்மங்குடிக்கு அருகில் உள்ள எண்கண் மிகவும் விசேஷமான முருகன் தலம். எண்கணன் என்பது பிரும்மாவுக்குப்பெயர். முருகனுடைய அழகைத் தன் எட்டுக் கண்களாலும் கண்கொட்டாமல் பார்த்து அனுபவித்தார் பிரும்மா. பிரும்மதேவர் பூஜித்த தலம். அதனால் எண்கண் என்று பெயர்.

ராமலிங்க வள்ளலார் பாடிப் பரவிய விசேஷமான தலம் கந்தகோட்டம், சென்னையில் உள்ள கந்தசாமி கோவில்.

வேல் முருகனுக்கு அரோஹரா!

தகவல்கள் தந்து உதவியவர்:

**கி. வா. ஜகந்நாதன்**

புகைப்படங்கள் உதவி:

**என். ராமகிருஷ்ணா, ஸ்பைடர்மேன், நீலா ஸ்டுடியோ, மற்றும் தேவஸ்தானங்கள்.**

○ பழனி மூலவர் - சில்பி ஓவியம்



○ யானை வாகனத்தில் முருகன்

X திருப்பரங்குன்றம்





"ஞாயிறு மிகச் சிறந்த தேவன்.
அவன் கைப்பட்ட இடமெல்லாம் உயிருண்டாகும்...
அது நம் வலிமையை வளர்த்திடுக.
ஞாயிற்றை, திங்களை, வானத்து வீடுகளை, மன்களை-
ஒளியுடைய அனைத்தையும் வாழ்த்துகின்றோம்.
ஞாயிற்றை வாழ்த்துகின்றோம்."

— *மகாகவி பாரதி.*

# பொங்கல் பொங்குக! இனிய மங்களம் எங்கும் தங்குக!



**டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட்**

சென்னை 600 001

**சைக்கிள்கள், சைக்கிள் சீட்டுகள், செயின்கள்,
டைனமோ லாம்ப் செட்டுகள், எஃகு குழாய்கள்,
எஃகு ஸ்டிரிப்புகள், மெட்டல் செக்ஷன்கள்
மற்றும் 'Z' பர்லின்கள் தயாரிப்பாளர்கள்.**



முருகப்பா நிறுவனம்

# மேலக் கடற்கரையில் திருச்செம்பூர்

பம்பாயில் செம்பூர் செட்டா நகரில் பிரும்மாண்டமாக எழுப்பியுள்ளது முருகன் கோயில். எழுபத்தைந்து லட்ச ரூபாய் செலவில் உருவாகியுள்ள இத்திருக்கோயில் பம்பாய் மக்களுக்கு மட்டுமின்றி நாள்தோறும் பம்பாய் நகரைக் காண வரும் யாத்திரீகர்களுக்கும் பம்பாயில் பார்க்க வேண்டிய முக்கிய இடங்களுள் ஒன்றாய் விளங்குகிறது.

''கீழைக் கடற்கரையிலோர் திருச்செந்தூர்
மேலைக் கடற்கரையிலோர் திருச்செம்பூர்''

என்று புகழ்ந்தார் திரு. கி. வா. ஜ.

குன்றுதோறும் ஆடி வரும் குமரன் பம்பாயில் குடி இருக்கும் இடத்தில் குன்று இல்லாத காரணத்தால் நிலப்பரப்பில் இருந்து 51 அடி உயரத்தில் அமைந்து இருக்கிறான். கோயிலின் மேலே செல்வச்சரியாக 108 படிகள். ஒவ்வொரு படியையும் வண்ண வண்ணக் கோலங்கள் அலங்கரிக்கின்றன. படி ஏற இயலாதவர்களுக்கு என லிஃப்ட் வசதி செய்யப்பட்டுள்ளது. மூலஸ்தானத்தில் ஸ்ரீ வள்ளி தேவசேனா சமேதராய், மேற்கு நோக்கி அமைந்து அருள்பாலிக்கிறார் சுப்பிரமணியர். அவர் சந்நிதியைச் சுற்றி நான்கு புறமும் விநாயகர், தர்மசாஸ்தா, குருவாயூரப்பன், துர்க்கை ஆகிய தெய்வங்களுக்கும் தனித் தனி கருவறைகள். ஸ்ரீ குருவாயூரப்பனுக்கும் ஐயப்பனுக்கும் கேரளத்துக் கோவில்களின் சம்பிரதாயப்படி, தாந்திரிக முறையில் பூஜைகள் செய்யப்படுவதால் தமிழர்கள் மட்டுமின்றிக் கேரளத்தவர்களும் கோவிலில் நடைபெறும் எல்லாவித வழிபாடு விழாக்களிலும் பெரும் அளவு பங்கு கொண்டு பயன் பெறுகின்றனர்.

மேல்மாடியில் அமைந்த தெய்வங்களுக்கு மண் தொடர்பு இருக்க வேண்டும்; சாந்நித்யம் கூடும் என்பதால் ஒவ்வொரு சந்நிதிக்கும் அஸ்திவாரம் முதல் மேல் மாடிவரை நீளும் குழாய் வடிவில் தூண்களை நிர்மாணித்து அதில் மண்ணை நிரப்பி, தெய்வங்களை பூஸ்பரிசம் உடையவையாக செய்து இருக்கின்றனர்.

முருகன் ஆலயம் கோவிலாக மட்டுமின்றி வேறு வகையிலும் பக்தர்களுக்குப் பயன்படுகிறது. இரண்டு – மூன்று கல்யாணங்கள் ஒரே சமயத்தில் நடைபெறுகின்றன, இங்குள்ள கல்யாண மண்டபத்தில்! இதுதவிர, முருகன் சந்நிதியிலும் எளிய திருமணங்கள், பெயரிடுதல், அன்னப் பிராசனம், முடி காணிக்கை, துலாபாரம் போன்ற வேண்டுதல்களைப் பக்தர்கள் மன நிறைவுடன் நிறைவேற்றி வைக்கிறார்கள்.

ஞாயிற்றுக்கிழமை தோறும் சூரிய நமஸ்கார வகுப்பு பக்தி சிரத்தையுடன் நடைபெறுகிறது. தவிர, ''ஷண்முகப்ரியா'' என்ற பெயரில் கலைப்பிரிவு ஏற்படுத்தி சங்கீத, நாட்டியப் பள்ளியே நடக்கிறது. குருவாயூரப்பன் சந்நிதியில் ''நாராயணீயம்'' ஸ்லோக வகுப்பும் உண்டு. மிகச் சிறந்த இசை, நடன, நாடக நிகழ்ச்சிகளை ஷண்முகப்ரியா சார்பில் இங்கு நடத்தும் ஏற்பாட்டைத் திறமையுடன் செய்து வருகிறார் பி. எஸ். என்று அன்புடன் அழைக்கப்படும் செயலாளர் சுப்ரமணியன்.

ஆர்ய வைத்திய பார்மஸி தொடங்கப்பட்டு ஆயுர்வேத முறையில் நோயுற்றவர்களுக்குச் சிகிச்சைகள் செய்து, அரிய மூலிகைகள் அடங்கிய மருந்துகளும் விற்பனையாகின்றன. இப்படி இறையுணர்வை வளர்க்கும் போதே மக்களுக்குப் பலவிதங்களில் பணியாற்றியும் வருகிறது கோவில்.

இந்தப் பிரும்மாண்டமான ஆலயத்தின் கான்க்ரீட் அமைப்புக்கு ஆர்க்கிடெக்ட் சி. எஸ். கே. ராஜு என்ற கிறிஸ்தவர். சிற்பிகளின் கைவண்ணத்தைக் கான்க்ரீட் கட்டிடத்துடன் இணைத்துக் கட்டிய நிபுணர் ஜுண்டன்வாலா என்ற முஸ்லிம்!

—விசுவநாதன்

○ கோயிலின் முன்புறத் தோற்றம்



அனைவருக்கும்
மனநிறைவு
தரும்
சுவைமிகு
ஊறுகாய்!

# டி.எஸ்.ஆர்
# வெஜிடபிள்
# ஊறுகாய்

டி. எஸ். ஆர். & கோ.,
'கோகுல் கார்டன்ஸ்'
கும்பகோணம்.








Criterion

# வடபழனி பக்தர்கள்

ஆண்டவன் பால் உண்டான கோபம் இன்னும் எனக்குத் தீரவே இல்லை!''



✕ சௌந்தரா கைலாசம் ✕ ஏ. வி. மெய்யப்பன்

## சௌந்தரா கைலாசம்:

''19 அல்லது 20 வயதில் எப்போதும் ஒரு சிந்தனை. நிஜமாகவே கடவுள் இருக்கிறாரா அல்லது பெரியவர்கள் சொல்லக் கேட்டுக் கேட்டுப் பரம்பரைப் பரம்பரையாக இந்தத் தெய்வ பக்தி தொடர்கிறதா? இதை எப்படித் தெரிந்து தெளிவது? இதுபற்றி ஒருநாள் என் உறவுக்காரரான என் வயதை ஒத்த வேலாயுதம் என்பவரிடம் சொல்லிக் கொண்டிருந்தேன்.

அவர் நல்லசாமி கவுண்டரிடம் சென்று சொல்லியிருக்கிறார். நல்லசாமி கவுண்டர் எனக்குத் தாத்தா முறை. முருக பக்தர். அவர் கோபப்படவில்லை. மாறாக, ''நம் சௌந்தரத்திற்கு இந்த எண்ணம் வந்தது நம் குலத்திற்கே பெருமை'' என்று சொல்லி வேலாயுதத்தின் மூலம் ஒரு கடிதம் அனுப்பினார்.

அதில், வைதாரையும் வாழ வைக்கும் முருகப் பெருமானை வணங்கி வழிபட வேண்டிய முறைகள், மூலமந்திரம் ஆகியன அடங்கி இருந்தன. அந்தக் கடிதப்படிதான் இன்று வரை நடந்து வருகிறேன்.

என் கணவரின் ஜூனியர் ராஜமாணிக்கம் சொன்னதின் பேரில், ஏற்கெனவே சொல்லிக் கொண்டிருந்த மூலமந்திரத்தோடு, திருமுருகாற்றுப்படையும் ஓத ஆரம்பித்தேன். அதிலிருந்து தவறாமல் செவ்வாய்தோறும் வடபழனி சென்று வழிபட்டு வந்தேன். செவ்வாயன்று வெளியூர் போக வேண்டி வந்தால், அதற்கு முதல்நாளோ திரும்பி வந்த உடனேயோ அந்த வாரத்தில் போய் வந்து விடுவேன்.

திடீரென்று என் கணவர் டில்லிக்குப் பதவி உயர்வில் சென்றபோது, வடபழனி முருகப் பெருமானைக் காண முடியாமல் நான் பட்டபாடு அந்த முருகனுக்குத்தான் தெரியும். இப்போது சென்னை திரும்பிச் சிலகாலம் ஆயிற்று என்றாலும் செவ்வாய் தோறும் தரிசனம் செய்ய முடியாமல் என்னை வடக்கே அனுப்பிய வடபழனி

## ஏ. வி. மெய்யப்பன்:

ஏ. வி. எம். சரவணன் தமது தந்தையாரை நினைவுகூர்ந்து கூறியது:

''ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் தவறாது கோயிலுக்குச் செல்வார் அப்பா. அப்போது மிக அமைதியான சூழ்நிலை; அப்பாவும் அவ்வளவாகப் பிரபலமாகவில்லை. எனவே கோயிலுக்கு வந்து இறைவனோடு ஒன்றுபடுவது சுலபமாயிருந்தது. அவர் பிரபலமான பிறகு கோவிலில் இந்த அமைதி கிடைக்கவில்லை. எனவே கோயிலுக்கு வருவது குறைந்து விட்டாலும் முருகன் மீதுள்ள பக்தி குறையவே இல்லை. எந்த ஒரு நல்ல காரியமானாலும், வடபழனி கோயிலிலிருந்து பிரசாதம் வராமல் இருக்காது. சகோதரர்கள் எங்கள் மூவருக்கும் முருகப் பெருமான் பெயர்தான். 38—ம் வருடம் 'ராஜாஜி பிரஸ்' என்று துவக்கினார். 1950 — ம் வருடம் என்று எண்ணுகிறேன். அரசியல் தலைவர்கள் பெயரை இது போல் உபயோகிக்கக் கூடாது என்கிற



✕ தேவன்

உத்தரவை அரசாங்கம் பிறப்பித்தது. இதனால்தான் தேரு லஞ்ச் ஹோம் ராம கிருஷ்ணா லஞ்ச் ஹோமாக மாறியது. அப்பாவும் ராஜாஜி பிரஸ்ஸை ''வடபழனி பிரஸ்'' என்று மாற்றிவிட்டார்.

எந்தப் படத்துக்குப் பூஜை போட்டாலும் கோயிலிலிருந்து பொங்கல், வடை எல்லா ஊழியர்களுக்கும் வரும். இப்போது பல்வேறு காரணங்களால் கோயிலிலிருந்து வருவது இல்லை; இருந்தும் அதே சம்பிரதாயத்தைக் கடைப்பிடித்து பூஜையில் நிவேதனம் செய்து தொன்மையில் தான் சுண்டல், பொங்கல், வடை வழங்கி வருகிறோம்.

'ராமு' படம்: ''கோயிலிலிருந்து பிரசாதம்

✕ ராஜமாணிக்கம் ✕ ராமஸ்வாமி





வருகிறதே!'' என்கிற வசனம் ஜெமினி கணேஷ் சொல்வதாக வரும். உள்ளபடிக்கே வடபழனி கோயிலிலிருந்து, அப்பா பிரசாதம் கொண்டு வந்தார் அக்காட்சிக்கு.

கல்யாண மண்டபம் மாதிரி ஒன்று அப்பா கட்டினர். ''அனுபூதி மண்டபம்'' என்று அதைக் கோயிலில் குறிப்பிடுகிறார்கள்.

**ராஜமாணிக்கம்:**
*(பப்ளிக் பிராஸிகியூட்டர்):*

''படித்து விட்டுச் சும்மா இருக்கிற பருவம். சொந்த ஊரான திருவிடைமருதூரில் இருந்தேன். திடீரென்று பாம்பு வருவது போன்ற பிரமை என்னுள் எழுந்தது. எங்கு சென்றாலும் — குளிக்கும்போது படுக்கப் போகும் போது — எப்போதும் பாம்பு வருவது போல் தோன்றிக் கொண்டே இருந்தது. வீட்டுக்கு அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்த பெரியவர் என்னைத் திருமுருகாற்றுப்படை படிக்கச் சொன்னர். நாலணா கொடுத்து வாங்கிப் படித்தேன். பாம்பு வருவது அப்புறம் மறைந்தே விட்டது!

சென்னைக்கு வந்து, ஜஸ்டிஸ் கணேச நாயர் மூலமாகத்தான் வடபழனி முருகனுடன் தொடர்பு கொண்டேன்.

வாரம் மூன்றுநாள் வருகிறேன். ஒருமணி நேரம் எல்லாவற்றையும் மறந்து முருகனிடம் லயித்துப் போவேன். சொந்தத் தாய் தகப்பன் அருகில் இருப்பது போன்ற ஓர் ஈர்ப்பு எனக்கு ஏற்படுகிறது.

**எஸ். ராமஸ்வாமி** *(வர்த்தகர்):*

''வார்னிஷ், பெயிண்ட் வியாபாரம் செய்து வருகிறேன். வெள்ளிக்கிழமை தோறும் கம்பெனியில் பூஜை செய்வது வழக்கம். ஆனல் இந்தப் பிரிவு தொடங்கியதிலிருந்து ஆபீஸில் கற்பூரம் ஏற்றி பூஜை செய்வது சற்று 'ரிஸ்க்' என்று தோன்றியது. அருகிலேயே வடபழனி கோயில் இருந்ததால், அங்கு போய் பூஜை செய்யும் வழக்கம் ஆரம்பித்தேன். கோயிலுக்குப் போய்த் தரிசனம் செய்த மாதிரியும் ஆயிற்று; பூஜை செய்வது போலவும் ஆயிற்று. இன்றளவும் அந்த வழக்கத்தைக் கடைப்பிடித்து வருகிறேன். வியாபாரம் நல்ல நிலையில் இருப்பது ஒருபுறம்; மன நிம்மதி தாரானமாகக் கிடைக்கிறதே!''

**தேவன்:**

ஜஸ்டிஸ் ஜகந்நாதன் நாவலில் வடபழனி முருகனையும், எதிரேயுள்ள ஆஞ்சநேய மூர்த்தியையும் பற்றி மனமுருகி எழுதியுள்ளார்:

''அன்று அருமையான தரிசனம். அது அவள் மனத்திலே வாடும் பயிர்களில் விழும் மழைத் துளிகள் போன்று, நம்பிக்கையை ஊட்டியது. ''என் வடபழனி அண்ணா!'' என்று சிவநேசர் உருகிப் பாடியது நெக்குருகச் செய்தது. ''என்ன அண்ணாக இருந்து கொண்டே, இத்தனையும் பார்த்துக் கொண்டு இப்படிப் பேசாமல் இருக்கிறாயே!'' என்று விம்மி விம்மி அந்தத் தெய்வத்தைக் கேட்டாள். ''நீ பேசாமல் இருந்தாலும், உன் கையில் வைத்திருக்கும் வேல் சும்மா இருக்குமா? எப்பேர்ப்பட்ட வேல் அது!

''தேரணியிட்டுப் புரமெரித்தான் மகன்
செங்கையில் வேல்
கூரணியிட்டு அணுவாகிக் கிரௌஞ்சம்
குலைந்து, அரக்கர்
நேரணி யிட்டு வளைந்த கடகம் நெளிந்தது;
சூர்ப்
பேரணி கெட்டது; தேவேந்திர லோகம்
பிழைத்ததுவே!''

ஜயலக்ஷ்மியின் உள்ளம் வெதும்பியது. அவள் தன் கண்களை மெள்ள ஆஞ்சநேய மூர்த்தியின் ஸந்நிதிக்குத் திருப்பினாள்... ஸூர்யோதயத்துக்கு முன்பு அருணோதயம் வருவது போலவே, ஸ்ரீராகவன் ராவண ஸம்ஹாரம் செய்யுமுன் இந்த மூர்த்தி அசோகவனத்தை அழித்துக் காட்டவில்லையா?

கோர்ட்டில் ஜயலக்ஷ்மி வெகுந்துவாங்கிவிடுகிறாள். குறுக்குக் கேள்விகளுக்குச் சரியான பதிலடி கொடுக்கிறாள்.

...ஈச்வரன் வந்து, ''எங்கே ஜயலக்ஷ்மி.. புரட்டி எடுத்து விட்டாயே! நீதான் பேசினயா...?'' என்று கேட்டார்.

ஜயலக்ஷ்மி நன்றியுடன் நிமிர்ந்து அவரைப் பார்த்தாள். ''நான் பேசவே இல்லை, ஐயா! அந்தப் பழனி ஆண்டவன் தான் எனக்காகப் பேசினர்!'' என்றாள் உணர்ச்சி ததும்ப.

இறுதியில் ஜயலக்ஷ்மியின் கணவன் விடுதலை பெற்று விடுகிறார். அது யார் செயல்?

ஜயலக்ஷ்மியின் உள்ளம் அதுபற்றித் தீர்மானமாக ஓர் அபிப்பிராயம் கொண்டிருந்தது.

திருப்போரூரில் முருகன் சந்நிதியில் வணங்கி நின்ற அவள், ''என் முருகன் செயல்!'' என்று இதய ஆழத்திலிருந்து சொன்னாள்; சொன்னதை நம்பினாள்!

தொகுப்பு: **நமயந்தி**

---

பணத்தாலும் படிப்பினாலும் குலத்தாலும், பதவியினாலும் அழகினாலும் உயரத்தினாலும், கனத்தாலும் ஒருவன் பெருமையடைய முடியாது. தியாகம் ஒன்றாலேயே பெருமையடைய முடியும். தனக்கென்று வாழ்கின்றவன் சிறியவன். பிறர்க்கென்று வாழ்கின்றவன் பெரியவன். தனது சொல், செயல், உடைமை எல்லாம் பிறருக்கே அர்ப்பணம் செய்து விட்டுப் புகழையும் புண்ணியத்தையும் கூட விரும்பாமல் தியாகம் புரிந்து வாழ்கின்றவர்களே நாட்டைத் தாங்கும் நல்ல வைரத் தூண்களாவார்கள்.



# என்பீல்ட்

# மண்ணெண்ணை

# பம்பு செட்டுகள்

- உறுதியானவை. நம்பிக்கையானவை. நெடுநாள் உழைப்பவை.
- சிறு விவசாயிகளுக்கு மிக ஏற்றவை: 3 ஏக்கர் வரை- 2 ஹார்ஸ் பவர் பம்பு செட்டு 5 ஏக்கர் வரை-3.4 ஹார்ஸ் பவர் பம்பு செட்டு
- மிக இலேசானவை—நிலம் விட்டு நிலம் எடுத்துச்செல்ல எளிதானவை
- அரசுக் கடன்களுக்கும் மானியங்களுக்கும் அங்கீகாரம் பெற்றவை.




## என்பீல்ட்

புல்லெட் மோட்டார் சைக்கிள் அளிப்பவர்கள்

ADWAVE EIA 2404

# கவியுலகில் கலிவர்தன்

ரா. கணபதி

முருகன் உபதேசித்த இலக்கணத்தை அகத்தியர் உலகுக்கு அளித்தார். முதற்சங்க நூலாகிய அந்த அகத்தியத்தைக் கடலன்னை எடுத்துக் கொண்டு விட்டாள். வேறு இலக்கண நூல்கள் பிற்காலத்தில் தோன் றின. ஆயினும் வம்ச சூடாமணிப் பாண்டிய னின் காலத்தில் வாழ்ந்த மூன்றுவது சங்கப் புலவர்கள் ஒரு பெருங்குறையை உணர்ந் தனர். ஐந்திலக்கணங்களில் எழுத்து சொல், யாப்பு, அணி ஆகியவற்றுக்கான ஆதார நூல்கள் தமிழில் இருந்தாலும், ஐந்துக்கும் நடுநாயகமான பொருள் குறித்த இலக்கணம் திட்டவட்டமாயில்லை என்பதே அவர்களது குறை. மன்னன், சோம சுந்தரக் கடவுளைப் பிரார்த்தித்தான்.

மறுநாள் வைகறையில் திருவலகிடுவதற் காகச் சிவாசாரியர் சொக்கப்பன் கருவறை யில் நுழைந்தபோது லிங்கபீடத்தின் கீழ் சொக்கப் பொன்னும் மின்னும் ஓர் ஏட்டுக் கட்டைக் கண்டார். அதைக் கொண்டு போய் மன்னனிடம் அளித்தார். பொருள் இலக்கண நூல்தான் அது. பரம்பொருள் செய்தது.

தான் முதலில் தந்த நூல் கடலில் போய் விட்டதால் முருகனுக்குக் கோபம் போலும். பேசாதிருந்து விட்டான். பேச்சு வராத ஊமைக் குழந்தையாக உப்பூரிகுடி கிழார் என்ற வணிகர் வீட்டில் அவதாரமும் செய் தான்.

ஈசனார் அருளிய இலக்கண நூல்தான் ''இறையனார் அகப்பொருள்'' என்பது. இதற்குப் புலவர்களில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக உரை செய்தார்கள். நக்கீரர், பரணர், கபிலர் போன்ற பெருந் தலைகள் இப்படி வித்தியாஸமாக உரை செய்திருக்கும் போது எதைக் கொள்ளுவது?

நூலைத் தந்த ஈசனிடமே புலவர்களையெல் லாம் அழைத்துச் சென்று முறையிட்டான் மன்னன்.

''நம்முடைய இளங்குமரனே உப்பூரிகுடி கிழாரின் மகன் உருத்திரசென்மனாக வந் திருக்கிறான். அவனைச் சங்கப் பலகையில் இருத்தி எல்லா உரைகளையும் எடுத்துரை யுங்கள். அவன் ஆமோதிப்பதையே மெய் யுரையாகக் கொள்ளுங்கள்'' என்று அசரீரி பிறந்தது.



பெருமகிழ்ச்சியோடு எல்லோரும் வணிகர் வீட்டுக்குச் சென்று பார்த்தால்... அந்தப் பிள்ளையோ ஊமை! என்றாலும் ஈசன் கட்டளைப்படி ஒவ்வோர் உரையாக அவன் முன் படிக்கப்பட்டது. தவறான உரைகளைக் கேட்ட மாத்திரத்தில் அவனுடைய உதடு துடித்தது. உடல் நடுங்கியது. கண்ணில் நீர் துளிர்த்தது. ஓரளவு நல்ல உரைகளைக் கேட்கையில் உதட்டில் மந்தஹாஸம்; உடல் முழுவதுமே ஒரு பிரகாசம்! கடைசியாக நக்கீரரின் உரை நிவேதிக்கப்பட்டபோது, ஒவ்வொரு சொல்லுக்கும் அங்கீகாரமாக அவனது தலையின் ஓர் ஆஹாகார அசைப்பு!

திருமுருகாற்றுப் படை செய்தவரின் உரையே மெய்யுரை எனப் புலவர்களும் மனமார ஏற்றுக் கொண்டனர்.

★ ஆதிசங்கரர் செந்தில் வந்து சேந்தன் முன் நின்றபோது, சொல்லா, பொருளா, இயலா, இசையா எதுவும் தெரியா நிலையில் தான் இருந்தாராம். திடுமென, ஏகமான சித்து ஆறு திருவாய்களோடு அவரிதயத்தில் ஜ்வலித்ததாம். ''என்ன ஆச்சரியம்! சித்ர கவி வழிய ஆரம்பித்து விட்டது என் வாய் வழியே!'' என்று சொன்னவாறு 'புஜங்கம்' பாடத் தொடங்கிவிட்டார்.

★ ''முத்தைத் தரு'' என்று அருணகிரியாருக்குக் கந்தநாயகனே முதற்சொற்களை எடுத்துத் தந்த பிரபாவம் தானே அவரைச் சந்தநாயகராக்கிற்று? இதில் ஒரு வேடிக்கை. முதலிலே அவரையும் ஊமைதான் ஆக்கினான். ''சும்மாயிரு சொல்லற'' என்றான். உடனே அவர் பேசா அநுபூதியாம் மஹாநுபவம் பெற்றார். அப்புறம் அவரால் நானிலம் செழிக்க வேண்டும், நல்லன்பு தழைக்க வேண்டுமென்பதற்காக அவருக்கு அடியெடுத்துத் தந்து பாட்டுவித்தான்.

★ ஊமையாய்ப் பிறந்த குமர குருபரரை உவமையில்லாக் கவியாக்கியவனும் குருபரனாகிய குமரன்தான்.

★ திருத்தணியில் விருத்த வேதியராய் வந்து முத்துஸ்வாமி தீக்ஷிதர் வாயில் ஒரு கற்கண்டைப் போட்டுவிட்டு மறைந்தான் முருகன். ஸாஹித்யமும் ஸங்கீதமும் அவதரிக்கலாயின.

பத்துக் கைகளோடு கூடிய மஹாகணபதியின் துதியுடன் கச்சியப்பர் கந்தபுராணத்தைத் தொடங்க வேண்டுமென்பதற்காக அவருக்கு ''திகடசக்கர'' என்று எடுத்துக் கொடுத்தான்.

அவர் புராணத்தைப் பூரணமாக இயற்றி காஞ்சியில் அரங்கேற்றுகையில், ''திகடசக்கர'' என்று தொடங்கினாரோ இல்லையோ புலவர்கள் அவரை மொலு மொலுவென்று பிடித்துக் கொண்டு விட்டார்கள். ''திகழ்—தசக்—கர'' என்பதாகப் பத்துக் கையுடன் திகழும் விநாயகனைத்தான் அவர் பாடுகிறார் என்று புரிந்து கொண்ட அவர்கள் 'திகழ்', 'தச' என்ற இரு பதங்கள் 'திகடச' என்று புணர்வதற்கு இலக்கண விதியே இல்லை என்று சாதித்தார்கள்.

அடியெடுத்துக் கொடுத்துத் தன்னை அடிபட வைத்தவனின் திருவடியிலேயே போய் முட்டிக் கொண்டார் கச்சியப்பர். அவரது ஐயன் கனவில் தோன்றி, மறுதினம் அவரது பிரச்னை தீரும் என்று கூறினான்.

மறுநாள் மீண்டும் அவை கூடியது. ஒரு புலவர் கவடிக் கட்டுடன் தோன்றினார். ''நான் சோழநாட்டிலிருந்து வருகிறேன். அங்கே வெகுவாகப் போற்றப்படும் வீரசோழியம் என்ற இலக்கண நூலைப் பற்றி நீங்கள் கேள்விப்படவில்லை போலிருக்கிறது. இதோ இந்தக் கவடியில் இருப்பது அந்த நூல்தான். இதில் சந்திப்படலத்தில் பதினெட்டாம் செய்யுள் படிக்கிறேன், கேளுங்கள்'' என்று கூறி, ஓலையைப்புரட்டி வாசித்தார்.

செய்யுளில் வேறென்ன சொல்லியிருக்கும்? 'திகழ்', 'தச' என்ற இருபதங்கள் 'திகடச' என்று புணர விதி உண்டு என்று அது அழுத்தந்திருத்தமாகக் காட்டிற்று.

★ பொய்யாமொழிப் புலவர் சிவனையன்றி வேறெவரையும் பாடாத அதிவீர சைவர். முருகனைப் பாடுமாறு அவரிடம் எவரோ வேண்ட, ''கோழியைப் பாடிய நான் குஞ்சையா பாடுவேன்?'' என்று எடுத்தெறிந்து பதில் சொன்னார்.

'அப்படியா சேதி?' என்று அப்போதே சவால் விட்டுக் கொண்டது நம் சிவக்குஞ்சு.

ஒரு ஸமயம் பாலைவனத்தில் தனிவழியே பொய்யாமொழி போகும்படி ஆயிற்று. அப்போது முருகன் வேடனாகி வில்லையும் அம்பையும் காட்டி அவரை விலவிலக்கச் செய்தான்.

''தலைவன் பாற்பட்ட் தலைவியைக்குறித்து ''நற்றாய் இரங்க''லாக இந்தப் பாலைவனத்தைப் பற்றி நீர் ஒரு பாடல் செய்ய வேண்டும். அதில் என் பேரையும் அமைத்திருக்க வேண்டும். அப்போது தான் விடுவேன்'' என்றான். தன் பேர் முட்டை என்றும் சொன்னான்.

புலவர் அப்படியே ஒரு வெண்பா பாடினார். 'முன்தைக்கும்' என்பதை 'முட்டைக்கும்' என்றமைத்தார்.

''தப்பு, தப்பு! பொருட்குற்றமிருக்கிறதே ஓய் உம் பாட்டில்!'' என்றான் முட்டை.

''எப்படி?''

''எப்படியா? கள்ளிப் பொறி பறப்பதாக முதல் வரியில் சொல்லியிருக்கிறீரே, கள்ளியே கரிந்து போகிற காட்டில் வேலமரமுள் மட்டும் எப்படியிருக்குமாம்?'' என்றான் கந்தன்.

பொய்யாமொழி தம் மொழியும் பொய்த்ததா என்று அதிர்ந்து நிற்க, அவருக்கு இரண்டாவது அதிர்ச்சியாக அவனே அவர் பெயர் அமைத்து ஓர் அருமையான வெண்பா, ''விழுந்த துளி'' என்று தொடங்கி, அதே பொருளில் பாடினான். மூன்றாவது அதிர்ச்சியாக, குஞ்சைப்பாட மாட்டேன் என்றவர், அதற்கும் ஒரு நிலை கீழே போய் இப்போது முட்டையைப் பாடியது எப்படி?'' என்றான்.

தன் அசட்டுத்தனத்துக்குக் கோழி முட்டை போட்டுவிட்ட அவனை அவர் அடையாளம் காணாதிருப்பாரா?

பணிந்தார். அவர் நாவில் ஐயனுடைய அருள் வேலின் முன்முனை அமுதமாகத் தைத்தது — மந்திரநாமத்தை எழுதத்தான்!

# ராலி:.பேன் விசிறிகளின் உள்ளமைந்த மேம்பாடு இதற்கு உத்தரவாதம் உண்டு




முற்றிலும் சமநிலைப்
படுத்தப்பட்ட இயந்திர
நுணுக்கம் மிக்க
வடிவமைப்பின் காரணமாக,
ராலி:.பேன் ஸூப்பர்ஸ்டார்
தொல்லையின்றி ஓடுகிறது








தொல்லையற்ற ஓட்டம் என்கிற கண்ணோட்டத்தில் பார்க்கிறபோது, ராலி:.பேன் ஸூப்பர்ஸ்டார் இணையற்று விளங்குகிறது. டபுள் பால் பேரிங்குகள் இருப்பதால் மோட்டார் நீண்ட காலம் உழைப்பதோடு, இரைச்சலற்ற ஓட்டம் கிடைக்கிறது. பிளேடுகள் மிக நுணுக்கமாக சமநிலைப்படுத்தப் பட்டிருப்பதால், சீரான காற்றோட்டம் அளிக்கிறது. ஆல்-மெட்டல் ரெகுலேட்டர் என்பதால் நீடித்த உழைப்பு நிச்சயமாகிறது. ஆகவே பணியில் ஈடிணையற்ற விசிறி உங்களுக்குக் கிடைக்கிறது.

ஸூப்பர்ஸ்டார் மீது நம்பிக்கை வையுங்கள். இதன் செயல்திறனுக்கு இணையே இல்லை.

**ராலி:.பேன்**

தரமோங்கிய தயாரிப்புகளுக்கு




**ராலீஸ்**

மல்ட்டி டெக்னாலஜி க்ரூப்

ULKA-RFC-2-82-TM

அருள்வாக்கு

# தந்தையை மிஞ்சிய தனயன்



இமயமலை மகா பெரியதாக இருக்கலாம். ஆனால் இமயமலைக்குள் இருக்கிற அத்தனை அவயவங்கள் கடுகுக்குள்ளும் இருக்கும். கடுகைக் கூட அப்படிப் பிரித்துக் கொண்டே போகலாம். கடைசியில் ஓர் அணு வந்து நிற்கும். அப்புறம் பிரிக்க முடியாது. சர்வ வியாபகமாக இத்தனை அண்ட சராசரங்களாகப் பிரிந்திருக்கிறசிவசக்தியைப் பிரிக்க முடியாமல் ஓரிடத்தில் பார்க்க வேண்டும் என்றால் அது அவர்களது அன்பு ஊற்றெடுக்கிற இருதய மத்தியில் தான். பலவாக அவர்களிடமிருந்து விரிந்திருப்பதெல்லாம் ஒன்றாகக் குவிகிறது இந்த அன்பு என்கிற அணுவில்தான்.

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ(து) ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவ(து). ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே

என்றார் திருமூலர். அன்பு ஒன்றே உள்ள அந்த மனசைத்தெரிந்து கொண்டு விட்டால் அப்புறம் நம் மனசும் நூறாயிரம் திசையில் ஓடாது. அன்பிலேயே முழுகிக் கரைந்து அன்பாகவே ஆகிவிடும். அருணகிரிநாதர் பெற்ற அநுபூதி இதுதான்.

பரமேசுவரன் வஸ்து (Matter) அம்பாள் அதன் சக்தி (Energy) என்கிற ஸயன்ஸ் ஸூத்திரமெல்லாம் ஒருபக்கம் இருக்கட்டும். வஸ்துவின் ஸத்தை (சிவமயமான வெறும் இருப்பு) அதன் மகாசக்தி (அம்பாளின் ஆற்றல்) இதுகளை மட்டும் சொல்லிக் கொண்டு நமக்கு என்ன பிரயோஜனம்? நம்மைக் கடைத் தேற்றப்போவது அவர்களுடைய அன்புதான். அருள்தான். இருவருடைய அன்பும் பொங்கிப் பெருகிக்கலந்த இந்த இடம் தான் அவர்களுடைய செல்லப் பிள்ளையான சுப்பிரமணியர். கடைக்குட்டி யாருக்குமே செல்லம்தானே? 'செல்வமுத்துக் குமரன்' என்றே வைத்தீசுவரன் கோயிலில் அவருக்குப் பெயர். உள்ளே ஒன்றாக இருந்த அன்பு, இரண்டாகப் பிரிந்து மறுபடி ஒன்றாகக் கலந்து இப்படி நாம் உபாசிப்பதற்குச் சுலபமாக சுப்பிரமணியமாக மூர்த்தி கரித்திருக்கிறது.

சிவசக்தி ஜோதியில் ஜனித்த அவர் மகா தேஜஸ்வி. பரம பராக்கிரமசாலி. எவராலும் சம்ஹரிக்க முடியாத சூரன் தாரகன் முதலான அசுரர்களை வெல்லவே தோன்றிய மகா சக்திமான். சக்திவேல் என்றே சொல்கிறோம். ஆனால் இந்தப் பராக்கிரம சக்தியோடு அருட்சக்தியாக இருப்பதே அவருடைய விசேஷம்.

அறிவுச் சக்தியாக இருக்கிறவரும் அவர் தான். 'ஞான பண்டிதன்,' 'ஞானஸ்கந்தன்,' என்பார்கள். ஆதி குருவான தகப்பனுக்கே உபதேசம் பண்ணினவன் 'ஸ்வாமி' என்று அமரத்தில் சொல்லப்படுகிற சுப்ரமண்யர். இந்த அவசரத்தில் (கோலத்தில்) தகப்பன் சாமி எனப்படுகிறார். ஸ்வாமிமலை என்றே அவர் சிவனுக்குப் பிரணவோபதேசம் செய்கிற சுப்பிரமண்ய ஸ்தலத்துக்குப் பெயர் இருக்கிறது. அங்கே அவரை 'ஸ்வாமிநாதன்' என்பார்கள்.

செல்லப்பிள்ளை! அதனால் தன்னைக்காட்டிலும் இர்தப் பிள்ளையை எல்லா அம்சங்களிலும் பெரியவனாகக் காட்டிப் பூரித்துப் போகிறார் பரமேசுவரன். 'என்னை' விட இவன் 'ஞானி' என்று பிள்ளையிடமே தழைந்து உபதேசம் வாங்கிக் கொள்கிறார். 'வர பலத்தால் தாரகன், சூரன் இவர்களை நான் வதைக்க முடியாது. என்னாலும் முடியாததைச் செய்ய – அதாவது என்னைவிடப் பெரியவனாக ஒருத்தன் வர வேண்டும்' என்றே இந்தப் பிள்ளையைப் படைத்தார். அப்புறம் ஞானபலமும் அவனுக்கே அதிகம் என்று காட்ட அவனிடமே உபதேசம் பெற்றுக் கொண்டார். 'எங்கேயும் தனக்கு வெற்றியைத்தான் விரும்ப வேண்டும். ஆனால் பிள்ளையிடத்தில் மட்டும் தோல்வியை விரும்ப வேண்டும்' (புத்ராத் இச்சேத் பராஜயம்) என்பார்கள். அதாவது ஒவ்வொரு பிதாவுக்கும் தன்னை விடத் தன் பிள்ளை நன்றாக இருக்க வேண்டும், புத்திசாலியாக இருக்க வேண்டும் என்று தான் இருக்கும். பரமேசுவரனுக்கே இப்படித் தான் இருந்திருக்கிறது. தானே அம்பாளோடு சேர்ந்து பிள்ளையாக வந்தான் என்றாலும் இப்போது வீரம், ஞானம், லாவண்யம் எல்லாவற்றிலும் முன்னைவிட அதிகமான பிரகாசத்தை எடுத்துக்கொண்டான்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திர
சேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய
சுவாமிகள்



# SOUTHERN ROADWAYS

# மூலனூரில் பொங்கல் பண்டிகை. மகிழ்ச்சி வெள்ளம் பொங்கிப் பெருகிடப் பங்கு கொண்டவர் யார் எனத் தெரியுமா?

# சதர்ன் ரோட்வேஸ்

பொங்கல் பண்டிகைக்கு தேவையான புத்தாடைகளோ, பழங்களோ, எண்ணெயோ, எதுவாயிருப்பினும் சதர்ன் ரோட்வேஸ் உங்களுக்காகச் சுமந்து சென்று சரியான நேரத்தில் அளித்து உங்கள் மகிழ்ச்சியில் பங்கு கொள்கிறது.

ஆம், இனிமையான உணர்வுகள்— பொங்கிவரும் பண்டிகை கோலா கலத்தில் பங்குகொண்டு மூலனூருக்கு பொங்கலுக்கானப் பார்சல்களை எடுத்துச் செல்வது, சதர்ன் ரோட்வேஸிற்கு ஒரு மங்களகரமான கடமை.

சதர்ன் ரோட்வேஸ் செல்லும் ஒரு சிறிய ஊர் மூலனூர் மட்டுமல்ல. தென்னிந்தியாவில் எங்கு இருப்பினும் சரி, எந்த ஒரு பார்சலாக இருப்பினும் சரி... சதர்ன் ரோட்வேஸ் எடுத்துச் சென்று அளித்திடக் காத்திருக்கின்றது.

இன்று, தென்னகத்தில் சதர்ன் ரோட்வேஸ் தமக்கெனச் சொந்தமாக 387 லாரிகளை வைத்திருக்கும் ஒரு முதன்மையான நிறுவனம் சராசரியாக ஒரு நாளைக்கு 39,478 பார்சல்களை எடுத்துச் செல்கிறது. இதன் வண்டிகள் தென்னிந்தியாவின் மூலை முடுக்கெல்லாம் 23,297 கி. மீட்டர்கள் பாதையில் 76,753 கி.மீட்டர்கள் ஓடி, 582 இடங்களை அடைகின்றன.

## டிவிஎஸ் வழியில் தீரம் மிக்க ஓட்டம்

சதர்ன் ரோட்வேஸின் சீரிய வளர்ச்சிக்கு முக்கியக் காரணம் எந்த ஒரு டிவிஎஸ் நிறுவனத்திலும் இயற்கையாகக் காணப்படும் சுறுசுறுப்பு மற்றும் புதுமை உணர்வுகளேயாகும்.

குறிப்பிட்ட நேரப்படி வண்டிகள் செல்வதற்கான கட்டுப்பாட்டிற்கு ஏற்ப கிளைகளுடன் டெலக்ஸ் மற்றும் கம்ப்யூட்டர் தொடர்பு வசதி.

உங்கள் பொருட்களின் அதிக பாதுகாப்பிற்காக ஒவ்வொரு அலுவலகத்திலும் கிடங்கு வசதி.

இத்துடன், தொடர்ச்சியான பல பாதுகாப்புச் சோதனைகள் கிளம்பும் இடத்திலும், சேரும் இடத்திலும் ஸ்டேஷன் மானேஜர்களால் செய்யப்படுகின்றன.

இவ்வளவுதானா? இல்லை, வண்டி, முழுவதும் நிரம்பி இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி சரியான நேரத்தில் கிளம்பிவிடும்.

இவைகளுக்கு மேல் ஏதேனும் தவறு நேர்ந்துவிட்டால் நஷ்ட ஈடுகள் துரிதமாகக் கொடுக்கப்பட்டு விடுகின்றன. சுருங்கச் சொன்னால், சதர்ன் ரோட்வேஸின் ஒவ்வொரு செயலும் நம்பகத் தன்மை மற்றும் சீரிய சேவைக்கு உறுதி அளிக்கின்றது. இவையனைத்திற்கும் பின்னணியில் இருப்பது சதர்ன் ரோட்வேஸின் தீவிர பயிற்சிபெற்ற, விசுவாசமிக்க 2116 ஊழியர்களின் பக்க பலம். பெறுபவர்க்கு மகிழ்ச்சியை அளிக்கும் பார்சலைக் கையாளுவதைக் காட்டிலும் மற்றுமோர் இனிய நினைவு எதுவும் இவர்களுக்குக் கிடையாது.




**சாலையில் இதைவிடச் சிறந்ததோர் மார்க்கமில்லை**




சதர்ன் ரோட்வேஸ் லிமிடெட், மதுரை.
கிளைகள் : சென்னை, பெங்களூர், கோயம்புத்தூர், சேலம், திருச்சி, திருநெல்வேலி, விஜயவாடா, செகந்திராபாத், அனந்தப்பூர், பாண்டிச்சேரி.

தற்செயலோ, சம்பிரதாயமோ — எமரால்டு
சூட்டிங்ஸ் மற்றும் ஷர்ட்டிங்ஸ் எழிலான தோற்றும்
வழங்குது கச்சிதமாய்.
வேறுபாடான விருப்பங்களுக்கேற்ப அழகிய சாயல்களின்
திறனுடன் பிளென்ட் செய்யப்பட்டது.





# தாவண்கெரே

எடுப்பான கலப்பழகுடன் மிடுக்கான பாணி அமைக்கிறது.

தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிட்.
ஹனுமந்தப்பா கட்டிடம்,
சித்ரா துர்கா ரோடு,
தாவண்கெரே-577 002.

ஷோ ரூம்கள்:
காவேரி பவன், பெங்களூர்-560 009.
தாஜிபன்பேட், ஹூப்ளி-580 020.
சித்ரா துர்கா ரோடு, தாவண்கெரே-577 002.

THOMAS/8301-B/TAM

கல்கி

இலவச இணைப்பு

KALKI 15.1.84



முருகன் அழகன்

வடபழனி
கும்பாபிஷேகத்தையொட்டிய
சிறப்பு மடல்

பொங்கும் இன்பம்
எங்கும் நிறைந்திட
செங்கரும்பாக
உள்ளம் இனித்திட
வாங்குவீர்
கோ-ஆப்டெக்ஸின்
புத்தாடைகளை..

சிறப்புத் தள்ளுபடி

**20%—**
**40%**

12-1-84 வரை



கோ-ஆப்டெக்ஸ்
கைத்தறி

DIPR/444/83/ELEGANT

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# 6 வாரங்களில் அற்புதம்

## கிளியர்•டோன் சிகப்பழகு சாதன க்ரீம், உங்களுக்கு அளித்திடும் புது ரூபம்.

முதல் வாரம்




மூன்றே நாட்களில் என் மேனி மிருதுவாகத் தொடங்கிவிட்டது.

2-ம் வாரம்



என் மேனியில் 'மெருகேறி'யிருக்கிறது என்கிறாள் என் தோழி.

3-ம் வாரம்



பழைய பருத் தழும்புகள் மறையத் தொடங்கி விட்டன. அப்பா! பெரிய விடுதலை!

4-ம் வாரம்



சொரசொரப்பான முழங்கைகள் கூட மிருதுவாகி விட்டன...மூன்றே வாரங்கள் கிளியர்•டோன் உபயோகித்ததில்.

5-ம் வாரம்



வெயிலில் போனாலும்கூட எப்படிக் கருக்காமல் இருக்கிறேன் என்பது பெரிய ஆச்சரியம்.

6-ம் வாரம்



நான் இப்பொழுது ஒரு **கிளியர்•டோன்** விசிறி. என் மேனியை சிகப்பழகுடன் வைத்திருக்க அது செய்திருக்கும் சாதனையைப் பாருங்கள்.

**கிளியர்.டோன்** இதன் ஈடில்லா, பார்முலா உங்கள் மேனியை மென்மையாக மெருகேற்றிச் சிவப்பாக்குகிறது. அது மட்டுமல்ல. **கிளியர்.டோனில்** உள்ள ஒரு தனிச் சிறப்புப் பொருள், அருவருப்பூட்டும் அந்த மாசு மறுக்களை அகற்றுகிறது. அதன் செழிப்பான ஈரச் சத்து, உங்கள் மேனிக்கு, ஆறே வாரங்களில், கண்கூடான புத்தழகு மென்மையும் பொலிவும் தருகிறது. மலர்ந்த அந்த அழகு தொடர்ந்து நீடிக்க, வீட்டினுள் இருந்தாலும் வெயிலில் சென்றாலும் தினம் இருமுறை தவறாது **கிளியர்.டோன்** உபயோகித்து வாருங்கள்.

பலநாட்டுலகிலும் புகழ்பெற்றது.

Clear·tone
the perfect fairness cream

உயரிய ஃபார்முலா
ஓங்கிய சக்தி

**கிளியர்•டோன்** சிகப்பழகு ரகசியம்— இயற்கையாய் உமக்கே

பாரிஸ் . லண்டன் . நியூயார்க்

daCunha/NICL/36/83 TM